# நிறைவான வாழ்வை அனுபவிக்க வழி காட்டுகிறது
# அனுபவ்




குடியிருக்க வசதியான அடுக்குமாடிக் கட்டிடம்... விடுமுறையை அனுபவிக்க 'டைம் ஷேர்' உல்லாச விடுதிகள்... வரி இல்லாத நீண்ட கால வருமானத்திற்கு பழத் தோப்புகள் மற்றும் தேக்கு மரக் காடுகள்... இப்படிப் பல சிறந்த பணிகளைத் திறமையோடும் கடமை உணர்வோடும் நிறைவேற்றி, பல்லாயிரக் கணக்கான வாடிக்கையாளர்களின் நம்பிக்கையையும் பாராட்டையும் பெற்றுள்ள 'அனுபவ் குரூப்'பின் நிதிநிறுவனமான 'அனுபவ் ஃபைனான்ஸ் & இன்வெஸ்ட்மென்ட்ஸ்' வழங்கும் இரு அருமையான சேமிப்புத் திட்டங்கள்:

## 'அனுபவ்' வைப்பு நிதித்திட்டம்

| | |
|---|---|
| மூன்றாண்டுகளுக்கு மேற்பட்ட வைப்பு நிதிகளுக்கு வட்டி | 24% |
| ஓர் ஆண்டுக்கு மேல் மூன்று ஆண்டுகளுக்கு வட்டி | 21% |
| 45 நாட்களுக்கு மேல் ஓர் ஆண்டுக்குட்பட்ட வைப்பு நிதிகளுக்கு வட்டி | 18% |

குறைந்தபட்ச டிபாசிட் ரூ. 10,000/- அதற்கு மேல் ரூ. 1000/- விதம்.

வட்டித்தொகை பின் தேதியிட்ட மாதாந்திர காசோலைகளாக முன் கூட்டியே அளிக்கப்படும்.

## 'அனுபவ்' பத்திரம்

குறைந்தபட்ச முதலீடு ரூ. 25,000/- அதற்கு மேல் ரூ. 5000/- விதம்.

3½ ஆண்டுகள் ஆனதும் முதலீடு செய்யப்பட்ட தொகை இரு மடங்காகத் திருப்பித் தரப்படும். முதலீடு ரூ. 25,000/- என்றால் மூன்றரை ஆண்டுகள் முடிந்தவுடன் கிடைப்பது ரூ. 50,000/-

## அனுபவ் பைனான்ஸ் அண்டு இன்வெஸ்ட்மெண்ட்ஸ்

அனுபவ் சென்டர் 11, சோமசுந்தரம் தெரு, தி. நகர், சென்னை - 600 017
போன்: 8254155/8282833/8283316/8282629 ஃபேக்ஸ்: 044-8284967

EFFICIENT

**'அனுபவ்' நிம்மதியான வாழ்க்கைக்கு நம்பகமான அடித்தளம்.**

| | | |
|---|---|---|
| கொச்சி XXXIX/ [illegible]-A, இரண்டாவது மாடி, சேர்மேன் சேம்பர்ஸ், [illegible] பள்ளி சாலை, எம். ஜி. ரோடு - 682 015. | சேலம் ஷிவா காம்ப்ளெக்ஸ், சாரதா கல்லூரி எதிரில், ஃபேர்லேண்ட்ஸ் - 636 016. | கோயமுத்தூர் 101-105, D.B. ரோடு, R.S. புரம் - 641 002. |

மே '94
பவ - வைகாசி

# அமுதசுரபி

எங்கள் தமிழ்மொழி எங்கள் தமிழ்மொழி
என்றென்றும் வாழியவே - பாரதியார்

மலர் : 47
இதழ் : 1

2 இனிய நண்பரை இழந்தேன்
- விக்கிரமன்

அறிவியல்

74 டினோசார் உலவிய காலங்கள்
- புஷ்பா தங்கதுரை

ஆன்மிகம்

3 பிரதிபலிப்பு
- கர்மயோகி

6 ஸ்ரீபரத்வாஜ் சுவாமி
மேதா தீட்சை

இலக்கியம்

25 தமிழில் தவறுகளை அறிவோம்
- டாக்டர் தி. முத்து கண்ணப்பர்

56 சங்கப் பலகை

இளைய அமுதம்

தயாரிப்பு : குண்டுமணி

51 பண்டிதரின் தந்திரம்
- ஜானகி மணாளன்

52 மழலைச் சந்தம்
- தம்பி சீனிவாசன்

53 சமுத்திர ராணி
(நாடோடிக் கதை)
வேண்டுதல் - ரா. பொன்ராசன்

54 எங்கள் ஊர்
- அமரர். அழ. வள்ளியப்பா

கலை

12 வீரா
- நாகராஜகுமார்

66 ஒலிப் பேழை
- அறந்தாங்கி சங்கர்

கவிதை

18 பெற்றவளே! நீ வாழி!
- தில்லை கூத்தரசன்

20 இன்றைய உலகம்
- ஏ.எஸ்.எம்.
மங்கையர் செல்வன்

24 பறவைகள்
- பொன்மணி

32 வாள் எங்கே?
- ஆர்.பி. சாரதி

58 உனக்கு மட்டும்
- உதயம் ராம்
நாங்கள் இந்தியர்கள்
- ஏ.எஸ்.எம்.
மங்கையர் செல்வன்
என் நிலை
- அ. விஜய சுந்தரம்

59 ஓர் அழைப்பு
- தமிழ் முகில்
கண்ணதாசன்
- மா. வரதராஜன்
தரமே நிரந்தரம்
- பாரதி சந்திரன்
காலம் வரும்
- கல்லங்கொல்லை ச. மோகன்

பாவை பக்கங்கள்

தயாரிப்பு : கிரிஜா ராகவன்

61 எண்ணிப் பார்க்கலாம்
பெண்ணே!

62 மங்கையர் மகிழ்ந்திட
மகத்தான சேவை
- பத்மா கோபால்

63 புதுமையான கோலப்போட்டி

64 குழந்தைகளுடன் நாம்
- ஜெயரோஜா

சிறுகதை

34 பிரசவத்திற்கு இலவசம்
- சரயு

39 மனமாற்றம்
- ஆர்யா தியாகராஜன்

44 அப்பாவுக்காக ஒரு திருட்டு
- வேதா கோபாலன்

சோதிடம்

67 உங்கள் ராசிபலன்
- வித்வான் வே. லட்சுமண

தொடர்கதை

7 சுங்காபுரிக் காவலன்
- விக்கிரமன்

27 தனி மரத் தோப்பு
- ராஜேந்திரகுமார்

வரலாறு

17 ஜே. கிருஷ்ணமூர்த்தி
- பி.எம்.எஸ். ராவ்

19 சென்னை நல்ல சென்னை
- டி.வி. ரங்கசாமி

21 வீர சாவர்கர்
- ரகமி

நாணயம்

77 உயில் ஏன் எழுத வேண்டு
- எஸ். இராஜரத்தினம்

78 ஸ்ரீசக்தி
- நாகு

79 இடும்பை இயல்பென்பான
- டாக்டர் கி. வேங்கட
சுப்பிரமணியம்

14 மனம் விட்டுப் பேசுவோம்
செய்திகள்

82 மருத்துவச் செய்திக

சிறப்புப் பகுதி I




○ பதிப்பாளர் : ஏ.வி.எஸ். ராஜா. ○ கௌரவ இலக்கிய ஆலோசகர் : என்.வி. சுப்பிரமணியன் ஐ.ஆர்.டி.எ
○ ஆசிரியர் : கலைமாமணி விக்கிரமன் ○ இதழ் ஆப்செட் அமைப்பு : சிவகுமார் ○ தனி இதழ் விலை ரூ
○ ஆண்டு சந்தா ரூ. 72/- ○ அட்டை வண்ணப்படம் : யோகா. கோடை வெயிலின் வெப்பத்தைத் தணி
கொள்ள ஐஸ்கிரீம் சாப்பிடும் நங்கையர் குமாரி ப்ரியா கோபால்ராவ், பேபி தேவி.



# இனிய நண்பரை இழந்தேன்

17.4.1994ஆம் நாளின் அதி காலைப் பொழுது. விடியும் பொழுதே தாங்கொணாத ஒரு சோகச் செய்தியைச் சுமந்து கொண்டு விடிந்தது!

அமெரிக்காவுக்குச் சென்றிருந்த - 'குமுதம்' இதழின் ஆசிரியர் திரு எஸ்.ஏ.பி. அண்ணாமலை அவர்கள் அமெரிக்க மண்ணிலேயே அமரராகி விட்டார் என்ற சோகச் செய்திதான் அது.

இந்தச் செய்தி எனக்கு கொரமாண்டல் விரைவு வண்டியில் நான் வந்து கொண்டிருந்தபோது கிடைத்தது. உடனே பறந்து சென்னைக்கு வந்துவிட மாட்டோமா என்று துடித்தேன். அருகில் இருந்த புகைப்படக் கலைஞர் 'யோகா' அவர்களிடம் எஸ்.ஏ.பி. யுடன் நான் பழகிய போது ஏற்பட்ட இனிய நினைவுகளைப் பகிர்ந்து கொண்டேன்.

எழுத்தின்பால் மிகுந்த ஈடுபாடு கொண்டு, 'குமுதம்' இதழை வாரந்தோறும் புதிய புதிய பகுதிகளுடன் வெளிவரச் செய்து கொண்டிருந்த சக பத்திரிகையாசிரியர் என்ற எல்லைகளுக்கெல்லாம் அப்பாற்பட்டு -

1950ஆம் ஆண்டு முதலே மலர்ந்த இலக்கிய நட்புறவு மிக்க இனிய நண்பர் என்ற முறையில் கடந்த நாள்களை எண்ணிப் பார்க்கிறேன்.

எழுத்தாளர் சங்கப் பணிகளில் அவரோடு நான் தோளோடு தோள் நின்று ஒத்துழைத்தது -

எழுத்துலக மன்னர் என்று போற்றப்பட்ட அமரர் சாண்டில்யன் அவர்களை முதன் முதலில் எஸ்.ஏ.பி. அவர்களின் இல்லத்திற்கு நான் அழைத்துச் சென்று அறிமுகப்படுத்தியது -

சாண்டில்யன் அவர்களது மறைவிற்குப் பின்னர் அவரது பாணியிலேயே 'சீனத்துப் பைங்கிளி' தொடர்கதையை 'குமுதம்' இதழில் எழுதுமாறு எஸ்.ஏ.பி. அவர்கள் என்னிடம் ஒப்படைத்தது -

போன்ற பல்வேறு நிகழ்வுகள் மனக்கண் முன் தோன்றித் துயரில் ஆழ்த்துகின்றன.

'அமுதசுரபி' இதழ் தொடங்கப்படுவதற்கு ஆறு மாதங்களுக்கு முன்பு குமுதம் இதழ் தோன்றியது. நாடு விடுதலையடைந்தவுடன், பத்திரிகைகள் தொடங்க இருந்த தடைகள் நீக்கப்பட்டவுடன் நூற்றுக்கணக்கில் பல்வேறு சுவையுள்ள இதழ்கள் தோன்றின. (அவற்றுள் இன்று வரை நிலைத்து இருப்பவை அமுதசுரபி, மஞ்சரி, அம்புலிமாமா, பேசும்படம் ஆகிய இதழ்கள்தாம்)

'குமுதம்' இதழின் வெற்றிக்கு எஸ்.ஏ.பி. தன் உடல், பொருள் தந்தார். இப்போது ஆவியையும் தந்து விட்டார்.

அமரர் 'கல்கி' தலைமையில் எழுத்தாளர் சங்கம் தொடங்கிய போது, நடந்த முதல் மாநாட்டில் திரு எஸ்.ஏ.பி. அவர்கள் கலை நிகழ்ச்சிப் பொறுப்பை ஏற்றிருந்தார். அவர் பணி வெற்றியடைய அவரோடு 'மகரம்' அப்துல் வகாப், ஆகியோருடன் நானும் உழைத்த நாள்கள் இன்னும் பசுமையாக நினைவில் இருக்கின்றன.

எழுத்தாளர் சங்கத்தில் 'கல்கி' தலைவராக இருந்தபோது திரு சந்திரசேகரன் அவர்களுக்கும் திரு ப. கோதண்டராமன் அவர்களுக்கும் சிறு பிணக்கு. அந்தப் போதில் திரு எஸ்.ஏ.பி. அவர்கள் சங்கத்தை நிலைநாட்ட எடுத்துக் கொண்ட முயற்சி மறக்கமுடியாத ஒன்று. (ஹரிகேன் விளக்கை எஸ்.ஏ.பி. உதாரணம் காட்டிய நிகழ்ச்சிகளைப் பிறகு விவரிக்கிறேன்)

நான் அன்புடன் அழைக்கும் இலக்கியக் கூட்டங்களுக்குத் தவறாமல் வருவார். கூட்டங்களுக்கு வருவதால் நேரம் வீணே செலவாகிறது என்பதை உணர்ந்த பிறகு பொது நிகழ்ச்சிகளில் கலந்து கொள்வதையே நிறுத்திக் கொண்டார். (அப்படி அவர் நிறுத்திக் கொள்ளக் காரணமான - என் சம்பந்தப்பட்ட நிகழ்ச்சியைப் பிறகு விவரிக்கிறேன்)

எண்ணற்ற தமிழ் எழுத்தாள நெஞ்சங்களின் சார்பிலும் என் தனிப்பட்ட முறையிலும் ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்வதுடன், அவரது பிரிவால் துயருறும் அவர்தம் குடும்பத்தார், 'குமுதம்' ஆசிரியர் குழு அனைவர்க்கும், பதிப்பாளர் திரு பி.வி. பார்த்தசாரதி அவர்களுக்கும் ஆறுதலைக்கூறி, அவரது ஆன்மா அமைதியுற இறையருளை வேண்டுகிறேன்.

— விக்கிரமன்

# பிரதிபலிப்பு

## கர்மயோகி

மனிதர்களுக்குள்ளும், நிகழ்ச்சிகட்குள்ளும், பொருள்களுக்குள்ளும் தொடர்புண்டு. ஏதோ ஒரு சமயம்தான் நாம் அதைக் கவனிக்கின்றோம்; பெரும்பாலும் கவனிப்பதில்லை.

பாங்கியில் கடன் கேட்டால், கேட்பதைவிடக் குறைவாகக் கொடுப்பார்கள். பாங்க் ஆதரவாக இருந்து ஒரு இலட்ச ரூபாய் கொடுக்க முன் வந்தால் நம்மை ஒன்றேகால் லட்சத்திற்கு விண்ணப்பம் போடச் சொல்வார்கள். ஏனெனில் கேட்பதைவிடக் குறைவாகக் கொடுப்பது அவர்கள் பழக்கம். ஒரு பக்தர் எந்த பாங்குக்குப் போனாலும் கேட்பதைவிட அதிகமாகக் கொடுத்தார்கள். அத்துடன் அவர் கேட்காததையும் கேட்கச் சொன்னார்கள். அவருக்கு எது எது தேவையோ அவற்றையெல்லாம் கேட்கச் சொல்வார்கள். அது அவருக்குக் கொஞ்சநாள் புரியாமல் இருந்தது. பிறகு அன்னையைப் பற்றி அதிகமாகத் தெரிந்து கொண்ட பொழுது வாழ்வின் நிகழ்ச்சிகட்கு இடையேயுள்ள தொடர்பை அவர் அறிந்தார். இந்தக் கண்ணோட்டத்தில் அவர் தன் வாழ்வைப் பரிசோதனை செய்த பொழுது, தன் தொழிலில் தன்னிடம் வருபவர்கட்கு தனக்குக் கடமையில்லாத இடங்களிலும், அவர்கட்குத் தேவையானதைத் தன்னால் முடிந்தவரை செய்வதுண்டு. அதன் பிரதிபலிப்பாக பாங்க் அதுபோன்று செயல்படுவதாக அவர் புரிந்து கொண்டார்.

நாற்பது வயதுவரை எந்த வேலையும் செய்யாதவருக்கு வாழ்க்கை அவர் விருப்பப்படியே அமைந்தது. அதுவே நியாயம் என அவர் நினைத்தார். அவரை சுவரில் மாட்டியுள்ள கடிகாரத்திற்குச் சாவி கொடுக்கச் சொன்னார்கள். அவரே வாராவாரம் கடிகாரத்திற்கு சாவி கொடுப்பதாகச் சொல்லி, தானே அந்த வேலையை ஒப்புக் கொண்டார். மனதில் வெறுப்பும் எரிச்சலும் எழுந்தது. அந்த வேலையும் செய்ய அவருக்கு மனமில்லை. ஒரு வருஷம் ஓடியது. பின்னர் ஒவ்வொரு வாரமும் கடிகாரத்திற்குச் சாவி கொடுக்கும் பொழுது அவருக்கு அபார எரிச்சல் வரும். தன்னை வாழ்க்கை கொடுமைப்படுத்துவதாக நினைத்தார். தானே ஏற்றுக் கொண்டதால், விடவும் முடியவில்லை; செய்யவும் பிடிக்கவில்லை. கடிகாரம் 3 ஆம் நாள், 4 ஆம் நாள் நிற்கத் தொடங்கிற்று. அதற்கு சாவி கொடுக்க, அவருக்கு எரிச்சல் அதிகமாயிற்று. நின்றால் அதை மீண்டும் ஓட்ட வேண்டும். கடிகாரம் தினமும் நிற்கத் தொடங்கிற்று. எரிச்சல் அபரிமிதமாயிற்று. கடிகாரத்தை சுத்தம் செய்யக் கடையில் கொடுத்தார். ஒரு வாரம் நன்றாக ஓடிற்று. மீண்டும் நிற்கத் தொடங்கிற்று.

வேறொருவர் தான் சாவி கொடுக்கும் பொறுப்பை ஏற்றுக் கொள்வதாகச் சொன்னார். அகிலிருந்து கடிகாரம் நிற்பதை நிறுத்திவிட்டது! அவரும் அந்த இடத்தை விட்டுப் போய்விட்டார். எப்பொழுதோ ஒருநாள் கடிகாரம் நின்றுவிட்டால், அன்று அவர் அங்கு வருவார். இந்தத் தொடர்பைக் கவனித்தவர்கட்கெல்லாம் வியப்பு. வருடம் இரண்டாயிற்று. ஒருநாள் அந்தக் கடிகாரம் நின்றது. சாவி கொடுத்தனர். ஓடி மீண்டும் நின்றது. ஒருவேளை அவர் இன்று வருவாரோ என நினைத்தார் சாவி கொடுத்தவர். அன்று மாலை அவர் வந்தார். பொருள்களை நாம் கையாண்டால் நமக்கும் அவற்றிற்கும் தொடர்பு வரும். நம் எண்ணங்களை அவை பிரதிபலிக்கும். பிரதிபலிக்கும் வகை நமக்கு அனுபவமூட்டுகின்ற வகையாக அமையும்.

ஒரு புத்தகம் வெளியிட்டவர் அதன் இரு பிரதிகளை நண்பருக்குப் பரிசாகக் கொடுத்தார். நண்பர், புத்தகத்தை வாங்கியவர், படிக்கத் தொடங்கும் முன் வயிறு தொந்தரவு செய்ததால் எழுந்து போய்விட்டார். அன்று மாலை மீண்டும் புத்தகத்தை எடுத்தார். வயிறு மீண்டும் தொந்தரவு செய்தது. புத்தகத்தை வைத்துவிட்டு மருந்தைத் தேடிப் போனார். மறுநாள் தன்னைச் சந்திக்க வந்தவருக்கு அதைப் பரிசாகக் கொடுத்தார். ஒருவாரம் கழித்து அப்புத்தகத்தைப் பற்றிய பேச்சு எழுந்த பொழுது, "நான் அதைப் படிக்க முயன்றேன். ஒத்து வரவில்லை. எனக்கு அப்புத்தகத்தைப் பற்றிச் சொல்ல ஒன்றுமில்லை" என்று சொல்லி அவர், வந்தவரிடம் குறிப்பிட்டார். வந்தவர், "அப்புத்தகத்தைத் தமிழில் மொழி பெயர்த்தவர் என் நண்பர். அவருக்கு வாரத்தில் இரு முறை வயிற்றுப் போக்குண்டு" என்ற பொழுதுதான் தன் தொந்தரவின் காரணம் அவருக்குப் புரிந்தது. வியாதி – தண்ணீர், காற்று மூலம் தொத்துவதுபோல் சூட்சுமமாக உணர்வாலும் தொத்திவிடும் என அன்னை கூறுகிறார்.

ஒருவர் மூன்று சொத்துகளை வாங்கினார். முதல் சொத்தை விற்றவருக்கு கடன்கார முதலியார் எனப் பெயர். அடுத்த சொத்தை விற்றவர் தான



திவாலானதால் விற்றார். மூன்றாம் சொத்து ஒரு செல்வருடையது. பத்து வருஷம் கழித்து இவரை, "நீங்கள் வாங்கிய சொத்துகள் எப்படி பலன் தருகின்றன?" என்றொருவர் கேட்டபொழுது, "முதல் சொத்து செழிப்பாக இருக்கிறது. அதன்மீது ஏராளமான கடன், அடுத்ததில் என்ன செய்தாலும் முதல் அழிகிறது. கடைசி சொத்துதான் இதுவரை வந்த பலனைத் தருகிறது" என்று இவர் கூறிய பொழுதுதான் தான் யாரிடமிருந்து வாங்கினோம் என்பதும் கூடவே நினைவு வந்தது.

கணவருக்கு பெரிய சம்பளம் பெரிய ஊரில் வந்தது. அங்கே குவார்ட்டர்ஸ் உண்டு. இவருக்குக் கிடைக்கவில்லை. அன்னைக்குத் தீவிரமாகச் செய்த பிரார்த்தனைகளுக்கு வேறு இடங்களில் பலனிருக்கிறது. குவார்ட்டர்ஸ் மட்டும் அமையவில்லை. பெண் தனக்கும் 'வீட்'டிற்கும் உள்ள தொடர்புகளை நினைத்துப் பார்த்த பொழுது, சிறுவயதில் அறியாமல் பேசிய செயல் நினைவுக்கு வந்து சிரித்தாள். தானும், தம்பிகளும் மணல் வீடு கட்டி விளையாடிய பொழுது தம்பிகளிடம் 'ஆளுக்கொரு வீடு' கொடுப்பாள். அத்துடன், "உங்களுக்கெல்லாம் இந்த வீடுதான். அம்மா கட்டும் வீடு எனக்கு" என்பாள். இது விளையாட்டான விஷயம். இதில் முக்கியமில்லை என நினைத்தவள், தன் மனமும் அதே போலிருப்பதைக் கண்டு, அன்று கூறிய உணர்வை மாற்றத் தீர்மானித்தாள். அன்று மாலை அன்னை முன் உட்கார்ந்து மாற்றியும் விட்டாள். குவார்ட்டர்ஸ் கிடைத்தது என எழுதியிருந்தாள்.

அன்னை ஒரு சாதகரை வாரம் இருமுறை சந்திப்பதுண்டு. பல சமயம் அவரைச் சந்திக்கும் பொழுது அன்னைக்கு உடல்நலமில்லாமல், வந்த காரியம் குறையாக நிற்பதால் சாதகர் வருத்தப் பட்டார். அத்துடன் தனக்கு (out of sorts) மனம் திருப்தியில்லை எனவும் கூறியவர், அன்னைக்கு உடல் நலமில்லாவிட்டால் தன் மனம் பாதிக்கப் படுவதாய்ச் சொன்னார். அன்னை சிரித்து, 'குழந்தாய்' எனக் கூப்பிட்டு, "உண்மையில் உன் குணம் பாதிக்கப்படுவதால், என் உடல் நிலை கெடுகிறது" என்று விளக்கம் அளித்தார்.

சொந்த முயற்சியில் பெரிய ஸ்தாபனத்தை ஏற்படுத்தி அது சேவை செய்து பிரபலமான பொழுது அதன் ஸ்தாபகருக்கு விநோதமான யோசனை தோன்றியது. மேல் நாட்டில் தன் கல்லறை மீது என்ன பொறிக்க வேண்டும் என்று எழுதிக் கொடுக்கும் பழக்கம் உண்டு. அவருடைய மதத்தில் கல்லறைக்கு முக்கியத்துவம் உண்டு. இவர் சொந்தமான முயற்சியால் ஸ்தாபனம் ஏற்படுத்தினாலும், ஓர் அகில இந்திய ஸ்தாபனத்தைச் சேர்ந்த இவர், தனக்குக் கல்லறை கட்டினார்! அடுத்த ஆண்டு இவருடைய பிரபலத்தைக் கண்டு பொறாமைப்பட்ட மேலிடம், இவரை, இவர் ஸ்தாபித்த இடத்திலிருந்து மாற்றி .ஒரு குக் கிராமத்தில் போட்டுவிட்டது. தனக்குக் கட்டிய கல்லறை, உத்தியோகத்திற்குக் கல்லறையாகி விட்டது.

சென்னையில் வேலை செய்தவர் புதுவைக்கு சமாதி தரிசனத்திற்கு வந்து கொண்டிருந்தார். ஒருமுறை அதுபோல் வந்த பொழுது, சேவையாக வேலை கிடைத்தது. உடனே தன் பழைய அலுவலகத்துக்குப் போய் இராஜினாமா செய்துவிட்டு புதிய வேலையில் சேர ஆயத்தமான பொழுது பழைய மானேஜர் அவருக்கு புத்திமதி சொல்லி, "தீபாவளி அடுத்த மாதம்; அப்பொழுது போனஸ் உண்டு. ஒரு மாதம் கழித்து இராஜினாமா செய்தால் போனஸ் வரும், அடுத்த மாதம் புதிய வேலையில் சேருவது உசிதம், தீபாவளிக்கு முன்னால் தானே இராஜினாமா செய்தவருக்கு நமது கம்பெனியில் போனஸ் கொடுப்பது வழக்கமல்ல" என்றார். பக்தர் தன் மனதைச் சோதனை செய்தார்.

'புதிய வேலைக்கு அவசரமில்லை . எப்பொழுதும் போய்ச் சேரலாம். மானேஜர் சொல்வது சரி. போனஸை இழப்பது புத்திசாலித்தனமல்ல' என்று மனதில் பட்டது. அத்துடன் 'நான் அன்னையிடம் போகிறேன். அவசரப்படக் கூடாது என்பது சரி. தாமதம் செய்யக்கூடாது என்பதும் சரியல்லவா? நான் கேட்காமல் வந்த வேலை இது. 'அன்னைக்கு எது சரியோ அதையே செய்வோம்' என்ற பொழுது, 'இராஜினாமா கொடுக்கும் பொழுதே போனஸ் கொடுக்க வேண்டும் என ஒரு வேண்டுகோள் வைக்கலாம்' எனத் தோன்றிற்று. அதையும் மனதால் மறுத்து, நாம் எதையும் கேட்கக் கூடாது என்று புதிய வேலையில் சேர்ந்துவிட்டார். புதுவை வந்த பிறகு பழைய நிலைமை நினைவுக்கு வரவில்லை. கடைசி மாத சம்பள பாக்கியை மீண்டும் சென்னை வந்தால் பெறலாம் என இருந்துவிட்டார். அதுபோல் போன சமயம் முதலாளி அவரைக் கூப்பிட்டு சம்பளபாக்கியுடன் போனஸும் கொடுத்து, "நீங்கள் உயர்ந்த இடத்திற்குப் போகிறீர்கள். அவ்விஷயத்தில் எங்கள் சட்டதிட்டங்களை நடைமுறைப்படுத்த நான் விருப்பப்படவில்லை" என்றார். அவர் செயல் பக்தரின் மனத்தைப் பிரதிபலிப்பதைக் காண்கிறோம். இந்தச் சட்டம் நமக்குப் புரிந்தால், பிறர் நம்மிடம் எப்படி நடக்க வேண்டுமென எதிர்பார்க்கிறோமோ, அதற்குரிய மனநிலையை நாம் ஏற்றுக் கொள்ள வேண்டும்.

20 லட்ச ரூபாயில் தொழில் நடத்தி இரண்டு லட்சம் லாபம் பெறுபவர், தன் தொழிலை ஒரு கோடிக்கு உயர்த்த விரும்பி, அதற்குரிய ஆலோசனையை நாடினார். ஆரம்ப நிலை ஏற்பாடுகள் முடிந்தன. பரஸ்பரம் செய்ய வேண்டியவற்றை நிர்ணயித்தபின் ஆலோசகர் தொழில் நிலையத்திற்கு வந்தார். தினமும் ரூபாய் 6000த்துக்கு உற்பத்தியாகி விற்பனையாகிறது. முதலாளி பரம்பரையாக இத் தொழிலை நடத்துபவர். சுமார் 18 தொழில்களை நிறுவியவர். தொழில் நுணுக்கங்கள் அவருக்குக் கனவிலும் மனப்பாடம். தொழில் நுணுக்கத்தில் தலை சிறந்தவராக விளங்கினார்.

ஆலோசகர் உற்பத்தியைப் பார்த்து விட்டு '6000 ரூபாயில் தினமும் 200 அல்லது 300 ரூபாய் மிச்சம் செய்யலாம்' என நினைத்தார். முதலாளி, "உற்பத்தியைப் பற்றிப் பேச வேண்டாம், மார்க்கெட் கொள்முதல் போன்ற மற்ற விஷயங்களைப் பற்றிப் பேசலாம்" என்றார். "உற்பத்தியில் நான் நிபுணன்.

அதில் மேலும் திறமையை உயர்த்த முடியாது" என்றார். ஆலோசகர் கண்ணில் பட்டவற்றைச் சொல்லவும் இடம் கொடுக்க மாட்டேன் என்கிறார். தினசரி 300 ரூபாய் என்றால் வருஷத்தில் ஒரு இலட்சமாகும். அது இன்றைய இலாபத்தில் பாதி. அதை உயர்த்த முதலாளியின் மனமும், மரியாதையும் இடம் தரவில்லை. எனவே ஆலோசகர் தயங்கி தினமும் 100 ரூபாய் மிச்சப்படுத்தலாம் என்றார். முதலாளி வேறு பேச்சுக்குப் போய்விட்டார். அத்துடன் ஆலோசகர் போய்விட்டார்.

வீட்டுக்குப் போய் யோசனை செய்தார். 'இந்த முதலாளி திறமையுள்ளவர் என்பது உண்மை. ஆனால் இலட்ச ரூபாய் மிச்சம் செய்யலாம் என்பதைப் பேசவே இடம் கொடுக்க மாட்டேன் என்கிறாரே, இதற்கு அன்னைவழி ஏதாவது உண்டா' என்று தன்னையே கேட்டுக்கொண்டு சில நாள் செய்த ஆத்ம சோதனையில் விஷயம் புரிந்தது. லேசாக தனக்குத்தானே சிரித்துக் கொண்டார். இது என் குணம், எனக்கு விவரம் தெரிந்த இடத்தில் எவர் சொல்வதையும் கேட்டுக் கொள்ள மாட்டேன், பேசவே இடம் கொடுக்க மாட்டேன், அவர் அதையே செய்கிறார். ஒருவேளை நான் மனம் மாறினால் அவரும் மாறுவாரோ தெரியவில்லை என்று புதிய முடிவுக்கு வந்தார்.

அடுத்த வாரம் அதே முதலாளி வரச் சொல்லி எழுதியிருந்தார். போனவுடன் முதல் வார்த்தையாக "என் உற்பத்தி மேனேஜர் (Production Manager) போய்விட்டார். நானே போய் உற்பத்தியைப் பார்க்க வேண்டியிருக்கிறது. நீங்கள் சொன்னபடி மிச்சம் பிடிக்க வழியுண்டா எனப் பார்த்தேன். தினமும் 1000 ரூ மிச்சமாகிறது. ஒரு நாள் 1200ம் ஆயிற்று. நாம் மற்ற விஷயங்களைப் பற்றிப் பேசுவோம்" என்றார்.

கிராமத்து சாதகர் சமாதியில் உட்கார்ந்த நேரம், சாராய வாடை வந்தது. அத்துடன் அந்த வாடை சமாதியில் இருந்து விலகிப் போவதாகத் தோன்றிற்று. சமாதிக்கும், சாராயத்திற்கும் உறவு தெரியவில்லை. மீண்டும் கிராமத்திற்குப் போன பொழுது கிராமத்தில் கூட்டம் போட்டு இனி எவரும் குடிப்பதில்லை என முடிவு செய்ததாகக் கேள்விப்பட்டார். கிராமத்தை விட்டுப் போன சாராயம் தன்னை சமாதியருகில் இருந்து விட்டுப் பெயர்ந்ததாகத் தெரிந்திருப்பதாக அறிந்தார்.

ஒரு பக்தருக்கு வந்த கடிதம் சற்று கிறுக்காக இருந்தது. அவர் புறக்கணித்தார். அடுத்த வாரம் அவனே அதுபோன்ற அடுத்த கடிதம் எழுதவே, இதற்கு முற்றுப்புள்ளி வைக்க வேண்டும் என அவர் கடிதத்தை எரித்துவிட்டார். மறுநாள் காலையில் அவர் துணிமணிகள் வைத்திருந்த இடத்தில் இருந்து புகை வந்தது. போய்ப் பார்த்தால் சாம்பிராணிக் கல் ஒன்று தூபம் போட்ட பொழுது விழுந்து துணி பற்றிக் கொண்டது தெரிந்தது. அழகாக ஒருவர் கடிதம் எழுதவில்லை எனில், பதில் அழகாக எழுத வேண்டும், அல்லது நம்முள் எது அக்கடிதத்தை வரவழைத்தது என ஆராய வேண்டும். இவர் கொளுத்தினார். துணி பற்றிக் கொண்டது.

ஒரு வியாபாரிக்கு சாதகமான மார்க்கெட், சரக்கு கிடைத்தால் போதும் என விற்கிறது. ஒரு பெட்டியில் 12 சிறு டப்பாக்களில் வைத்து அனுப்புவது வழக்கம். ஒரு பெட்டி விலையை 1 டப்பாவுக்கு வைத்து விற்றார். பெரும் இலாபம் வந்தது. சட்டம் மாறியது. வரி போட்டார்கள். ஒரு பெட்டிக்குப் போட வேண்டிய வரியை அதிகாரி வாய் தவறி 1 டப்பாவுக்கு என்றார். சர்க்கார் உத்தரவு போட்டது. இந்த வியாபாரிக்குப் பெரும் நஷ்டம். தான் செய்த வேலையே தனக்குப் பலன் தருகிறது. சர்க்கார் தண்டிக்கவில்லை என இவர் அறிய முடியுமா?

ஒரு நல்ல மனிதர். தேசியவாதி. இலட்சியவாதி. பெரிய பட்டத்தை, நாட்டில் வேலையே இல்லாத சமயத்தில் பெற்று 10 வருஷம் வேலையில்லாமல் இருந்து, ஆசிரியர் பயிற்சி பெற்று, தங்கப் பதக்கம் பெற்று வெளிவந்து பெரிய உத்தியோகம் கிடைத்தது. அந்த பிரபல ஸ்தாபனத்தை உயர்த்த, சீர்திருத்த எடுத்த முயற்சிகள், ஜூனியராக இருந்த இவரைத் தலைமை ஸ்தாபனத்திற்கு அடுத்த செல்வாக்குக்கு உயர்த்திற்று. இந்த ஸ்தாபனத்தை முன்னேற்ற வேண்டும் என இலட்சியம் கொண்ட சிறுவன் இவரை அணுகி வந்து, இவருடனேயே இருந்து, அதற்குண்டான வழியெல்லாம் சொல்லி, அவர் செய்தார். பெரியவரும், சிறுவனும் இணைபிரியாதவர்கள். அவர் பெற்றது பெரும் பலன். அத்தனையும் சிறுவன் கூறியதால் நடந்தவை. இரண்டாண்டுகளுக்குப் பின் சிறுவனுக்கு அந்த ஸ்தாபனத்தில் ஓர் உதவி தேவைப்பட்டது. அவன் இவரைக் கேட்கவில்லை. அவன் கேட்டால் என்ன செய்வது என்று முன் ஜாக்கிரதையாக பெரியவர் இருந்துவிட்டார்.

சிறுவன் கேட்பவனில்லை; பெரியவர் கேட்காமல் கொடுப்பவரில்லை.

பெரியவர் செய்த புரட்சிகரமான மாறுதல்கள் இலட்சியமானவை. 10 ஆண்டு வேலையில்லாமல் பிறகு கிடைத்த பெரிய வேலை. அதற்கு ஆபத்து. போய்விட்டது. உயிருக்கும் ஆபத்து. இலட்சியத்திற்காக வீரனாக நின்றார். போராட்டம் தொடர்ந்து 12 ஆண்டு நடந்தது. மானேஜ்மெண்ட் பெருந்தன்மையாக இவரை எதிரியாகக் கருதியதை மாற்றி (Governing board) நிர்வாகத்தில் மெம்பராக ஏற்றுக் கொள்ளத் தீர்மானித்தது. அப்பொழுது இவருடனிருந்த ஒருவர் எந்தத் தியாகமும் செய்யாமல் இவருடைய தியாகத்தின் பலனை மட்டும் அனுபவித்தவர். "நான் அந்தப் பதவியை அனைவர் சார்பிலும் ஏற்கிறேன்" என்று கேட்டார். இலட்சியவாதி ஒத்துக் கொண்டார். கடைசிவரை இலட்சிய வாதிக்கு எதுவுமில்லை என்ற நிலை ஊர்ஜிதமாயிற்று. அன்று எப்படி இவர் சாதுரியமாக சிறுவனிடமிருந்து விலகினாரோ, அதேபோல இன்று பலனும் இவரிமிருந்து சாதுர்யமாக விலகியது.

அக உணர்வு புற நிகழ்ச்சிகளால் பிரதிபலிக்கப் படுகிறது.

புறநிகழ்ச்சிகளை நிர்ணயிக்க அகவுணர்வை மாற்றவேண்டும்.



★ சென்னை அம்பத்தூர் பரத்வாஜ் ஆசிரமத்தில் ஸ்ரீமத் புவனேஸ்வரி ஸ்வாமிகள் ஸ்ரீபரத்வாஜ் சுவாமிகளுக்கு தீட்சையளித்தபோது எடுத்த படம்.

# ஸ்ரீபரத்வாஜ் சுவாமிக்கு மேதா தீட்சை

சென்னை அம்பத்தூர் நெற்குன்றம் சாலையில் உள்ள கள்ளிக்குப்பத்தில் ஸ்ரீபரத்வாஜ் ஆசிரமம் உள்ளது. சக்தி வழிபாடும் ஆன்மிக நெறியும் பரப்பி வரும் இந்த இடம் ஸ்ரீயோக மாயா புவனேஸ்வரி பீடமாகும். ஆதிசங்கரர் வழியாக இது தொடர்ந்து குரு பரம்பரையாக இருந்து வருகிறது. காமகோடி பீடம், சிருங்கேரி பீடம் போன்று பூஜைகளும், ஆராதனைகளும், சமுதாயப் பணிகளும் நடந்து வருகின்றன. இப்பீடத்திற்குப் பீடாதிபதியாகப் பரமஹம்ஸ ஸ்ரீமத் புவனேஸ்வரி ஸ்வாமிகள் இருக்கிறார். பழுத்த சக்தி உபாசகரான இவர் தனது வாரிசாக தனது புதல்வர் ஸ்ரீராம கிருஷ்ண பரத்வாஜருக்கு மேதா தீட்சை என்றழைக்கப்படுகிற தீட்சையை அளித்து சக்தி வழிபாட்டுக்கும் ஆசிரம வாரிசுக்கும் தயார் படுத்தியுள்ளார்.

அம்மனின் உத்தரவின் பேரில் சமீபத்தில் தனது புதல்வரை அழைத்து தலையை முண்டிதம் செய்து பூர்ணாபிஷேகம் என்பதான ஞான ஸ்நானத்தை பரத்வாஜ் ஸ்வாமிகள் தலையில் அபிஷேகம் செய்து, தான் நெடுங்காலமாக ஜபம் செய்து வரும் யோக தண்டம் என்றழைக்கப்படுகிற வெள்ளித் தண்டத்தை பரத்வாஜ் உடம்பில் வைத்து தீட்சையளித்தார். அப்போது ஸ்ரீபுவனேஸ்வரி ஸ்வாமிகளின் வெள்ளிப் பாது கையை பரத்வாஜ் தலையில் வைத்திருந்தார். பரத்வாஜ், கல்லூரிப் படிப்பை முடித்தவர். 33 வயதான இவர் ஏழு வயதிலிருந்து தந்தையிடம் வேதம், ஜோதிடம், மூலிகை வைத்தியம் அனைத்தையும் கற்றவர். தனது தந்தையிடம் 'ஸ்ரீவித்யை' மந்திர உபதேசம் பெற்று ஒரு கோடி முறை பால தேவி மந்திரத்தை ஜபித்தவர். தீட்சைக்கு முன் ஸ்ரீபுவனேஸ்வரி ஸ்வாமிகளுக்குப் பாதபூஜையை ஸ்ரீபரத்வாஜ் ஸ்வாமிகள் நடத்தினார்.

ஸ்ரீபரத்வாஜ் ஸ்வாமிகள் ஆன்மிக சொற்பொழிவினை மலேசியா மற்றும் இந்தியாவில் பல்வேறு இடங்களில் தனது தந்தையுடன் நடத்தியவர். ஆயிரக்கணக்கில் உலக நலன்கருதி யாகங்களை நடத்தியவராவார்.

# எழுத்தாளர்களுக்குக் காஞ்சிப் பெரியவர் வழங்கிய பரிசு

ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடம் ஜகத்குரு ஸ்ரீமஹா சுவாமிகளின் நூற்றாண்டு விழாவையொட்டி நடத்தப் பெற்ற பேராசிரியர்கள், புலவர்களுக்கான ஆய்வுக் கட்டுரைப் போட்டியில் தேர்வு பெற்றவர்களுக்குப் பரிசளித்தும், தமிழ் எழுத்தாளர்களைப் பாராட்டியும் ஜகத்குரு ஸ்ரீ ஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள், அருள் முன்னிலையில் காஞ்சிபுரம் ஸ்ரீமடத்தில் நடந்த விழாவில் புலவர் பு.மா. ஜயசெந்தில் நாதன் வரவேற்புரை நிகழ்த்தினார்.

ஸ்ரீகாஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீஜயேந்திர சரஸ்வதி சுவாமிகள் ஆசியுரை வழங்கினார்,

டாக்டர் முத்து கண்ணப்பர், நா. இராமச்சந்திரன், வானதி திருநாவுக்கரசு, ஜயரதன், நீலவன் ஆகிய எழுத்தாளர்கள் பாராட்டப் பட்டனர்.

'கலைமாமணி' விக்கிரமன் எழுத்தாளர்களை அறிமுகம் செய்து வைத்துப் பேசினார்,

அனைவருக்கும் ,சால்வையையும், துளசிமணிமாலையையும, ஸ்ரீசங்கராச்சார்யார் விருப்பப்படி, விக்கிரமன் அணிவித்தார். ஒவ்வொருவருக்கும் ஒரு பொற்கிழியும் வழங்கப்பட்டது.

# கங்காபுரிக் காவலன்

## 11. பெயரும் புகழும்

பெரிய கோயில் கட்டப்படும் பகுதி, சில நாள்களுக்கு முன்பு அடர்ந்த கானகப் பகுதி. கண்ணுக்கு எட்டிய தொலைவு வரையில் வெட்ட வெளியாகத் தென்பட்டது. அடர்ந்த மரங்களும், செடி கொடிகளும் புதர்களுமாக இருந்த இடத்தில் பாறைகள் கொண்டு குவிக்கப்பட்டிருந்தன.

ஒருபுறம் கோயில் திருப்பணி நடந்து கொண்டிருந்தது. ஒரு பக்கம் மாளிகையை எழுப்பக் கடைக்கால் தோண்டும் வேலையில் நூற்றுக்கணக்கானவர் ஈடுபட்டிருந்தனர். மிகப்பெரிய மாளிகை உருவாவதற்கான அறிகுறி தென்பட்டது.

செங்கற்கள் அடுக்கடுக்காய் வரிசையாய் சிறிய மதில் போல் நின்றன. அவை புத்தம் புதிதாய் சூளைகளிலிருந்து வந்து இறங்கி செந்நிறத்துடன் ஒளிவீசின.

ஒருபுறம் பாறைகளை உயரமான கற்தூண்களாகச் செதுக்கப்படும் பணியைப் பல சிற்பிகள் செய்து கொண்டிருந்தனர். உருளைகள் பொருத்தப்பட்ட வண்டிகளில் யானைகளால் இழுத்து வரப்பட்டன. தேர்கள், குதிரைகள், இரட்டை மாடுகளால் இழுக்கப்பட்ட வண்டிகள், யானைகள் இழுக்கும் பார வண்டிகள் தடையின்றிச் செல்ல அகலமான பாதைகள் போடப்பட்டன. பாதைகளின் இருபுறமும், மரங்கள் நடப்பட்டன. அவை பெரிதாக வளர்ந்து நிழல் தருவனவாய் விளங்கும் காட்சி மனத்துக்கு இதமாய் இருந்தது.

'இந்தக் கானகப் பகுதியில் வெட்டப்பட்ட மரங்களின் எண்ணிக்கைக்கு ஈடாக புதிய மரங்களை வளர்க்க வேண்டும்' என்று அரசு அதிகாரிகள் கட்டளையிட்டு, நிறைவேற்றத் திட்டங்கள் வகுத்தனர்.

பல இடங்களில் வெண்ணெய் போல் சுண்ணாம்பு அடிக்கும் பணி நடைபெற்றுக் கொண்டிருந்தது.

கோயிற் பணி தொடங்குவதற்காக முதன் முதலில் கட்டப்பட்ட குடிலில் வீரமாதேவி அமர்ந்திருந்தாள். உண்ணும், உறங்கும் நேரம் தவிர அவளால் ஒருகணம்கூட சும்மாயிருக்க முடியவில்லை.

கோயில் திருப்பணி, மாளிகைத் திருப்பணி, குடியிருப்பு இல்லங்கள், தெருக்கள், வீடுகள், வீரர்கள் தங்கும் விடுதிகள் என்று பல்வேறு திட்டங்களை நிறைவேற்ற வேண்டி யோசனை பெற, கட்டளை ஏற்கத் தொழிலாளர்களின் மேற்பார்வையாளர்கள் வந்து சென்று கொண்டிருந்தனர். தேனீக்கள் போல் சுறுசுறுப்பாக, தொழிலாளர்கள் இயங்கிக் கொண்டிருந்தனர். சிற்பிகள் எழுப்பிய சிற்றுளி ஓசை அந்தப் பகுதி முழுமையும் எதிரொலித்துக்கொண்டிருந்தது.

சிற்பி மாணிக்க சேகரனுக்கு ஏற்பட்ட மகிழ்ச்சிக்கு எல்லையேயில்லை. குமுதவல்லிக்கு இரட்டிப்பு மகிழ்ச்சி. அவனும் அவளும் சிற்பப்பணி நடக்குமிடங்களுக்குச் செல்வதும் யோசனை கூறுவதுமாக சிட்டுகளைப் போலப் பறந்து கொண்டிருந்தனர்.

குமுதவல்லிக்கு இரட்டிப்பு மகிழ்ச்சி. தன் இதயம் நிறைந்தவனுடன் சேர்ந்து விட்டது முதல் மகிழ்ச்சி. சோழ நாட்டில் தஞ்சைபுரிக்கு அடுத்து பெரிய கோயில் ஒன்றை நிர்மாணிக்கும் மகத்தான பணியைத் தன் காதலன் ஏற்றிருப்பது மற்றொரு மகிழ்ச்சி. வீரமாதேவியிடம் மகிழ்ச்சி நிறைந்த தன் உள்ளத்து உணர்ச்சியை வெளியிட்டு நன்றி தெரிவிக்க வந்தபோது அவள் விழிகளில் மகிழச்சிக் கண்ணீர் கோத்து நின்றது.

'குமுதவல்லி! உனக்கு ஏற்பட்ட முதல் மகிழ்ச்சி உன் அருமைக் காதலனுடன் சேர்ந்ததுதான். கடைசி நேரத்தில் அதற்குப் பெரும் இடர்ப்பாடு நேர இருந்ததை நீ மறந்துவிட்டாயா?' என்று வீரமாதேவி கேட்டாள்.

விக்கிரமன்

உண்மைக் காதலுக்குக் கடைசி வரையில் சோதனைகளும், இடர்ப்பாடுகளும் நேருவது உலக இயற்கை போலும் என்று வீரமாதேவி எண்ணிப் பெருமூச்சுவிட்டாள். கைகூப்பியவாறு நின்றிருந்த குமுதவல்லி,

"ஆமாம், இளவரசி அவர்களே! கைக்கு எட்டிய மாங்கனி எங்கே தவறி விடுமோ என்று பயந்து கலங்கினேன். கதிரொளி கண்ட பனிபோல் அது கரைந்தது. அந்தச் சூரிய ரேகைக்குக் காரணம் தாங்கள்தான் என்று அறியும்போது எங்கள் நன்றியை எவ்வாறு தெரிவிப்பது என்று தெரியவில்லை" என்று குமுதவல்லி மெல்லப் பேசினாள். உணர்ச்சி மிகுதியால் வார்த்தைகள் வெளிவரத் தடுமாறின.

வீரமாதேவி, அவளை அன்புடன் அணைத்துக் கொண்டாள். "நீ பட்ட துயரத்தை நான் பிறகுதான் அறிந்து கொண்டேன். உள் துயரம், வெளித்துயரம் என்று இரண்டு விதம். சாட்டை எடுத்து நூறு அடிகள் மேனியில் அடித்துக் காயப்படுத்தலாம். மருந்திட்டு அந்தக் காயத்தை ஆறச் செய்துவிடலாம். ஆனால், உள்ளத்தில் வடு அளிக்கும் வகையில் துன்பம் ஏற்படுத்துவதைத் தாங்கிக் கொள்வது கடினம். உன் இதயம் நிறைந்த மாணிக்க சேகரன் தெய்வப் பிறவி. அவர் கரங்களுக்கு இறைவன் மாய சக்தியை அளித்திருக்கிறான். இறைவன் சிற்பியின் மூலம் இந்தப் பூமியிலே தோன்றப் போகிறார். சிற்



பிக்குத் தொல்லை கொடுக்க வேண்டும் என்பது சோழ அரசியின் நோக்கமன்று. ஒருவிதத்தில் நான்தான் காரணம் என்றும் சொல்லலாம். என்மீது அவருக்கு ஏற்பட்ட பொறாமை சோழ நாட்டின் கலைக்கே இடையூறு செய்யுமளவிற்கு வளர்ந்து விட்டது. இங்கே ஏற்படவிருக்கும் பெரிய கோயிலால் எனக்கு அழியாப் பெருமை ஏற்படப் போவதாக அரசி நினைத்து விட்டாள். அதற்கும் நான்தான் காரணம் என்று நினைக்கிறேன். நான் ஒரு சபதம் செய்தேன். சிற்பியைத் தடுப்பதன் மூலம் சிற்பிக்கு மன வேதனை ஏற்படுத்துவதன் மூலம் கலைப் பணியைத் தடுத்துவிடலாம் என்று அரசி நினைத்துவிட்டார்கள். அதன் விளைவுதான் உங்களுக்கு அவர்கள் அளித்த தொல்லை" என்று ஆறுதலாகக் கூறினாள் வீரமாதேவி. தனக்கே மனப் புண்ணிற்கு மருந்திட மற்றவர் வருவாரா என்று தேடுவது போக, குமுதவல்லிக்கு ஆறுதல் சொல்லும் அளவிற்குத் தனக்குச் சக்தி ஏற்பட்டு விட்டது அவளுக்கு வியப்பாக இருந்தது.

"சிற்பியுடன் நான் சிற்பக்கூடத்திற்குப் புறப்படப் போகிறேன் என்று எண்ணி யிருந்தபோது இளவரசி அழைப்பதாகக் காவலர்கள் வந்தார்கள். என்னை மாளி கைக்கு அழைத்துச் சென்றார்கள். சோழ சக்கரவர்த்தியின் மனத்துக்கு இனிய இளவரசியாம் - அரிந்தவன்மாதேவி நோயுற்றுப் படுத்திருந்த நிலையிலும் என் னிடம் கடுமையாகப் பேசினாள். தங்கள் பெயரைக் குறிப்பிட்டு, கடுஞ்சொற்களால் ஏசினார்கள். அரசியார் வடக்கே சென் றிருக்கும் நிலையில் தானே அரசி என்றும் தன் உத்தரவுப்படி அதிகாரிகள் நடப் பார்கள் என்றும் ஆவேசத்துடன் கூறி னார்கள்.

இன்னும் சில நாழிகைக்குள் சிற்பியை யும் அழைத்துக் கொண்டு கண்காணாத தேசத்திற்குச் சென்றுவிட வேண்டும் என்று எச்சரித்தார்கள். அதற்காகப் பொன்னும் பொருளும் ஏராளமாகத் தருவதாகக் கூறினார்கள். சோழநாட்டு எல்லையைத் தாண்டிச் செல்லும் வரையில் தகுந்த பாது காப்பு அளிப்பதாக உறுதி கூறினார்கள்.

மீண்டும் தங்கள் பெயரைச் சொல்லி "ஒரு நாளும் அவள் திட்டம் நிறைவேறப் போவதில்லை. கோயில் பணிகள், ஏரி வெட்டுதல், வீடு கட்டுவது போன்ற காரி யங்களில் ஈடுபட்டுள்ள தொழிலாளர் களைத் தடுத்து அவரவர் ஊர்களுக்குச் செல்லுமாறு உத்தரவிடப்பட்டுள்ளது" என்று கூறினார்கள். கடைசியாக அவர்கள் மெல்லக் கூறினாலும் கடுமையாகக் கூறிய சொற்கள் என்னை நடுங்க வைத்துவிட்டன. அதாவது தன் கட்டளையை இன்றைய பகற் பொழுதுக்குள் நிறைவேற்றவில்லை என் றால் இந்த உலகைவிட்டே சிற்பியுடன் நானும் மறைந்து விட நேரிடும் என்ற எச்சரிக்கை வார்த்தைகளைக் கேட்டவுடன், நான் மயங்கி விழாத நிலைதான்..."



குமுதவல்லி தொடர்ந்து பேசுவதைத் தடுத்து, வீரமாதேவி சொன்னாள் :

"எனக்கு எல்லாம் தெரியும். நடந்தவற்றை மீண்டும் விவரிப்பதன் மூலம் மனத்தில் மீண்டும் துன்ப நிகழ்ச்சிகளை நினைவுபடுத்திக் கொள்ள வேண்டாம். நல்ல செயல்களுக்குத் தொடக்கத்தில் தொல்லை ஏற்படும். துன்பத்தைக் கண்டு துவளக்கூடாது. நம் இலட்சியத்தில் உறுதியுடன் இருக்கிறோமா என்று இறைவனின் சோதனை என்று எண்ணி உறுதியுடன் இருந்துவிட்டால் அவன் உதவி நமக்கு உண்டு. சிற்பியும், நீயும் மருத்துவமனையில் இருந்து புறப்படும் தருணத்தில் இளவரசி அழைப்பதாகக் காவலர்கள் வந்து உன்னை மட்டும் அழைத்துச் சென்றதை நான் அறிவேன். உன்னைப் பயமுறுத்திப் பேசியதும் எனக்குத் தெரிய வந்தது. ஆனால், பிறகு என்ன நேர்ந்தது, எப்படி ஓர் அதிசயம் நடந்தது என்று உனக்குத் தெரியுமா?" என்று கூறிச் சற்று நிறுத்தினாள் வீரமாதேவி.

தெரியாது என்று தலையசைத்து வீரமாதேவி என்ன சொல்லப் போகிறாளோ என்று வியப்புடன் அவள் முகத்தை விரிந்த விழிகளுடன் நோக்கினாள்.

"இளவரசி அரிந்தவன்மாதேவி தஞ்சை புரியிலிருந்து பழையாறைக்கு, நோய்க்குச் சிகிச்சை பெறுவதற்காகவே வந்தாள். மன அமைதியுடன், முழு ஓய்வுடன் இருக்க வேண்டும் என்று மருத்துவர் எச்சரித்திருந்தும், அதை மீறி, மனத்தில் எப்போதும் சதித்திட்டங்களுக்கு இடம் கொடுப்பதால் உடல்நிலை சீர் குலைந்தது.

உன்னிடம் பேசி, அதிகாரிகளை அழைத்துக் கட்டளையிடும் முன்னரே மயக்கமடைந்துவிட்டாள். வாய் பேசமுடியாமல் போய்விட்டது. கரங்கள் செயலிழந்தன. பிறகு நடந்தது உனக்குத் தெரியும். நீயும், சிற்பியும் உற்சாகமாகப் பணியாற்றி வருகிறீர்கள். மதுரையினின்று நூற்றுக் கணக்கானவர்கள், காடு திருத்தி நாடாக்க வந்திருக்கிறார்கள். பஞ்சம் வந்துவிடுமோ என்று பயந்து, அடுத்து என்ன செய்வது என்று திகைத்திருந்த பகுதி மக்களை ஏரி வெட்டும் பணியிலீடுபடுத்தியதும் அவர்கள் உற்சாகத்துடன் வேலை செய்கிறார்கள்.

சோழ சக்கரவர்த்திகளின் இலட்சியத்தில் ஒன்றான, மாபெரும் ஏரியை வெட்டுவது மிக விரைவில் நிறைவேறிவிடும். அவர்கள் திரும்பி வருவதற்குள் ஏரியை வெட்டி, கரையை உயர்த்தும் பணியை முடித்துவிடவேண்டும். சக்கரவர்த்திகள் கொண்டு வரும் கங்கை நீர் அந்த ஏரியில் நிரப்பப்படும்".

வீரமாதேவி விழிகளை மூடிக்கொண்டு தன் எதிரே ஏரியும், கோயிலும், மாளிகையும் நகரமும் கம்பீரமாக நிற்பனபோல் மெய்மறந்து உற்சாகத்துடன் விவரித்தாள்.

வீரமாதேவி விவரித்துக் கொண்டே வந்த போது அவர்கள் வார்த்தைகளால் மெய் சிலிர்த்துப்போன குமுதம் வாய்விட்டு உற்சாகத்துடன் குரல் கொடுத்தாள். மாணிக்க சேகரனும் அங்கே வந்து சேர்ந்தான்.

"ஆமாம், ஆமாம். நான் செய்வது மிகையில்லை. இங்கே மூன்று அற்புதங்கள் நிகழப் போகின்றன. பெரிய கோயிலின் குடமுழுக்கும், ஏரியில் கங்கை நீர் நிரப்புதலும், புதிய மாளிகையில் அரச குடும்பத்தினர் குடிபுகுதலும் நடைபெறப் போகின்றன. கருவூர் சித்தர் சோழநாட்டை விட்டுத் தெற்கே பொதிகை மலைச் சாரலை அடையும் நாள் நெருங்கிக் கொண்டிருக்கிறது. சோழ அரசியும், அரசரும் கங்கை நதியில் நீராடி, கங்கை நீருடன் திரும்பி வருவார்கள். வெற்றியுடன் அவர்கள் திரும்பும் நாளை நான் ஆவலுடன் எதிர்பார்க்கிறேன். பெருவுடையார் கோயிலுக்குப் புகழ் சேர்க்கப் போகும் இரண்டு முக்கிய சிற்பங்களை முடிக்கும் பொறுப்பு உன் அருமை மாணிக்க சேகரனிடம் இருக்கிறது. அவையும் முடிந்து விட்டால் வாழ்வின் இலட்சியம் பூர்த்தியாகிவிடும். பிறகு, சோழ அரசியோ மற்றவர்களோ என்னைச் சோழ சக்கரவர்த்தியிடமிருந்து பிரித்து, என்னை நாட்டைவிட்டு ஓட்டிவிட்டாலும் கவலைப்பட மாட்டேன்..." என்று கூறிவரும் போது மாணிக்க சேகரன், "தேவி..." என்று பெருங் குரல் கொடுத்தான்.

"தேவி! என்ன கூறினீர்கள்? சோழ நாட்டில் உங்களுக்கு எதிர்ப்பாளரா? அப்படி ஒருவரும் இருக்க முடியாது. என்றும் ஏற்படப் போவதுமில்லை. தாங்கள் குறிப்பிட்ட கலைத் தேவியாம் ஞான

சரஸ்வதியின் சிலை முடிவடையும் தருவாயிலுள்ளது. சண்டேச்வர அனுக்கிரக மூர்த்தி சிலையில் இன்னும் சில பணிகள் மட்டுமே உள்ளன. கண் திறக்க நாள் பார்க்குமாறு சோதிடரைக் கேட்டுக் கொண்டுள்ளேன். சக்கரவர்த்திகள் பெருமையுடன் உங்களுடைய புகழையும் உலகுக்கு எடுத்துக் காட்டும் வகையில், சூரிய சந்திரர் உள்ளவரை அழியாத சிற்பக்கூடமாகப் பெரிய கோயில் திகழும். என் நெடுநாள் ஆசை ஒன்றையும் நான் சக்கரவர்த்திகளிடம் விண்ணப்பிக்கப் போகிறேன். லோகமாதீச்சுரம், ராஜராஜேச்சுரம், செம்பியன் மாதேவீச்சுரம் என்ற புகழ்க் கோயில்கள் இருப்பனபோல் இங்கே அமையும் கோயிலுக்கு வீரமாதேவீச்சுரம் என்று பெயர் சூட்டவேண்டும் என்று நான் சக்கரவர்த்திகளிடம் வேண்டப் போகிறேன். உருவாகும் பேரேரிக்கு வீரமாதேவிப் பேரேரி என்றும் ஊருக்கு வீரமாதேவி நகரம் என்றும் பெயர்கள் சூட்டவேண்டும் என்று கேட்டுக் கொள்ளப் போகிறேன்".

வீரமாதேவி அதிர்ச்சியடைந்தாள். "சிற்பியாரே, சிற்பியாரே! என்ன வார்த்தைகள் கூறிவிட்டீர்கள்? என்னை மகிழ்விக்க வேண்டும் என்று இப்படிப் பேச மாட்டீர்களே. என்னைப் புகழவேண்டும் என்று உயர்வு நவிர்ச்சியாகப் பேசமாட்டீர்களே! இந்தப் பணிகளின் பெருமை முழுமையும் நம் தலைவர், சோழ சக்கரவர்த்திகளையே சேரவேண்டும். இந்த நகரத்திற்கு இராஜேந்திர சோழபுரம் என்று பெயர் சூட்டப்பட வேண்டும். இராஜேந்திர சோழப் பேரேரி என்று இந்த ஏரிக்குப் பெயரும், இராஜேந்திர சோழீச்சுரம் என்று பெரிய கோயிலுக்குப் பெயரும் சூட்டப்பட வேண்டுமென்பதுதான் என் விருப்பம். நியாயம்கூட. கருணை கூர்ந்து தங்கள் எண்ணத்தை, விருப்பத்தை வெளியே யாரிடமும் சொல்லிவிடாதீர்கள்" என்று உருக்கமாக வேண்டினாள்.

நகரம், ஏரி, கோயில், மாளிகைப் பணிகள் மிக வேகமாக நடைபெற்றுக் கொண்டிருந்த போது பழையாறையிலிருந்து அதிர்ச்சியான செய்தியொன்று வந்தது.

அரிந்தவன்மாதேவியின் உடல்நிலை கவலைக்கிடமாகிவிட்டது என்ற செய்தியை அதிகாரிகள் விரைந்து வந்து தெரிவித்தனர்.

அந்தச் செய்தியை சக்கரவர்த்தி இராஜேந்திர சோழரிடம் தெரிவிக்க விரைந்து செல்லுமாறு வீரமாதேவி சோழ இளவரசரிடம் வேண்டிக் கொண்டாள்.

அடுத்து என்ன நேருமோ என்ற கவலை வேறு வீரமாதேவியிடம் எழுந்தது.

(தொடரும்)





# வீரா

தமிழ்ப் புத்தாண்டில் வெளி வந்த தமிழ்ப் படங்களில் (நீண்ட இடைவெளிக்குப் பிறகு) ரஜினி காந்த் நடித்த 'வீரா' திரைப் படத்தை இம்மாதம் 'கலைப் பகுதி'க்குத் தேர்ந்தெடுத்தோம்.

சென்னை மாநகரத்தைத் தவிர பிற நகரத்தைச் சேர்ந்தவர்களும் படம் பார்த்து விமர்சிக்க வசதியாக இருக்கும் வகையில் இந்த மாதம் கும்பகோணம் சென்றோம். வாசு திரையரங்கில் 'வீரா' படம் பார்த்தோம். வாசு திரையரங்கப் பணியாளர்கள் அனைவரும் சீருடையுடன் இருப்பதும், திரையரங்கத்தில் இருக்கும் இருக்கைகள் அனைத்தும் (வரிசையாய் ரஜினி படம் போட்டு ரசிகர்களின் அன்புத் தொல்லைகளுக்குட்பட்டு) சேதமடையாமல் இருப்பதும் திரு. கார்த்திகேயனின் நிர்வாகத் திறமையைக் காட்டுகிறது. திரையரங்கிறகுள் நுட்பமான ஒளி பாய்ச்சும் சிவப்பு நிற டிஜிட்டல் கடிகாரம் ஒளிர்வது அவசர அத்தியாவசியக் காரியங்களுக்கு நிச்சயம் உதவும்.

இது மருத்துவச் சிறப்பிதழ். இந்த மருத்துவச் சிறப்பிதழில் கும்பகோணத்தில் புகழ்பெற்று விளங்கும் மருத்துவர்கள் மூவர், பிரபல தொழில் அதிபர்கள் இருவர், ஆக ஐந்து தம்பதியர் 'வீரா' படத்தை கும்பகோணத்தில் சிறந்து விளங்கும் வாசு ஏ/சி திரையரங்கில் பார்த்தனர்.

பஞ்சு அருணாசலம் படத்தைத் தயாரிக்க, இயக்கியவர் சுரேஷ் கிருஷ்ணா.

படம் பார்த்த தம்பதியருடன் வாசு திரையரங்க உரிமையாளர் திரு. கார்த்திகேயன் சொன்ன கருத்துகளையும் இங்கே தொகுத்தளிக்கிறோம்.

வாசு திரையரங்க உரிமையாளர்

## திரு. கார்த்திகேயன்

ஒவ்வொருவருக்கும் வீட்டில் வெவ்வேறு பிரச்னைகள். அதையெல்லாம் மறக்க இந்த மாதிரி பொழுதுபோக்குப் படங்கள் உதவுகின்றன. என்னதான் 'அந்த டி.வி., இந்த டி.வி' என்று வந்தாலும் அரை மணி நேரம் தொடர்ச்சியாக உட்கார்ந்து வீட்டில் நிம்மதியாகப் பார்க்க முடியாது. அந்த மாதிரியான இன்றைய சூழ்நிலையில் ரஜினி காந்த்தோட 'வீரா' மாதிரியான படங்கள் பிரச்னைகளை மறக்க வைக்கின்றன. 'வீரா' ஒரு பொழுது போக்குப் படம். வளர்ந்துவிட்ட நவீன யுகத்தில் கம்ப்யூட்டர் வேகத்தில் படம் ஓடி முடிந்து விடுகிறது. தொழில் நுட்ப விஷயங்களையும் பார்க்கிற இன்றைய ரசிகர்களுக்கு எந்தக் குறையையும் 'வீரா' வைக்கவில்லை. எதற்குமே ரிஷிமூலம், நதிமூலம் எல்லாம் பார்க்கக் கூடாது என்பார்கள். அந்த மாதிரி இந்தப் படத்திலே இரட்டை அர்த்த வசனங்களுக்குப் பொருள் எதையும் யோசிக்கக்கூடாது. நகைச்சுவையும் குறிப்பாக, 'மாடத்திலே கன்னி மாடத்திலே' பாடல் காட்சியும் நன்றாக இருப்பதால் பார்த்தவர்களே மீண்டும் மீண்டும் 'வீரா'வைப் பார்க்க விரும்பி வருகிறார்கள். அதனால் 'வீரா' நிச்சயம் ஒரு வெற்றி பெற்ற கமர்ஷியல் படம் என்பதில் ஐயமில்லை.

## திருமதி மணிபாய் – 'வைக்கிங்' திரு. ஹரிதாஸ்

சண்டைக் காட்சிகள் விறுவிறுப்பாக இருக்கின்றன. சண்டைக் காட்சிகளில் ரஜினிகாந்த் சிரமப்பட்டு நடித்திருக்கிறார். செந்தில், ரஜினிகாந்த்துடன் தோன்றும் நகைச்சுவைக் காட்சிகளில் கடவுள் படங்களை வைத்து, கடவுளுக்கு இரண்டு பெண்டாட்டி என்று



மீனாவுக்கு இருவரும் மாற்றி மாற்றிச் சொல்ல - மீனா ஒரே வார்பதிலில் இராமர் படத்தை வைக்கச் சொன்ன பிறகு ரஜினி, செந்திலை உதைக்கும் காட்சியும், 'கோவிந்தா, கோவிந்தா' என்று கோயிலில் புலம்பும் காட்சியும் நம்மையறியாமல் சிரிப்பை வர

வழைக்கின்றன. 'கொஞ்சிக் கொஞ்சி' பாடல் நன்றாயிருக்கிறது. மீனா ரொம்ப அழகாக இளமையாக இருக்கிறார். காதல் காட்சியில் மீனா, ரஜினிகாந்த்திற்கு கறுப்புக் கயிறு மட்டும் இடத்திலும் அந்தக் கயிற்றை அவிழ்க்கும் இடத்திலும் இயக்குநர் சுரேஷ் கிருஷ்ணா தெரிகிறார். மொத்தத்தில் சிரித்து விட்டு வருகிற மாதிரி பஞ்சு அருணாசலம் படத்தைத் தயாரித்திருக்கிறார்.

### திருமதி சசிரேகா – 'கே.ஜி.எஸ். ஜுவல்லரி' திரு. ராமச்சந்திரன், செல்வி. லாவண்யா

ரஜினிகாந்த் ஒவ்வொரு படத்திலும் ஒரு புதுமையைச் செய்வார். 'வீரா'வில் 'ஹௌ இஸ் இட்' என்கிறார். 'சூப்பர்'தான். மனம் விட்டுச் சிரிக்கிற மாதிரி நகைச் சுவைக் காட்சிகள் மிகுதி. இளைய ராஜாவின் இசையும், பாடல் காட்சிகளும் சிறப்பாய் அமைந்திருக்கின்றன. ரோஜாவுடன்



ரஜினிகாந்த் ஆடும் 'வாடி வெத்தலப் பாக்கு' பாடல் கொஞ்சம் ஆபாசம். குழந்தைகளோடு பெற்றோரும், பெற்றோரோடு குழந்தைகளும் சேர்ந்து பார்க்க முடியாது. முடிவுதான் கொஞ்சம் சரியில்லை. மற்ற விஷயங்கள் நன்றாக இருப்பதால் இதைச் சகித்துக் கொள்ள வேண்டியதுதான்.

### திருமதி சொர்ணலதா – டாக்டர் வி.சி. நெடுஞ்செழியன்

'அண்ணாமலை' படத்திற்குப் பிறகு ரஜினி நடித்துள்ள விறுவிறுப்பான படம் 'வீரா'. எக்கச்சக்கமாகப் பொழுது போக்கு அம்சம் நிறைந்த படமாக நன்



றாகவே இருக்கிறது. இரண்டு பெண்டாட்டிகளைக் கட்டிக் கொண்டு ரஜினி படுகிற அவஸ்தைகளில் ரஜினியோட சுறுசுறுப்பை ரசிக்க முடிகிறது. கோடை விடுமுறையில் இருக்கும் பள்ளி மாணவர்களுக்கு ஏற்ற படம்.

### திருமதி சுகந்தி – டாக்டர் எஸ். செல்வராஜ்

எம்.ஜி.ஆர். பார்முலா மாதிரி ரஜினி பார்முலாவும் வெற்றி



யடைய ஆரம்பித்திருப்பதற்கு 'வீரா' ஓர் உதாரணம். ரஜினி ரசிகர்களுக்கு வேண்டிய ரஜினி ஸ்டைல் 'வீரா'வில் இருப்பதோடு எல்லாரும் ரசிக்கிற மாதிரியும் படம் இருப்பதால் 'வீரா'வைக் குறை சொல்ல முடியவில்லை.

### திருமதி வசந்தா – டாக்டர் ஆர். சுப்பிரமணியம்

கதை அமைப்பில் 'வீரா' சுமார்தான். இசை, ஒளிப்பதிவு, வெளிப்புற இடங்கள், பாடல்களில் நடன அமைப்பு இதெல்லாம் படத்தைக் கொஞ்சம் தூக்கி நிறுத்துகிறது. ஒரு விதத்தில் ஆங்கிலப் படத்திற்கு இணையா இருக்கு என்றுகூடச் சொல்லலாம். காட்சிகள் கோவையாகச் செல்கின்றன. எல்லாரும் நல்லாவே நடித்து இருக்கிறார்கள். ரோஜாவிற்கு இந்தப் படத்தில்தான் நடிப்பை வெளிக்காட்டும் நேரம் வந்திருக்கிறது. தாய் சொல்லைத்



தட்டாத பிள்ளையாக – ரசிகர்களின் ரசனைக்கேற்ப நடித்துள்ளார் ரஜினிகாந்த். விருந்திற்குக் கூப்பிட்டு ரஜினியைப் பேண்ட் அவிழ்க்க வைக்கும் காட்சி நல்ல கலகலப்பு. ஹிந்தி நடிகர் மகேஷ் ஆனந்த் தன் பெயரான 'அரிச்சந்திரனை' அழுத்திச் சொல்வதோடு சரி. வில்லத்தனம் குறைவு.

தொகுப்பு : நாகராஜகுமார்
படங்கள் : ஸ்ரீநிவாசன்

## மனம் விட்டுப் பேசுவோம்

☆ 'ஆன்மிகம் ஒன்றுதான் அறிவைப் பலசாலி ஆக்குகிறது. ஆன்மிகத்தைத் தழைக்கச் செய்வதன் மூலமே அரக்க குணத்தை வீழ்த்த முடியும்' போன்ற வரிகள் தத்துவார்த்தமான தெய்விக ஞானமாகும். மேலும் பல ஆன்மிகக் கட்டுரைகளை 'அமுதசுரபி'யில் எதிர்பார்க்கிறோம்.

— அன்பின் செபா, களியல், குமரிமாவட்டம்

☆ 'அமுதசுரபி'யைப் பிரித்தால் முதலில் படிக்கும் 'கங்கா புரிக் காவலன்' இறுதிப் பக்கங்களில் இருக்க, தேடிப் படித்தேன். சிற்பி மாணிக்க சேகரனும், அமுதமும் சந்திக்கும் உணர்ச்சிமயமான சந்திப்பு உள்ளத்தை உருக்கியது. நெகிழ்ந்த நெஞ்சுடன் மீண்டும் படித்தேன். ஆசிரியர் அவர்களுக்கு எனது மனமார்ந்த பாராட்டுகள்.

— புலவர் அறு. வெண்ணிலா, சென்னை – 53.

☆ ஏப்ரல் மாத அமுதசுரபி படிக்கப் படிக்க இனிமையான சிறுகதைகளை அள்ளி அள்ளித் தந்தன. பல புதிய பகுதிகள் இதழுக்கு மேலும் மெருகூட்டியிருந்தன. அன்றைய சென்னை நகரைச் சித்திரித்த ஓவியங்கள் என் எண்ணங்களை காலச் சக்கரமாய் பின்னோக்கி இழுத்துச் சென்றன. 'மகளிர் மட்டும்' திரைக் காவியத்தை மகளிர் மட்டும் விமர்சித்திருந்த விதம் வித்தியாசமாகவும் விரும்பும்படியாகவும் இருந்தது.

— கவிஞர் தி. ஆதிராஜன், மதுரை – 16.

☆ சித்திரை இதழ் வாசகர் மனத்தில் முத்திரை பதித்தது. ஸ்வரங்கள் ஏழு போல் சிறுகதைகள் ஏழும் தனித் தன்மையுடன் ஒலித்துக் கொண்டிருக்கின்றன. சென்னையைப் பற்றிய சிறு சிறு செய்திகள் அனைத்தும் ஆச்சர்யம் ஏற்படுத்தின.

— ஆர். தமிழரசி தேவசேனாபதி, தென்குத்துபுதுநகர்.

### தமிழ்ப்புத்தாண்டு வாழ்த்துச் சொன்ன வாசகர்கள் அனைவருக்கும் நன்றி

☆ சென்னை நகரில் இன்று பார்க்க இயலாத அந்தக் கால இடங்களைப் போட்டோக்களோடு மட்டுமல்லாமல் உயிருள்ள ஓவியங்களாகவும் தீட்டிக் காட்டி நிறைவு செய்து விடுகிறீர்கள்.

— கவிஞர் அய்யாறு வாசுதேவன், சென்னை – 14.

☆ ரூபாய் 60 கொடுத்து 'நகர்வலம்' வருவதற்கு பதில் நாங்கள் ஆறு ரூபாயில் வெகு நிதானமாகவும் விச்ராந்தியாகவும் வலம் வந்துவிட்டோம். யோகாவின் போட்டோக்கள் இன்னும் அழகு சேர்த்தன.

— திருமதி இந்திரா ஆராவமுதன், ஸ்ரீரங்கம்.

☆ ஏப்ரல் 1994 அமுதசுரபி இதழ் காலம் காலமாக போற்றி, படித்து, பாதுகாத்து வைக்க வேண்டிய பொக்கிஷமாக அமைந்துள்ளது.

— அ. செபாஸ்டின், குமரி – 629 101.

## அப்போலோ

சென்னை அப்போலோ மருத்துவமனையில் புதிதாகத் தொடங்கப்பட்டுள்ள புற்றுநோய் மருத்துவப் பிரிவை விரைவில் பாரதப் பிரதமர் நரசிம்மராவ் திறந்து வைக்கப் போகிறார்.

புதிதாகத் தொடங்கப்படும் அப்போலோ புற்றுநோய் மருத்துவப் பிரிவு, இங்கிலாந்திலுள்ள ராயல் மார்ஸ்டன் மருத்துவமனையின் புற்றுநோய்ச் சிகிச்சைக்கான நிபுணர் டாக்டர் 'ரே எல் வெல்ஸ்'சின் மருத்துவத் தொழில் நுட்ப உதவியோடு இயங்கும்.

'உலகில் இரண்டாவது ஆட்கொல்லி நோயான புற்றுநோய்க்கு மேலை நாடுகளுக்கு இணையான சிகிச்சையளிப்பதற்காக அப்போலோ புற்றுநோய் மருத்துவப் பிரிவு தொடங்கப்படுகிறது' என்றார் அப்போலோ மருத்துவமனையின் தலைவர் டாக்டர் பிரதாப் ரெட்டி.

இந்திய மக்கள் தொடர்பாளர் சங்கத்தின் உறுப்பினர்கள் தேர்வு அண்மையில் பம்பாயில் நடந்தது. சென்னை, டி.ஐ. குருப் மக்கள் தொடர்பாளர் திரு. பழ. பழனியப்பன் தேசியக் கவுன்சிலின் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

கோயமுத்தூரைத் தலைமையகமாகக் கொண்டு சென்னையிலும் சிறப்பாகச் செயல்பட்டுக் கொண்டிருக்கும் சசி அட்வர்டைஸிங் பிரைவேட் லிட்., திரு ஆர். ஸ்வாமிநாதன், பொதுச் செயலாளராகத் தேர்வு பெற்றார். தமிழகத்திலிருந்து இந்திய மக்கள் தொடர்பாளர் சங்கத்தின் பொதுச் செயலாளராக ஒருவர் தேர்வு பெறுவது இதுவே முதல் தடவை.

துணைத் தலைவர்களாக என்.டி. ராஜபால் (புது தில்லி) சுபீர் கோஷ் (கல்கத்தா), தீபக் நியோகி (பம்பாய்), எம்.பி. ஜெயராம் (கர்நாடகா), பொருளாளராக கே. பாலசுப்பிரமணியம் (பம்பாய்) ஆகியோர் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.



★ ஆர். ஸ்வாமிநாதன்

இவர்கள் மூன்று ஆண்டுகள் (1994–1996) உறுப்பினர்களாகப் பணியாற்றுவர்.



## பஞ்சவடியில் இராவண்ணன்

கலைமாமணிகள் திரு. நட்ராஜ் - திருமதி சகுந்தலா நாட்டியக் கலைஞர்களின் நடன கலா நிலையத்தின் பொன் விழாக் கொண்டாட்டம் அண்மையில் சென்னை நாரத கான சபாவில் சிறப்பாக நடைபெற்றது.

தமிழக அரசின் கலாசாரத் துறையுடன் இந்தியன் வங்கியும் இணைந்து நடத்திய விழாவில் 'பஞ்ச வடியில் இராவணன்' நாட்டிய நாடகத்தை நட்ராஜ் - சகுந்தலா குழுவினர் அரங்கேற்றி அனைவரையும் மகிழ வைத்தனர்.

பொன் விழா நிகழ்ச்சியில் மாண்பமை முன்னாள் தலைமை நீதிபதி எம்.எம். இஸ்மாயில், கலைமாமணி விக்கிரமன், டாக்டர் வி.ஜி. சந்தோஷம் ஆகியோர் கலந்து கொண்டு பாராட்டி நினைவுப் பரிசுகளை அளித்து மகிழ்ந்தனர்.



## விமானப்படை கலாசார விழா

பல மாநிலங்களின் கலாசார சிறப்பியல்புகளைக் குறிக்கும் வகையில் கைவினைப் பொருள்கள், அலங்காரப் பொருள்கள், பல கலை உணர்வுகளைப் பிரதி பலிக்கக் கூடிய காட்சி விழா ஒன்றினை சென்னையை அடுத்த ஆவடியில் விமானப் படையினர் இல்லத்தரசிகளின் நலவாழ்வு சங்கம் நடத்தியது. இவ்விழாவில் ஏர் மார்ஷல் திரு ஆர். ராமமூர்த்தி, அவரது துணைவியார் திருமதி மகாலக்ஷ்மி ராமமூர்த்தி ஆகியோர் பங்கேற்றனர்.

இவ்விழா, ஒவ்வொரு மாநிலங்களின் கலாசார வளர்ச்சியை, சிறப்பியல்புகளை உணர்த்தியதுடன் தேசிய ஒருமைப்பாட்டை உறுதிப்படுத்துவதாகவும் அமைந்திருந்தது. ●

## சித்திரை விழா

'அனைத்திந்தியத் தமிழ் எழுத்தாளர்கள் சங்கம், சென்னை' யின் புதுச்சேரி மாநிலக் கிளை அண்மையில் 'சித்திரை விழா'வை மிகச் சிறப்பாகக் கொண்டாடி மகிழ்ந்தது.

புதுச்சேரி மாநில அரசு வேளாண் - கூட்டுறவு அமைச்சர் திரு. ந. ரங்கசாமி சிறப்புரை ஆற்ற - இலங்கை நாடாளுமன்ற உறுப்பினர் திரு மாவை. சோ. சேனாதிராஜா, முன்னாள் நீதிபதி இராமலிங்கம், டாக்டர் இரத்தின ஜனார்த்தனன், கிளை அமைப்பாளர் பாஞ். இராமலிங்கம் ஆகியோர் படத்தில் உள்ளனர். ●



# ஜே. கிருஷ்ணமூர்த்தி

பி.எம்.எஸ்.ராவ்

## வாழ்க்கைக் குறிப்பு :

ஜே.கே. என்றழைக்கப்படும் ஜிட்டு கிருஷ்ணமூர்த்தி, ஆந்திரப் பிரதேசத்திலுள்ள, மதனபள்ளியில், ஒரு தெலுங்கு பிராமணர் குடும்பத்தில் 1895ஆம் வருடம் மே மாதம் 11ஆம் தேதி பிறந்தார். சிறு வயதிலேயே, பிரம்மஞான சபையின் தலைவரான டாக்டர் அன்னி பெசண்ட் அம்மையார் அவரை வளர்ப்புப் பிள்ளையாக ஏற்றுக் கொண்டார். பெசண்ட் அம்மையாரும், பலரும், கிருஷ்ணமூர்த்தி ஒரு பெரும் உலக ஆசானாக (world teacher – ஜகத்குரு) விளங்குவார் என்று கண்டு, அவரை அவ்வாறு ஏற்றுக் கொண்டனர்.

பிரம்மஞான சபையின் பன்னாட்டுத் தலைமையகம் சென்னையிலுள்ளது. பிரம்மஞான சங்கத்தினர் ஜகத்குரு அவதரிக்கப் போவதையும் முன் கூறினர். அவருடைய வருகைக்கு உலகத்தினரை ஆயத்தமாக்க "கீழை நாட்டு ஒளி நட்சத்திர இயக்கம்" (order of the Star in the East) என்ற அமைப்பை 1911இல் சிறுவனான கிருஷ்ணமூர்த்தியைத் தலைவராகக் கொண்டு, நிறுவனஞ் செய்தனர். அதே வருடம், தனி முறையில் கல்வியளிக்கவும், அவருடைய வருங்காலப் பணிக்குப் பயிற்சியளிக்கவும் இங்கிலாந்திற்கு அனுப்பி வைக்கப்பட்டார்.

1922இல் கிருஷ்ணமூர்த்தி மறைமெய்ம்மையைச் சார்ந்த சில அனுபவங்களுக்கு ஆளானதால், வாழ்வைப்பற்றிய உள்ளறிவு மாறுதலடைந்தது. சில வருடங்களுக்குப் பிறகு தன்மேல் சுமத்தப்பட்ட பங்கைத் துறந்தார். மிகப் பெரிய அளவில் (40 நாடுகள் 43000 பேர்) அங்கத்தினர்களைக் கொண்ட இயக்கத்தைக் கலைத்து விட்டார். இப் பணிக்காக சேகரித்த பணத்தையும், சொத்துகளையும், கொடுத்தவர்களிடமே திருப்பிக் கொடுத்து விட்டார். 1929இல் சரித்திரப் புகழ் பெற்ற பேருரையில், சமயத்துறை நிறுவனங்கள் ஒருவரை சத்தியத்திற்கு எவ்வாறு அழைத்துச் செல்லாது என்பதை விளக்கினார்.

அவர் அறிவித்ததாவது: "சத்தியத்திற்கு வழி கிடையாது. எந்த சமயத்தின் வழியாகவோ, இனத்தின் வழியாகவோ, வேறு எந்த வழியாகவோ சத்தியத்தை அணுக முடியாது. சத்தியம் அளவற்றது, கட்டுப்பாடற்றது; அணுக முடியாதது. இதை இணைத்து உருவாக்க முடியாது. ஒரு குறிப்பிட்ட வழியில் மனிதர்களை நடத்திச் செல்லவோ, வற்புறுத்தவோ எவ்வித



அமைப்பையும் நிறுவக் கூடாது. என் அக்கறையெல்லாம் மனிதனை முழுமையாக, எவ்விதக் கட்டுப்பாடும் இன்றி விடுதலை பெறச் செய்வதாகும்!"

இதன் பின்னர் 50 ஆண்டுகளுக்கு மேல், இறக்கும் வரை (17.2.86) இடைவிடாமல் உலகெங்கும் சென்று, சொற்பொழிவுகள் செய்து, கலந்துரையாடல்கள் நடத்தி, தனிமனிதர்களுடன் நேர் காணல் மூலம், சத்தியத்தை, குரு என்ற முறையில் இல்லாமல், சத்திய பிரேமியாக அறிவுறுத்தி வந்தார். இவற்றை அநேக புத்தகங்களாகவும், ஐம்பது மொழிகளில் மொழிபெயர்ப்பாகவும், ஒலி, ஒளி நாடாவிலும் பதி செய்துள்ளனர்.

உலகில் மிகச் சிறந்த சம ஆசிரியராக வெகு காலமாகவே ஒப்புக் கொள்ளப்பட்ட கிருஷ் மூர்த்தி, தன் வாழ்நாளை, மனித தன் துயரங்களுக்கு விழிப் கொள்ளவும், இதிலிருந்து வி தலை பெறவும், சாத்தியமே என அறிவுறுத்தவுமே, அர்ப்பணித்து கொண்டார். எந்த நாட்டிலும் சில மாதங்களுக்கு மேல் தங்கு தில்லை. தன்னை எந்த நாட்டு னும் அல்லது சமயத்துடனு சார்புபடுத்திக் கொள்ளவில்லை வருடந்தோறும் கலிபோர்னியாவி உள்ள ஓஷாய் என்ற இடத்திலும் சுவிட்சர்லாந்தில் உள்ள சானி என்ற இடத்திலும், இங்கிலாந்தி உள்ள ப்ரோக்வுட் பார்க் என் இடத்திலும், இந்தியாவில் அநே நகரங்களில் (டில்லி, பம்பாய் சென்னை, காசி, ரிஷிவாலி) நட பெற்ற கூட்டங்களில் வேறுபட் நாட்டவரும், தொழில்கள் புரிப ரும், மனப்பாங்கு உள்ளவர்களு பங்கு கொண்டனர். இங்கே உ றுக் கேட்பவர்களை, தங்களுடை மனத்தின் செய்கைகளை க காணிக்கத்தூண்டுவார்; நீடித்திரு கும் வினாக்களை அதாவது எல்ல பிரச்னைகளின் மூலத்தைப் பற் யும், மனித மனத்தின் இயல்பை பற்றியும், படைத்தலின் கரு தைப் பற்றியும் கேட்பார் உண்மையான பயன்மிக்க வல் புரட்சியை ஒவ்வொருவரும் த முள்ளேதான் தொடங்க வேண்டு எனச் சுட்டிக் காட்டினார்.

"நாமே உலகம், உலகமே நாம் ஏனெனில் நாம் நமது ப பாட்டின் நிபந்தனைக்கு உட்பட் வர்களாகவே இருக்கிறோம் இதில்தான் நாம் வளர்க்கப்ப டோம். அந்தப் பண்பாடான மனிதனால் உருவாக்கப்பட் ஒருங்கிணைக்கப்பட்டது"

"தனிப்பட்ட நிலையிலும் சமூ நிலையிலும் உலகம் முழுவது குழப்பங்களும், வேதனைகளு துன்பங்களும்காணக்கிடக்கின்ற "துக்கம் முடிவுக்கு வருமா?" தன்னை-யான்-என்பதை அறியு பொழுது துக்கத்திற்கு முற் புள்ளி வைக்கப்படுகிறது. நீங் ளாக விளங்கும் இந்த "யான்" எ

பதை அறிதலில் துக்கத்தின் முடிவு உள்ளது. துக்கத்தின் முடிவே முதறிவாகும்"!

கிருஷ்ணமூர்த்தி அறிவாற்றலுக்கு எதிரானவரல்லர். அறிவியல், தொழில்நுட்ப இயல், மொழிப் பயனியல் அறிவினை அடைதல் அவசியமேயாகும். ஆயின், அறிவிற்கான நினைவாற்றலே, மற்றவர்களுடன் கொள்ளும் உறவுமுறையிலும் அச்சம், இன்பம், துக்கம், அழுக்காறு என விளங்கும்போது, அதே ஆற்றல் பிளவிற்கும், துன்பத்திற்கும் இட்டுச் செல்கிறது.

கிருஷ்ணமூர்த்தி அசாதாரணமான சான்றோர், துன்பப்படுவோரிடத்தும் பரிவுமிக்க அருளாளர். அன்பு மற்றும் கருணையின் உண்மையான மூலத்தைக் கண்டுபிடிக்குமாறு மன்றாடுகிறார்.

நான்கு கிருஷ்ணமூர்த்தி நிறுவனங்கள் (Krishnamurthi Foundations) அமெரிக்கா, இங்கிலாந்து, இந்தியா, லத்தீன் ஆகிய இடங்களில் உள்ளன. முதலில் கிருஷ்ணமூர்த்தியின் பயணங்களுக்கும், பேச்சுகளுக்கும் ஏற்பாடு செய்ய நிறுவப்பட்டவை இவைதற்சமயம், கல்விச் சாலைகளையும், ஆழ்நிலை ஆய்வு மையங்களையும், தனி ஒய்விடங்களையும் நடத்தவும், அவருடைய போதனைகளை வெளியிடுவதுடன் பின் வரும் தலைமுறையினர்களுக்கு இவற்றை வைத்துக் காப்பாற்றுவதும், இந்நிறுவனங்களின் முக்கியப் பணிகளாகும்.

நான்கு அற நிறுவனங்களில் ஒன்று, "கிருஷ்ணமூர்த்தி நிறுவனம் (இந்தியா - KFI)" - இதன் தலைமைச் செயலகம், சென்னை கிரீன் வேஸ் சாலை வசந்த விஹாரில் 1928இல் ஜே. கிருஷ்ணமூர்த்தியாலும், அன்னிபெசண்ட் மற்றும் ஐந்து நபர்கள் அடங்கிய ஒரு குழுவாலும் "ரிஷிவாலி அறக்கட்டளை" என்ற பெயரில் நிறுவப்பட்டது. 1970இல் "கிருஷ்ணமூர்த்தி நிறுவனம், இந்தியா" என்று மாற்றப்பட்டது. இதன் குறிக்கோள், கிருஷ்ணமூர்த்தியின் படிப்பினையைச் சார்ந்து, கல்வி, ஆய்வு, கலாசாரம், மனிதநேயம், பண்பாடு, சுற்றுப்புற அமைப்புத் திட்டங்கள் இவற்றைச் செயல்படுத்துவதே ஆகும். மேலும் கிருஷ்ணமூர்த்தியின் வாழ்க்கை, பணி இவற்றைப் பற்றிய பொருள்களை சேகரிப்பது, பாதுகாப்பது, பதிப்பிடுவது ஆகிய வற்றிலும் அக்கறை கொண்டுள்ளது.

## பெற்றவளே! நீ வாழி!

**தில்லைகூத்தரசன்**

உதிரத்தை
உருமாற்றிப்
பாவாக்கி
ஆளாக்கிய
அன்னையே!

எதிர்வீட்டுப்
பித்தளையைத்
தேய்த்து
உன்
தங்கக் கரத்தில்
வைர ரேகைகள்
ஆவியானதோ?

உன்
அனுபவ முத்திரைகள்
அழகான
சுருக்கங்களா?

உன் கூன் விழுந்த
முதுகு! ஓ....!
அதுதான்-
என்
எதிர்காலமே?-
அட,
கேள்விக்குறி!

நான்-
தூங்கும்
போதெல்லாம்
விழித்திருந்த நீ
எப்படி!

நான்
விழிக்கத் தொடங்கியபோது-
மீளா நித்திரையில்!

### அறக்கட்டளையின் பொதுத் தொண்டுகள்

சென்னை, ரிஷிவாலி, பெங்களூர், பம்பாய், வாரணாசி, உத்தர்காசி ஆகிய இடங்களில் கல்விச் சாலைகளும், ஆய்வு மையங்களும், ஓய்வுக் கூடங்களும் நிறுவப்பட்டுள்ளன. கிருஷ்ணமூர்த்தியின் போதனைகளை விசாரணை செய்யவும், கற்கவும் உகந்தவாறு, இயற்கை எழிலும், அமைதியும் உள்ள இடங்களில் அமைக்கப் பட்டுள்ளன.

புத்தகங்கள், ஒலி, ஒளி நாடாக்களும் அவருடைய போதனைகளைப் பரப்புகின்றன.

சென்னையிலும், ரிஷிவாலியிலும், போதனைகளின் காப்புக் கூடம் உள்ளன.

வருடாந்திரக் கூட்டங்கள் ஏதாவது ஒரு மையத்தில் கூட்டப்படுகின்றன.

வருடந்தோறும் கலந்துரையாடல் தொடர்ச்சி மையத்தில் (centre for continuing dialogue) பல்துறை நிபுணர்கள், உள்நாட்டிலிருந்தும், பன்னாட்டிலிருந்தும் அழைக்கப்பட்டு கலந்தாராய்வுகள் நிகழ்த்தப்படுகின்றன.

புதிய கல்விக்கான கருத்தரங்குகள் பணியில், மாணவர்கள், ஆசிரியர்கள், பெற்றோர்கள் இவர்களைச் சந்திக்கச்செய்து, நடைமுறைப் பிரச்னைகளைப் பற்றிக் கலந்துரையாடல் நடத்தப்படுகின்றன. படைப்பாற்றல் உள்ள மனத்துடன், கூடியிருப்பவர்களை சமுதாய, கல்வி பிரச்னைகளைப் பற்றி சிந்திக்க அவகாசம் அளிக்கப்படுகிறது.

நிறுவனம், அதன் செயல்பாடுகளில் அக்கறை கொண்டவர்கள், தங்கள் பெயரைப் பதிவு செய்ய தொடர்பு கொள்ளவும், அதைப் புதுப்பிக்கவும் செய்கின்றனர்.

ராஜ்காட் காசியில் 500 மகளிர் பயிலும் பெண்கள் கல்லூரி, தங்கும் விடுதியுடன் இயங்குகிறது. விவசாயப் பண்ணை, விவசாயப் பள்ளி, நாட்டுப்புற இலவச மருத்துவமனையும் அங்கு உள்ளன.

ரிஷிவாலியில் இவ்வமைப்பு விவசாயப் பண்ணை ஒன்றை நடத்துகிறது. இதனைச் சுற்றியுள்ள கிராமத்து மக்களின் 100 குழந்தைகளுக்கு இலவசக் கல்வி, உணவு, உடை அளிக்கிறது. ❖

# சென்னை நல்ல சென்னை

டி. வி. ரங்கசாமி




1860இல் சென்னை கடற்கரைத் தெருவின் அமைப்பைக் காட்டும் புகைப்படம்.

"மெட்ராஸ்! நல்ல மெட்ராஸ்!!". இது "அனுபவிராஜா அனுபவி" திரைப்படத்தில் நகைச்சுவை நடிகர் நாகேஷ் பாடிய பாடல். படத்தில் தற்காலத்திய சென்னையிலுள்ள மாற்றங்கள், மனிதர்களின் ஏமாற்றங்களைக் குறித்துப் பாடிய பாடல். ஆனால் "மெட்ராஸ்! பழைய மெட்ராஸ்!" நமது சென்னை மாநகரின் பழம் பெருமைகளை இன்றைய இளந் தலைமுறையினர் அறியாமலே மறைந்து வருவதை மீண்டும் இங்கு நினைவு கூர்வதே "மெட்ராஸ்! பழைய மெட்ராஸ்!!

## புனிதமான "கூவம்" ஆறு!

கூவம் ஆற்றங்கரைப் பக்கமாக உள்ள சாலைகளில் செல்பவர்கள் தங்களது மூக்கை இறுகப் பிடித்துக் கொண்டு கடந்து செல்ல வேண்டிய நிலைமை இன்றுள்ளது! ஆனால் அதன் பழம்பெருமையோ...! சுமார் 300 ஆண்டுகளுக்குமுன்பு 1694இல் சென்னை மெரினா கடற்கரையின் அருகே "இரும்பு வாராவதி" கட்டாத காலம். சென்னை மாநகருக்குள் சரியான ரோடு வசதிகளே இல்லாத மிகக் கர்நாடகமான காலத்தில் சென்னையின் பரப்பளவு மிகக் குறுகியதே. நகரின் வடக்கே "கூவம்" என்ற ஆறும் தென்பகுதியில் "அடையாறு" என்ற இரு ஆறுகளும் வெள்ளப்பிரவாகத்தோடு ஓடின. அந்நாளில் "கூவத்திற்கு" பாவங்களைப் போக்கும் கூவம் என்ற சிறப்புப் பெயரும் உண்டு. 1787இல் சென்னையில் வாழ்ந்த வள்ளல் பச்சையப்ப முதலியார் "ஹாரீஸ் சாலை" உள்ள கோமளீஸ்வரன் பேட்டை வராக முதலித் தெருவில் வாழ்ந்து வந்தார். இவரது பெரிய வீடு ஒரு கோயில் அமைப்புப்போல இருக்குமாம். அந்நாளில் வள்ளல் பச்சையப்பர் அன்றாடம் புனித கூவம் ஆற்றில் நீராடியபின் நெற்றியில் விபூதி குங்குமத்தோடு இல்லம் திரும்பியதும் சிவலிங்க பூஜைகள் செய்யத் தவறினதே இல்லை. யாத்ரீகர்கள், சான்றோர்களும் இப்புனித கூவத்தில் நீராடிய பின்பு வள்ளல் பச்சையப்பரைச் சந்தித்து நன்கொடை பெறுவது வழக்கம்.

வெள்ளிக்கிழமை தோறும் தனது வீட்டிற்கு மிக அண்மையிலுள்ள கூவம் ஆற்றங்கரையில் ஒரு சிறு மரமண்டபத்தை ஜோடித்து, அதில் பஜனைப் பாடல்களைப் பாடச் செய்வதோடு, சேக்கிழாரின் பெரிய புராணத்தையும் நிகழ்த்துவாராம். காரணம் பெரிய பெரிய மகான்களும் புனித கூவத்தில் நீராடிய பெருமைகளைப் பச்சையப்பர் கேட்டறிந்தவராம். இத்தகவல்களைக் கர்ண பரம்பரையாகக் கேட்டவர்களுள் காஞ்சிபுரம் செவிலிமேடு திரு. கோ. புண்ணியகோடி முதலியார் ஒருவராவார். இவர் வேலூர் தோட்டப்பாளையம் அருகத்தம் பூண்டி விவேக விளக்கச் சங்கத்தைச் சேர்ந்தவராவார்.

வள்ளல் பச்சையப்பருக்குப் பின் சென்னையில் சிறிது காலம் தனது உறவினர் இல்லத்தில் வாழ்ந்து வந்த அருட்பெரும் கொடை வள்ளல் ஜோதி இராமலிங்க சுவாமியும் இதே புனித கூவத்தில் நீராடி சூரியோதயத்தைக்கண்டு அருட்பாக்களைப் பாடியதாகவும் கூறுவர். இப்படிப்பட்ட புனிதமான பெருமக்களைக் கொண்ட கூவத்தின் இன்றைய நிலைமை இங்கு விவரிக்க வேண்டுமோ?

வரைபடத்தில் 1798ஆம் ஆண்டு சென்னை நகரின் அப்போதைய விஸ்தீரணத்தையும், அதில் 'கூவம்', 'அடையாறு' இரு ஆறுகள் ஓடி கடலில் சங்கமமாவதையும் குறிப்பிட்டுள்ளனர்.

## வாயை ஊது!

குடி குடித்தவனை வாயைத் திறந்து ஊதச் சொல்லி அதிலிருந்து வரும் வாடையினால் அறிவது இந்நாளைய போலீஸ்காரர்களும் அனுசரிக்கும் ஒரு முறை. இம்முறையைப் போலீஸ்காரர்களைத் தவிர அந்நாளைய பட கோட்டிகளும் அனுசரித்து வந்தனர்! அந்நாளில் சென்னைப்

பட்டணம் "டோக்ளக் முனை" (அதாவது பாரிஸ் கார்னருக்கு "டோல் கேட் கார்னர்" என்பது காலப் போக்கில் "டோக்ளக் முனை" வழங்கலாயிற்று) யிலிருந்து "சந்தோமியான் முனை" (சேந்தோம் முனை)க்குச் செல்ல ரோடுகளே கிடையாது. அதோடு எவ்வித வாகன வசதிகளும் இல்லை. ஆனால் குதிரைகள் பூட்டிய "ஸாரட்டு வண்டிகள்", மனிதனை மனிதர்கள் சுமக்கும் பல்லக்குகள் மட்டுமே இருந்தன. இப்படிப்பட்ட "ஸாரட்டு வண்டிகள்", பல்லக்குகளில் பாமர மக்கள் செல்லக் கூடாது. பணம் கொடுத்தாலும் ஏற்றமாட்டார்களாம்.

எனவே மக்கள் பலர் "டோக்ளக் முனை"யிலுள்ள கடற்கரைப் பக்கமாக சென்று, அங்குள்ள வாடகைப் படகுகளில்தான் கடற்கரை ஓரமாகவே பயணம் செய்ய வேண்டும். அந்நாளில் கோட்டையிலுள்ள முகப்பு வாயிலிலிருந்து கடல் 150 அடி தூரத்திலேயே இருந்தது. அங்குள்ள படகுகளில் "சேந்தோம்" முனைக்குச் செல்ல ஒரு நபருக்கு கட்டணமாக 4 ரூபாய், 1 அணா 4 தம்பிடி (ரூ. 4–1–4) செலுத்த வேண்டும். படகில் பயணம் செய்பவர்கள் கள் குடித்தவராக இருத்தல் கூடாது. ஆகவே மற்ற பயணிகளின் நலன்களை அனுசரித்து படகோட்டி தங்கள் படகில் பயணம் செய்வோர்களை வாயை ஊதச் சொல்லிய பிறகே ஏற்றிக் கொள்வது வழக்கமாம். புகைப் படத்தில் அந்நாளில் (1860இல்) பீச்ரோடின் அமைப்பையும் தற்போதுள்ள 'பர்மா பஜார்' உள்ள இடங்கள் காலி மனையாகவும், சென்னை ராயபுரத்திலிருந்து வாலாஜாபாத்திற்கு 1856இல் போடப்பட்ட "இருப்புப்பாதை"யையும் காணலாம்.

## ராஜகோபாலன் பணம்! கோட்டை கோபாலன் பணம்!!

சுமார் 300 வருடங்களுக்குமுன்பு தங்கம்தான் நம் நாட்டு நாணயமாகப் பயன்பட்டு வந்தது. அவற்றுக்கு "ஹைதரி தங்க மோஹரா", "அஹமதி மோஹரா", "ஸித்திக் மொஹரா" எனப்படும். இதைத் தவிர "வராகன்" என்ற பெயரிலும் நாணயங்கள் புழக்கத்திலிருந்தன. "ராஜகோபாலன் பணம்", "கோட்டை கோபாலன் நாணயம்", "தலைச்சேரி பணம்", "சுல்தான் பணம்", "பாண்டிச்சேரி பணம்", "மராட்டா ரூபாய்" என்ற பெயர்களில் நாணயங்களுமிருந்தன. கிழக்கிந்தியக் கம்பெனியார் சென்னையில் காலடி வைத்தபின் 1791ஆம் ஆண்டிலிருந்து "ஆற்காடு ரூபாய்" நாணயத்தை மட்டுமே செலாவணியாகக் கொண்டிருந்தனர். அதோடு 'வராகன்' பணமும் புழக்கத்திலிருந்தது.

## 1798இல் சென்னையின் ஜனத்தொகை!

1798இல் சென்னையில் மட்டும் 3 லட்சம் பேர்தான் இருந்தார்கள். இவர்களோடு வெளிநாட்டிலிருந்து வந்த வெள்ளையர்கள் கூட்டமும் வந்திறங்கியது. இதனால் அந்நாளில் வீட்டு வாடகையும் ஏறிவிட்டதாம். வெள்ளையர்கள் சென்னைக்கு அதிகமாக வரத் தொடங்கினர். தாங்கள் தனியாக வீடுகட்டி வசிக்க அந்நாளில் நவாப் மன்னர்களிடமிருந்து தங்களுக்கென நிலங்களை "கிராண்ட்" மூலம் பெற்றுக் கொண்டனர். இப்போது நாம் பார்க்கும் "லாண்டர்ன்ஸ் கார்டன்", "மக்கேஸ் கார்டன்", "பிஷப் கார்டன்" என்ற இடங்களும், மற்றும் "ஸ்பிரிங் கார்டன்", மான்ஷியன் என்றழைக்கப்படும் ஜெமினி ஸ்டுடியோவிலும் அதைச் சுற்றியுள்ள இடங்களில் "லார்ட் கிளைவ்" வசித்து வந்தாராம்!

## ஆற்காடு நவாபுகளிடம் வேலைபார்த்த ஆங்கிலேயர்கள்

கிழக்கிந்தியக் கம்பெனியார்களைத் தவிர மேலும் பல வெள்ளையர்கள் சென்னை நகரில் வாழ்ந்து வந்தனர். இவர்களில் பலர் கொத்தனார்களாகவும், கோச்சு வண்டி ஓட்டுபவர்களாகவும், முடியலங்காரம் செய்பவர், காப்பிக்கடைக் காரர்களாகவும், சமையல் வேலை செய்யும் 'பட்லர'வும் தோட்டக்காரர்களாகவும், நம்மவர்களுக்கு ஆங்கிலத்தில் கடிதங்கள் எழுதித் தருபவர்களாகவும் இருந்தனர்.

ஆற்காடு நவாப்பினிடம் 4 வெள்ளையர்கள் கோச்சுவண்டி ஓட்டுநர்களாகவும், 8 பேர் "பியாண்டுகாரர்"களாகவும், இருவர் முடியலங்காரம் செய்பவர்களாகவும், உத்தியோகம் பார்த்து வந்தனர். இன்னும் எவ்வளவோ பழைமையான விஷயங்களைக் கொண்ட நமது சென்னை மாநகரத்தை "மெட்றாஸ்! பழைய மெட்றாஸ்" என்று கூறுவதில் நாம் பெருமை அடைகிறோம்.



## இன்றைய உலகம்

வயலுக்கும்
வரப்பிற்கும்
குருஷேத்திரம்.

நீருக்கும்
ஓடைக்கும்
மூன்றாம் உலகப் போர்.

மரத்திற்கும்
நிழலுக்கும்
மதச்சண்டை.

பாதைக்கும்
பாதங்களுக்கும்
பங்காளித் தகராறு.

விழிகளுக்கும்
பார்வைக்கும்
அந்தஸ்து பேதம்.

நகரத்திற்கும்
விரல்களுக்கும்
இடஒதுக்கீட்டுப் போர்.

உதடுகளுக்கும்
வார்த்தைகளுக்கும்
பதவிப்போர்.

இது –
இன்றைய உலகம்!

ஏ.எஸ்.எம். மங்கையர் செல்வன்

# வீரசாவர்கர்

ரகமி



[நம் இந்திய சுதந்திரப் போராட்ட வீரர் சாவர்கரின் 112ஆவது பிறந்த தினத்தை முன்னிட்டு அவரது பெருமைகளைக் கூறுவதே இச்சிறப்புக் கட்டுரை!]

நம் பாரத நாட்டு விடுதலைக்காக லண்டனில் வாழ்ந்த சில இந்தியப் புரட்சி வீரர்கள் பல போராட்டங்களை நிகழ்த்தினர். அந்த இளைஞன்மீதும் ராஜத் துரோகக் குற்றங்கள் சாட்டி, கோர்ட்டில் விசாரணையும் நடந்தது. சதிகார இந்தியப் புரட்சியாளர்களுடன் உடந்தையாக இருந்ததற்காக அந்த இளைஞனுக்கு ஆயுள் வரை 'தீவாந்தர தண்டனை' விதிக்கப்பட்டது. சிறை தண்டனையை அனுபவிக்க அந்நாளில் இந்திய சுதந்திரப் போராட்ட வீரர்களை "பூலோக நரகம்" என்றழைத்த அந்தமான் சிறையில் கொண்டு போய் அடைத்தனர்.

சிறையில் பல கடும் வேலைகளைச் செய்த அந்த இளைஞனின் உடலில் ஓடிய 'இந்தியன்' என்ற ரத்தத்தோடு, அதில் சுதந்திர உணர்ச்சியும் கலந்தோடியது! அதனால் அவன் தனது கைகளில் அகப்பட்ட கரித்துண்டு, அல்லது பச்சை இலைகளைக்கொண்டு தனது சிறைச் சுவர்களிலெல்லாம் "வந்தேமாதரம்!" "வந்தேமாதரம்!" என்றெழுதினான். இதனைக் கண்ட ஜெயில் அதிகாரிகள் அந்த இளைஞனின் இருகைகளை மேலே உயர்த்தி இரும்புச் சங்கிலிகளால் பிணைத்துக் கட்டியதோடு, அவனை நிர்வாணமாக்கி, கசையடிகளை மாறி மாறி, அடித்துக் கொண்டே "இனி 'வந்தேமாதரம்' எழுதுவியா? மாட்டேன் என்று சொல்!" எனச் சொல்லிச் சொல்லி அடித்தனர்.

பலமான அடிகளோடு அந்த இளைஞன் அத்தனை கசையடிகளையும் வாங்கிக் கொண்டே சிறிதும் அஞ்சாமல், "எனது தாய் நாடு பாரதம் சுயராஜ்ஜியம் அடையும் வரையில் அப்படித்தான் எழுதுவேன்! இதனால் எனது உயிர் போனாலும் போகட்டும்! வந்தே மாதரம்! வந்தே மாதரம்!!" என உரத்த குரலில் அவன் கர்ஜித்தது அங்குள்ள மற்ற சிறைக் கொட்டகைகளிலெல்லாம் எதிரொலித்தது! சிறை அதிகாரிகள் அடித்த கசையடிகளால் அவனது உடம்பில் ஏற்பட்ட தழும்புகளிலிருந்து ரத்தம் பீறிட்டது. அதனையும் பொருட்படுத்தாமல் மீண்டும் மீண்டும் "வந்தே மாதரம்!" எனக் கோஷமிட்ட அந்த இந்திய இளைஞன் தான் "வீரசாவர்கர்" என்பவன்.

பம்பாய் நாசிக் அருகிலுள்ள பாகூர் கிராமத்தில் 1883ஆம் ஆண்டு மே 28ஆம் தேதி "ஸித்பவன்" என்ற வைதிகக் குடும்பத்தில் தாமோதர் பந்த், ராதாபாய் தம்பதிக்கு இரண்டாவது புதல்வராகப் பிறந்தார் சாவர்கர். இவரது முழுப் பெயர் "விநாயக் தாமோதர் சாவர்க்கர்" எனப்படும். இவருடன் கணேஷ் பந்த் சாவர்கர், நாராயணராவ் சாவர்கர் என்ற இரு சகோதரர்களும், மைனாபாய் என்ற ஒரு சகோதரியும் உடன் பிறந்தனர். சொந்த கிராமத்தில் தொடக்கக் கல்வியை முடித்த சாவர்கர் பின்னர் நாஸிக் உயர் பள்ளியில் சேர்ந்தார். இளமையிலேயே மராட்டிய மொழியில் கவிதைகள் இயற்றும் திறமை பெற்றிருந்த சாவர்கர் அந்நாளில் ஆங்கிலேய ஆட்சிக்கு எதிராகக் கிளம்பிய சுதந்திரக் கனலில் தன்னையும் ஈடுபடுத்திக் கொள்ளத் தயாரானார்.

பள்ளியில் படிக்கும்போதே அவர் "மித்திரமேளா" என்ற ஒரு சங்கத்தை ஏற்படுத்தி அதில் தனது நண்பர்களை அங்கத்தினராகச் சேர்த்தார். நம் பாரத நாடு பரிபூர்ண சுயராஜ்ஜியம் அடைய வேண்டும் என்பதற்காக சங்கத்தின் இளைஞர்கள் எவ்விதத் தியாகங்களுக்கும் தயாராக இருக்க வீரசபதம் எடுத்துக் கொண்டனர்.

1901இல் சாவர்கர் மெட்ரிகுலேஷன் தேறியதும் புனேயிலுள்ள "ஃபெர்கூஸன் கல்லூரி"யில் சேர்ந்தார். கல்லூரியிலும் அவர், தான் முதலில் ஸ்தாபித்த "மித்திர மேளா" சங்கத்தையே "அபிநவ பாரத்" என்ற பெயரில் மாற்றி, கல்லூரி மாணவர்களோடு நாட்டின் விடுதலைக்காக பல புரட்சித் திட்டங்களை உருவாக்கினார். இதனால் அம் மாநிலத்து மக்களிடையே பெரும் பரபரப்பும் விழிப்பும் எதிரொலித்தன. ஒரு சமயம் புனேயில் "ஸர்வஜானிக்பா"வில் கல்லூரி மாணவரான சாவர்கர் ஆங்கிலேயரை எதிர்த்து பிரசாரம் செய்ததற்காக கல்லூரி முதல்வர் அம் மாணவனுக்கு 10 ரூபாய் அபராதம் விதித்தார். இதனை சாவர்கர் மிக்க அலட்சியமாகவே எண்ணினார்.

1905இல் அவர் சட்டக் கல்லூரி தேர்ச்சி பெற்றதும், பாரிஸ்டர் படிப்பிற்காக 1906 ஜூன் 8இல் "பெர்ஷியா" என்ற கப்பலில் இங்கிலாந்துக்குச் சென்றார். அங்கு லண்டன் நகரில் இந்தியப் பெரும் புரட்சியாளர் சியாம்ஜி கிருஷ்ண வர்மா என்பவர் தேசபக்தி இயக்கம் ஒன்றை நடத்தி வந்தார். அந்நாளில் இவருக்கே "இந்தியாவின் எரிமலை" என்ற சிறப்புப் பெயரும் உண்டு. மாணவன் சாவர்கர் இந்த இயக்கத்தில் சேர்ந்தார்.

மேலும் அச்சமயம் லண்டனில் தங்கியிருந்த இந்தியப்புரட்சியாளர்களான ஹரிதயாள், வீரேந்திரநாத் சட்டோபாத்யாயா, தமிழ் நாட்டைச் சேர்ந்த வ.வே.சு. ஐயர் ஆகியோரின் நட்பும் கிடைத்தது. சாவர்கரின் நண்பர்கள் வெளிநாடுகளுக்குச் சென்று வெடி குண்டுகள் தயாரிக்கும் முறை



லண்டனில் இந்தியப் புரட்சியாளர்கள்
(நிற்பவர்கள் இ.வ.) 1. வ.வே.சு ஐயர் 5. டி.எஸ்.எஸ். ராஜன்.
(இரண்டாவது வரிசை) 3. வீரசாவர்கர்
(கீழே உட்கார்ந்திருப்பவர்கள்) 3. மதன்லால் திங்கரா

களையும் கற்றிருந்தனர். இதில் வங்காளத்தைச் சேர்ந்த ஹேமா சந்தரும், தமிழ் நாட்டைச் சேர்ந்த எம். பி. டி. ஆசார்யா என்கிற திருமலாச்சாரியும் மிக முக்கியமானவர்கள். இவர்களெல்லாருமே ஜெர்மனியில் வாழ்ந்தாலும் தங்களது வாழ்க்கையை நம் பாரத நாட்டின் விடுதலைக்காகவே அர்ப்பணித்து விட்டனர்.

சாவர்கர் லண்டனிலும் ஆங்கிலேயரை எதிர்த்துப் பிரசாரங்களைச் செய்யவே அங்குள்ள ரகசியப் போலீசும் இவரைத் தீவிரமாகக் கண்காணித்தது. 1901 ஜுலை 1இல் லண்டனில் கர்ஸன் வைலியை இந்தியப் புரட்சிவீரரான மதன்லால் திங்கரா என்பவர் பட்டப்பகலிலேயே தன்னிடமிருந்த பிஸ்டலினால் சுட்டுக் கொன்றார். அதே ஆண்டு டிசம்பரில் இந்தியாவில் நாஸிக்கில் கலெக்டராக இருந்த ஆங்கிலேயன் ஏ.எம்.டி. ஜாக்ஸன் ஒரு நாடகக் கொட்டகையில் நாடகத்தை ரசித்துப் பார்த்துக் கொண்டிருந்த நேரத்தில் அவரை அனந்த கான் ஹேரே என்ற இளைஞன் சுட்டுக் கொன்றான். லண்டனிலுள்ள "ஸ்காட்லண்ட்யார்டு" ரகசியப் போலீஸ் தீவிரமாக புலன் விசாரித்ததில், இவ்விரு கொலைகளுக்கும் லண்டனில் பாரிஸ்டர் பரீட்சைக்குப் படிக்கும் மாணவன் சாவர்கரே மூலகாரணமாக இருக்கக் கூடும் என சந்தேகித்து அவரையும் கைது செய்தனர்.

இவ்விரு கொலைகள் சம்பந்தமாக இந்தியாவில் பம்பாயில் நடக்கும் விசாரணைக்கு அரசியல் குற்றவாளியாக சாவர்கரை கோர்ட்டில் ஆஜர் செய்ய லண்டன் போலீஸ் அவரை 1910 ஜுலை 1ஆம் தேதி "எஸ்.எஸ். மோரியா" என்ற கப்பலில் பலத்த காவலோடு அனுப்பி வைத்தனர். ஜுலை 7ஆம் தேதி அக்கப்பல் மார்சேல்ஸ் துறைமுகத்திற்குள் செல்லாமல் கரையிலிருந்து சற்றுத் தள்ளியே கடலில் நின்றது. இச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி எப்படியாவது கப்பலிலிருந்து பிரான்ஸ் நாட்டு எல்லைக்குள் சென்று விடத் திட்டமிட்டார் சாவர்கர். உடனே அவருக்கு ஒரு யோசனையும் பளிச்சிட்டது. தன்னுடன் பாதுகாப்பிற்காக வந்த போலீசிடம், சாவர்கர் அவசரமாகக் கழிப்பறைக்குச் செல்ல வேண்டும் என்றதும் அவரைக் கழிப்பறைக்குச் செல்ல அனுமதித்ததோடு, அந்த அறையின் வெளியே போலீஸ் காவலுடன் நின்றது.

கழிப்பறைக்குள் சென்ற சாவர்கர் சாதாரண முறையில் கதவின் உள்பக்கம் தாளிட்டுக் கொண்டார். நெடு நேரமாகியும் கழிப்பறையினின்று வெளிவராததையறிந்த சாவர்கர் பற்றிச் சந்தேகப்பட்ட போலீஸ் கதவைத் திறக்க முயன்றபோது அக் கழிப்பறையின் கதவு உட்பக்கமாகப் பூட்டியிருப்பதை அறிந்து, அதிலுள்ள கண்ணாடிக் கதவை உடைத்து உள்ளே சென்று பார்க்கையில் சாவர்கரை அங்குக் காணோம்! போலீசையும் ஏமாற்றி விட்டு அந்த சில நிமிடங்களில் சாவர்கர் கழிப்பறைக்குள்ளிருந்து ஜன்னல் வழியாக தனது உடலைக் குறுக்கி கடலில் குதித்து வெகு தூரம் வரையில் நீந்திச் சென்று விட்டார்.

சாவர்கர் போலீசிடமிருந்து தப்ப நினைத்தது உயிருக்குப் பயந்தே அல்ல. இந்தியாவிலுள்ள ஆங்கிலேயருடைய ஆட்சியை ஒழித்துக்கட்ட பிரான்ஸ் நாட்டிலிருந்த தன்னைப் போன்ற புரட்சியாளர்களைச் சந்திக்கவே இந்த யுக்தி. தவிர அந்நாளில் இந்தியப் புரட்சியாளர்களுக்கு பிரான்ஸ் தகுந்த புகலிடமும் ஆதரவும் அளித்தது. இதனால் பிரான்ஸ் தேசத்து எல்லைக்குள் சென்று விட்டால், பிரிட்டிஷ் போலீஸ் தன்னைக் கைது செய்ய முடியாது என்று அவர் கருதினார்.

தங்களை ஏமாற்றி மிக்க தைரியத்தோடு கடலில் குதித்து

## பறவைகள்

பொன்மணி

பூமியைத் துளைத்துக் கொண்டு
புதருக்குள் போகும் வேர்கள்
நல்
உறவையும் உணவையும்
தேடும் பறவைகள்!
மண்பாடுகளில்
மரத்தின்
பண்பாடு பார்த்து,
எடுத்துக் கொடுக்கும்
அவற்றின் அலகுகள்!



கிளைகளின் கொண்டையில்
அமரும் பறவைகள்
சிக்கெடுத்து
சிலாகித்துக் கொள்ளும்
அந்தக் கவிதைப் பறவையின்
கருத்து வேர்களை
இதயத்தில் எழுதுவது
உணர்ச்சியின் வேர்கள்!
இப்படி -
மரத்தின் மேலும் கீழும்

வேர்களும் பறவைகளும்
விரவிக் கொள்ள...

இந்தப் பூமியைப் பாருங்கள்:
எதுவும் தெரியாததுபோல-
தவம் செய்து கொண்டிருக்கிறது!-
நம் வாழ்க்கையைப் போல!....

---

பிரான்ஸ் எல்லைக்குள் தப்பிச் சென்ற சாவர்கர் பற்றி மேலும் ஆத்திரம் அடைந்த பிரிட்டிஷ் போலீஸார் அவரை எப்படி யாவது கைது செய்யும் திட்டத்தி லேயே இருந்தனர். இதற்குள் சாவர்கர் பிரான்ஸ் எல்லைக்குள் சென்று அங்குள்ள இந்தியப் புரட்சியாளர்களைச் சந்திப்ப தற்குள் பிரிட்டிஷாரின் பணத்தின் ஆசையால் சில பிரெஞ்சுப் போலீஸ்காரர்கள் சாவர்கரைப் பிடித்து மீண்டும் பிரிட்டிஷ் போலீ சிடம் ஒப்படைத்தனர்.

இது விவரம் அறிந்த பிரான்சி லிருந்த இந்தியத் தீவிரவாதிகள் பெரிதும் ஏமாற்றமும் வருத்தமும் அடைந்ததோடு அப்புரட்சிக்காரர் களில் ஒருவரான மேடம் காமா அம்மையார், பிரான்ஸ் தேசத்து எல்லைக்குள் நுழைந்த சாவர்கரை அத்து மீறிக் கைது செய்தது சட்டப்படி செல்லாதென பிரிட்டி ஷார் மீது உலகக் கோர்ட்டில் விசேஷ வழக்குத் தொடர்ந்தார். ஆனால் தீர்ப்பு ஒருதலைப்பட்ச மாக பிரிட்டிஷ் பக்கமே வெற்றி பெற்றது. மேலும் இறுதி விசா ரணைக்காக என சாவர்கரை போலீஸார் பலத்த காவலோடு ஜூலை 10ஆம் தேதி பம்பாய்க்கு அழைத்துச் சென்றனர்.

சாவர்கர் மீதான வழக்கு 1910 செப்டம்பர் 15இல் தொடங்கி டிசம்பர் 23இல் கூறிய தீர்ப்பில் சாவர்காரின் ராஜத்துரோகக் குற் றத்திற்காகவும், சதிகாரக் கும்ப லுக்கு உடந்தையாக இருந்ததற் காகவும் அவருக்கு ஆயுட்காலம் முடிய தீவாந்தர தண்டனை எனத் தீர்ப்பாகியது. தீர்ப்பைக் கேட்ட துமே சாவர்கர் "எங்கள் பாரத நாடு விடுதலை அடையத் தியாகங் களைச் செய்ய வேண்டும். அதில் எனது பங்கை நிறைவேற்றி வரு கிறேன். தீர்ப்புக்கு நன்றி!" என ஓங்கிய குரலில் கூறியதுமே, கோர்ட்டே நிசப்தமாகியது. அனை வருமே வியந்தனர்.

சில மாதங்கள் இந்தியச் சிறை களில் அடைபட்ட வீரசாவர்கர் பின்னர் 1911ஆம் வருடம் ஜூன் 27இல் "எஸ்.எஸ்.மகாராஜா" கப் பல் மூலம் இந்தியாவின் கிழக்கே யுள்ள வங்காள விரிகுடாக் கடலி லுள்ள அந்தமான் என்ற தீவில் இருட்டறைச் சிறையில் அடைக்கப் பட்டார்.

சிறையில் கொடுமையான வேலைகளைச் செய்ததோடு, சாவர்கர் கையிலகப்பட்ட கரித் துண்டுகளினால் சிறைச் சுவர்களி லெல்லாம் "வந்தேமாதரம்! வந்தே மாதரம்! என்ற இந்திய தாரக மந்திரச் சொல்லை எழுதியதற் காக கசையடிகளும் பெற்றார். சுமார் 11 ஆண்டுகள் அந்தமான் சிறையிலிருந்த சாவர்கர் மற்ற கைதிகளுக்கு சுத்தம் சுகாதாரம் போன்றவற்றைப் போதித்தார். சிறையில் அவருடைய உடல் நிலை யில் சற்று பாதிப்பும் ஏற்பட்டது. உடனே அன்றைய அரசு சாவர் கரை அந்தமான் சிறையிலிருந்து இந்தியாவிலுள்ள அலிபூர் சிறை யிலும் பின்னர் ரத்தினகிரி சிறை யிலும் அடைத்தனர். அச்சமயத் தில் அவர் "ஹிந்துத்துவம்" என்ற நூலையும் எழுதினார். அப்போது அவர் "இந்து", "இந்துமதம்" என்ற விஷயங்களைப் பலர் அறியச் செய்யப் பெரிதும் பாடுபட்டார். இவரது கருத்தை இந்தியாவி லுள்ள அத்தனை "இந்து மகா சபை"யினரும் ஏற்று ஒன்றுபட லாயினர். பின்னர் சாவர்காரின் பெருமைகளை அறிந்து 1937 மே 10ஆம் தேதி சிறையினின்று விடு தலையானார்.

1947 ஆகஸ்ட் 15இல் நம் பார தம் சுதந்திரம் அடைந்தது. சுதந் திரப் போராட்டங்களில் ஈடுபட்டு சிறையில் அடைபட்ட அத்தனை தியாகிகளுக்கும் பூரண விடுதலை கிடைத்தது. அதுபோல வீர சாவர் கருக்கும் பூரண விடுதலை கிடைத் தது. ஆனால் 1948ஆம் ஆண்டு ஜனவரி 30இல் நமது தேசப்பிதா மகாத்மா காந்திஜியை கோட்ஸே என்ற இளைஞன் பிர்லா மாளிகை யில் சுட்டுக் கொன்றான். இந்த வழக்கில் சந்தேகத்தின்பேரில் சாவர்கரையும் சம்பந்தப்படுத்தி அரசாங்கம் வழக்கும் தொடுத் தது. இந்த வழக்கை விசாரித்த நீதிபதி ஆத்மசரண் தனது தீர்ப் பில்,"சாவர்கரை அவரது பெருமைக்கும், தகுதிக்கும் எவ் விதக் களங்கமும் இன்றி விடு தலை செய்கிறேன்!" எனக் கூறி னார்.

1964இல் வீர சாவர்காரின் உடல்நலன் குன்றியது. உணவு எதுவுமே சாப்பிடாமல் திரவ உணவே அருந்தினார். அதே ஆண்டு பிப்ரவரி மாதம் 26ஆம் தேதி அவரது உடல்நிலை மோச மடைந்து அன்று காலை 11 மணிக்கு காலமானார். அப்போது அவ ருக்கு வயது 81. நம் பாரதநாடு விடுதலை அடைய தனது 15ஆம் வயதிலேயே அவரது உள்ளத் திலே ஊன்றிய "சுதந்திரப் பயிர்" முளைத்து பெரிய விருட்சமாகி பலர் அறிய நின்றாலும் வீர சாவர்காரின் பெயரையும் பெருமை களையும் அறிந்தோர் வெகுசிலரே. ஆனால், அவருடைய 112ஆவது பிறந்த நாளில் அவரை நினைவு கூர்ந்து அஞ்சலி செலுத்திவருவது இந்தியரின் கடமையல்லவா?

# தமிழில் தவறுகளை அறிவோம்

டாக்டர் தி. முத்து கண்ணப்பர்

மூச்சும் வீச்சும்:

ஒரு செயலை அல்லது காரியத்தைச் செய்து முடித்தல்-அதாவது விரைவாக ஒரே முயற்சியாகச் செய்து முடித்தலைக் குறிக்கின்றபோது, இச்சொற்களைப் பொதுவாகப் பயன்படுத்துவது உண்டு. 'ஒரே மூச்சில் செய்து முடிக்கப்பட்டது' என்றுதான் வழக்கமாகச் சொல்வதுண்டு. கடந்த சில காலமாக 'ஒரே வீச்சில் செய்து முடிக்கப்பட்டது' என்று வழங்கப் படுகிறது. உண்மையில் 'மூச்சும்' 'வீச்சும்' செயல் செய்து முடித்தலில் ஒரே பொருளைத் தான் குறிக்கும். 'At a stretch' என்னும் ஆங்கிலச் சொல்லின் பெயர்ப்புத்தான் 'வீச்சு' என்பது. அது 'முயற்சியின் ஒரு விடா மூச்சளவு' என்றுதான் பொருள்படும். English Tamil Dictionary by A.C. Chettiar – பக் 1014) 'At a stroke' என்று சொன்னாலும் இதே பொருளைத்தான் குறிக்கும். 'முயற்சியின் ஒரு மூச்சு' என்கிறது English Tamil Dictionary by A.C. Chettiar.

ஆனால் இப்படிப் பிரித்துப் பயன்படுத்துவதிலும் ஓர் உண்மை உள்ளது. வழக்கத்தில் இரண்டும் ஒரு பொருளையே குறிப்பதாகப் பயன்படுத்தி வந்தாலும் அவற்றிற்குள் உள்ள வேறுபாட்டைச் சிலர் ஆழமாகக் கண்டிருக்கின்றனர். மூச்சை அடக்கி (தம்பிடித்து என்பார்கள்) ஒரு செயலைச் செய்துமுடித்துப் பின் மூச்சை விடுவதுண்டு; ஒரு 'சுமையான பொருளை ஒரே மூச்சில் தூக்கி வைத்தேன்', 'அதனை ஒரே மூச்சில் இழுத்துப்போட்டேன்' என்று சொல்வதுண்டு. அப்படியென்றால் – அப்பொருளைத் தூக்கும்போது மூச்சை உள்ளடக்கி அதை வைத்ததும் மூச்சு வெளியே விடப்படும். மூச்சை உள்ளடக்கினால் உடலின் முழு பலத்தையும் திரட்டமுடியும். மூச்சை வெளியே விட்டால் அந்த வலிமை சிறிது தளரும் அல்லது குறையும். அத்தகைய இடங்களில் 'ஒரே மூச்சில்' என்னும் தொடரைப் பயன்படுத்தலாம்.

'வீச்சு' என்பது நீட்டல் அளவை அல்லது விரித்தல்-அகலத்தைக் குறிக்கும். 'அந்நூலை ஒரே வீச்சில் படித்து முடித்தேன்' என்றால் விடாமல் தொடர்ந்து முயன்று படித்து முடித்து விட்டேன். 'அந்த வேலையை ஒரே வீச்சில் செய்துமுடித்தேன்' என்றால் விடாது தொடர்ந்து அவ்வேலையைச் செய்துமுடித்தமையைக் குறிக்கும். இவ்விடங்களில் 'ஒரே மூச்சில்' என்னும் சொல் அவ்வளவு பொருத்தமாக இல்லையென்பது சிலர் கருத்து. "ஒரேமூச்சில் அதாவது மூச்சை அடக்கிக் கொண்டு படித்து முடிக்கவோ அல்லது ஒரு வேலையைச் செய்து முடிக்கவோ எப்படி முடியும்?" என்று கேட்பார்கள்.

நுணுக்கமாகப் பொருள் காணும்போது இரண்டு சொற்களுக்கும் இடையே வேறுபாடு உள்ளது என்றாலும் வழக்கில் அவை இரண்டுமே ஒரே பொருளை - அதாவது 'தொடர்ந்து விடாமல் முயன்று செய்வது' என்னும் பொருளைத்தான் குறிக்கும்.

எனவே, ஒரே மூச்சில் செய்தாலும் ஒரே வீச்சில் செய்தாலும் சரியென்றே ஒத்துக் கொள்வோம்.

நேரம்-காலம்:

இப்பொழுது நேரம் (காலம்) பற்றிய சில செய்திகளை அறிவோம். 24 மணி நேரம் கொண்டது ஒரு நாள். நேரத்தைக் காட்டும் கருவி கடிகாரம். அதில் 12 எண்கள் உள்ளன. பகல் 12 மணி; இரவு 12 மணி. 60 நிமிடங்கள் கொண்டது ஒரு மணி. நிமிஷம் என்னும் வட மொழிச் சொல்லைத் தமிழில் முறைப்படி 'நிமிடம்' என்று 'ஷ'வை 'ட'வாக்கி வழங்குகிறோம். அது சம்ஸ்கிருதச் சொல் என்பதற்காக, 'நிமிடம்' என்று கூறுவதற்கும் மறுத்துச் சிலர் 'மணித்துளி' என்று கூறுகின்றனர், தூயதமிழாக்கிவிட வேண்டும் என்னும் எண்ணம் உள்ளவர்கள். 'மணித்துளி' என்பது பொருத்தமானதா என்பதைச் சற்றுச் சிந்திப்போம். 'துளி' என்னும் சொல் பொதுவாக நீர்த்திவலையைத்தான் குறிக்கும். 'பனித்துளி', 'மழைத்துளி' என்றுதான் சொல்லுகிறோம். 'விசும்பின் துளி வீழினல்லால் மற்றாங்கே பசும்புல் தலை காண்பதரிது' என்பது குறளடி. ஆதலின் மணிக்குத் துளியுண்டா? அப்படிச் சொல்வது சரியாகுமா? 'நிமிஷம்' என்பதைத் தமிழ் முறைப்படி 'நிமிடம்' என்றே சொல்வதில் தவறு ஏதும் இல்லையே!

மணியை – நிமிடத்தைக் குறிக்கும்போது இன்னொன்றையும் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும். ஆங்கிலத்தில் 5 minutes, 10 minutes, 15 minutes, 30 minutes, 45 minutes என்று சொல்கிறோம். ஆனால் 15 நிமிடம் 30 நிமிடம், 45 நிமிடம் என்று தமிழில் சொல்வது சரியன்று. ஆங்கிலத்தில் அப்படிச் சொல்வது மரபாகலாம். தமிழில் அப்படிச் சொல்வது சரியன்று. 15 நிமிடம், 30 நிமிடம், 45

நிமிடம் ஆகியவற்றைக் கால், அரை, முக்கால் என்று சொல்லலாமே. (எ-டு) : மணி ஒன்றே கால்; இரண்டரை; மூன்றே முக்கால் - இப்படிச் சொல்வதுதான் நல்ல தமிழ் முறை. ஏனைய நிமிடங்களை வேண்டுமானால் நிமிடம் என்றே சொல்லலாம். (எ-டு) : ஒன்று பத்து; இரண்டு இருபத்தைந்து... இப்படிப் பிறவும்.

இங்கு இன்னொரு செய்தியும் குறிப்பிடற்குரியது. ஒரு நாளைக்கு 24 மணி. 1 முதல் 12 வரைதான் பொதுவாகக் குறிப்பிடுவோம். மணி ஒன்று, இரண்டு... பன்னிரண்டு என்று. மணியோடு நிமிடத்தையும் குறிப்பிடும்போது முதலில் 'மணி' என்னும் சொல்லைச் சேர்த்து நிமிடத்தைப் பின்னர் உடன் சொல்லவேண்டும். (எ-டு) : மணி ஒன்று முப்பத்தைந்து; மணி பன்னிரண்டு 50 என்று. ஆனால், இதனை மாற்றி 'ஒன்று முப்பது மணி', 'பன்னிரண்டு 50 மணி' என்று சொல்வது அவ்வளவு சரியாகாது. ஒரு நாளைக்கு மொத்தம் 24 மணி நேரம்தானே. 30 மணி, 50 மணி எங்குள்ளது? வேண்டுமானால் மணியை முதலில் கூறிப் பின்னர் இத்தனை நிமிடம் என்று சொல்லலாம். (எ-டு) : இரண்டு மணி 40 நிமிடம். அல்லது மணி 2.40. இதனை நன்கு புரிந்து கொள்ள வேண்டும், முறைப்படி கூற எழுத வேண்டும்.

**மங்கலம்-மங்களம்:**

'மங்கலம்' என்னும் சொல்தான் சரியான தமிழ்ச் சொல். இது 'மங்களம்' என்று திரிந்து பரவலாக வழங்கப்படுகிறது.

மங்கலம் என்னும் சொல்லுக்கு, நற்செயல், நலம், நன்மை, சுபம், திருமணம், தாலி, சிறப்பு, வாழ்த்து முதலிய பல பொருள்கள் உண்டு.

'மங்கலம்' என்ப மனை மாட்சி', என்பது குறள். (60)

'மங்கல வாழ்த்துப் பாடல்' என்பது சிலப்பதிகாரத்தின் முதற்பகுதி.

மங்கல அணி, மங்கல நாண், மங்கல மடந்தை, மங்கல வாழ்த்து, மங்கலத் தாசியர் முதலிய சொற்களையும் சிலப்பதிகாரத்தில் காணலாம்.

'மதிநாள் முற்றிய மங்கலத் திருநாள்', என்கிறது மணிமேகலை.

மங்கல மொழி முதலிய சொற்களையும் மணிமேகலை உரையில் காணலாம்.

'மங்கல மங்கையராய் மன்னவர் கன்னியராய்' என்கிறது பெருந்தொகை என்னும் நூல் (969)

'நங்கை கற்கும் மங்கலக் கருவி' என்கிறது பெருங்கதை என்னும் காவியம் (34:171)

'மங்கலக் கிழமை தன்னில்கைப்பன கொடுத்து' என்கிறது யசோதர காவியம் (2:58)

மங்கலக் கூத்து, மங்கலத் துகில், மங்கலப் பெருங்கதை, மங்கல மணிச் சிறப்பு, மங்கல மரபு, மங்கலமணி, மங்கலக் கருவி முதலிய சொற்களை சீவகசிந்தாமணியில் காணலாம்.

சங்க இலக்கியங்களிலும் 'மங்கலம்' என்றே பலவிடங்களில் குறிப்புள்ளன.

'மங்கல மகளிர்' என்னும் சொல் புறநானூறு 332ஆம் பாடலில் உள்ளது.

'மங்களம்' என்னும் சொல்லே சிறந்த, குறிப்பிடத்தக்க தமிழ்க் காவியங்கள், நூல்கள் - எவற்றிலும் காணப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது.

இந்த **மங்கலம்** என்னும் அழகிய தமிழ்ச் சொல் மங்களமாகி தமிழ்ப் பேச்சிலும் எழுத்திலும் கடந்த பல ஆண்டுகளாகக் களிநடம் புரிந்து வருவது வியப்பாகவே உள்ளது. 'மங்கலம்' என்பதுதான் சரி, 'மங்களம்' என்பது தவறு என்று சொன்னாலே இப்போது பலர் ஏற்றுக்கொள்ள மறுக்கும் நிலையும் உள்ளது.

'மங்களாசாசனம் செய்யப்பட்டது' என்று வைணவ நூல் உரையில் காணப்படுகிறது 'வழிபாடு! என்னும் பொருளை அது உணர்த்தும். 'மங்கலாசாசனம்' என்னும் சொல்தான் மங்களாசாசனமாகத் திரிந்துள்ளது என்றுதான் சொல்லவேண்டும்.

இறைவழிபாட்டுக் கூட்டங்களிலும் (பஜனைக் கூடங்கள்) 'பாகவதர் கச்சேரி' முதலிய நிகழ்ச்சிகளிலும் இறுதியில் மங்களம் பாடுவது வழக்கமாக உள்ளது. அதுவும் உண்மையில் 'மங்கலம் பாடுவது' என்பதன் திரிபுதான் என்பதில் ஐயமில்லை. 'மங்கலம்' என்பது சுபம் என்னும் பொருளையும் உணர்த்தும். முடிவில் சுபம் என்று சிலர் குறிப்பிடுவதும் இங்கு கருதத்தக்கது.

சம்ஸ்கிருதம், இந்தி முதலிய மொழிகளில் கூட 'மங்கல', 'மங்கல்' என்னும் சொல்தான் வழங்கப்படுகிறது, 'மங்கள', 'மங்கள்' என்றல்லை என்பது குறிப்பிடத்தக்கது.

எனவே, **'மங்கலம்'** என்பதுதான் சரியான தமிழ்ச்சொல்; மங்களம் அன்று. தமிழே சிறந்த மங்கல மொழிதானே! இனிச் சொல்லிலும், எழுத்திலும் மங்கலமே முழங்கட்டும்!

# தனிமரத் தோப்பு

## ராஜேந்திரகுமார்



டிக்கென்ற சின்ன ஓசையைத் தொடர்ந்து அந்த வராண்டாவைப் பளீரென்று ஒளிர வைத்தன விளக்குகள்.

"அம்மா" என்ற குரலுக்குத் திரும்பியவளின் நெற்றியில் வெறுமை இருந்தது. கலைந்து தொங்கும் கேசம் இடுப்பைத் தொட்டது. ஒரு விதவைக் கோலத்துக்காக வெள்ளை வெளே ரென்ற நைட்டி அணிந்திருந்தாள்.

விதவை! அவள் விதவையாகி நின்று பார்த்தாள்.

"அம்மா..."

"என்ன ராஜாத்தி?" என்றவள், "என்ன இவ்வளவு சீக்கிரமா எழுந்துட்டே?"

"நீங்க நடமாடற சத்தம் கேட்டதும்மா. காப்பி போடலாமான்னு கேட்க வந்தேன்."

"இப்ப மணி என்ன?"

"அஞ்சரை. விடியப் போகுது."

"அப்ப சரி. காப்பி கலந்து கொண்டு வா" என்றவள் அந்த ராஜாத்தி படியிறங்கிப் போனதும் –

மீண்டும் நினைவை நழுவ விட்டாள்.

அன்று ஒரு நாள்... "ஆச்சு, இன்னும் நாலே நாளிலே கிளம்பினால்தான் ஸ்வீஸுக்குக் காலத்தோடப் போய் சேர முடியும். இன்னைக் கும் நாளைக்கும் விடிய விடிய சிவராத்திரி தான். நீ போய்த்தூங்கு அனாமிகா!"

சலிப்புடன் திரும்பி நடந்தாள். "குட் நைட்".

ஏதோ கவனமாக அவர் சொன்ன "குட் பை"க்குத் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தாள்.

"குட் பைன்னு சொல்லாதீங்க. ஸே.. குட் நைட்!"

"அதானே சொன்னேன். ஓ.கே. குட் நைட்!" என்றவர் படிப்பதிலும் எழுதுவதிலும் இறங்கி விட்டார்.

நின்று நின்று கால் கடுத்துப் போய் தூங்க முயன்று தோற்றுக் கொண்டிருந்தாள் அனாமிகா.

மறுநாள் விடிய விடிய இந்த ராஜாத்தி தான் உசுப்பி எழுப்பினாள். "அம்மா... அம்மா.. வந்து ஐயாவைப் பாருங்கம்மா" என்றவளின் குரலில் இருந்த பரபரப்புக்கு போர்வையை உதறி விட்டு நிமிர்ந்தாள்.

"ஏன்? என்ன ஆச்சு?"

"என்னன்னு தெரியலைம்மா. படிக்கட்டில உட்கார்ந்து துடிக்கிறாரு. பேச்சுக் கூட வரலை மூச்சைக் கூட வாயாலதான் திணறி திணறி விட்டிட்டு இருக்கார்."

கட்டிலை விட்டிறங்கியவள் செருப்பை மாட்டும் நினைப்புமின்றி ஓடினாள்.

பாதி மாடிப் படியிலேயே சுவரில் சரிந்து அமர்ந்திருந்தார்.

இரண்டு படிக்கொருக் காலாக தாண்டி குதித்து நெருங்கினாள்.

"என்ன? உங்களுக்கென்ன?"

"ராத்திரி நெஞ்சு வலி வந்தது. மாத்திரை சாப்பிட்டேன். ஆனா அடங்கலை. ஊசியும் போட்டுக்கிட்டேன். இன்னும் இன்னும் சுருக் சுருக்கென்று குத்துது."

"ஏன் படியிறங்கி வந்தீங்க? என்னை ஏன் கூப்பிடலை?"

"அசந்து தூங்கிட்டிருந்தே. நானே போன் பண்ணி டாக்டரைக் கூப்பிடலாம்னு இறங்கி வந்தேன். இதுக்கு மேலே நகர முடியலை."

"எத்தனை மணிக்கு?"

"இரண்டு, இரண்டரை இருக்கும்."

"மை காட்! மூணு மணி நேரம் இப்படியேவா துடிச்சுக்கிட்டு இருக்கீங்க? கூப்பிட்டிருக்கக் கூடாதா?"

பரிதாபமாக வாயைக் காட்டி கைகளால் மறுத்தார்.

"டாக்டர்... டாக்டரைக் கூப்பிடு."

"ஐயோ... டாக்டர் நாகர்கோயில்லேர்ந்து தானே வரணும்?"

அவர் புற விரல்களை அசைத்து 'போ போ' என்பது போல காட்டவே அவசரமாக ராஜாத்தியின் உதவியுடன் படியிறங்கி அவரை சோபாவில் படுக்க வைத்தாள்.

அவசரமாக நாகர்கோயிலுக்கு லைன் போட்டாள். அது விடியற்காலை நேரமானதனால் உடனே லைன் கிடைத்தது. டாக்டரும் கிடைத்தார். இவள் அவசரமாய் சொன்னதை எல்லாம் கேட்டு விட்டுச் சொன்னார் –

"உடனே புறப்பட்டு வரேன். அதுவரை நீங்க அரை மணிக்கு ஒரு தரம் இன்ஜெக்‌ஷனைப் போட்டுக்கச் சொல்லுங்க."

"டாக்டர் வந்துகிட்டிருக்கார். அரைமணிக்கொருதரம் ஊசி போட்டுக்கச் சொன்னார்."

முதல் ஊசியை சரளமாகப் போட்டுக் கொண்டவர் – இரண்டாவது ஊசிக்குத் துடித்துப் போய் விட்டார். புலம்பினார்.

"மாட்டேன். நான் சாக மாட்டேன். எனக்கு சாகப் பிடிக்கலை. நான் சாகக் கூடாது."

"பயப்படாதீங்க. டாக்டர் இப்ப வந்துடுவார்."

'இருக்கேன்... நான் இருந்தே ஆகணும்' என்றாரே தவிர –

டாக்டர் வருமுன்பே – அவசரமாகப் போய் விட்டார்.

அந்தக் கடைசி நிமிடங்களில் கூட –

"எனக்கிருக்கிற வருத்தமெல்லாம் என்னோட தீசீஸை முடிக்காமல் போகிறேனே. அரைகுறையா விட்டுட்டுப் போகிறேனே" என்றுதான் புலம்பினாரே தவிர –

"உன்னை விட்டுப் போகிறேனே" என்று ஒரு வார்த்தைகூட சொல்லாமல் போனார்.

வந்து பார்த்து அவசரமாகச் சோதித்த டாக்டர் கை விரித்து விட்டார். "ஸாரி... ஹி இஸ் நோ மோர். மூளையில் முக்கிய நரம்பு ஒண்ணு வெடிச்சுச் செத்துப் போயிட்டார்."

அனாமிகா பார்த்தாள். பார்த்துக் கொண்டே நின்றாள்.

யாரோ படி ஏறி வரும் ஓசை கேட்டு சரேலென நினைவுக்குத் திரும்பினாள் அனாமிகா.

காப்பியுடன் படி ஏறி வந்து கொண்டிருந்தாள் ராஜாத்தி.

"ராஜாத்தி, ராத்திரி போன் மணி அடிச்சுதே. யார் பேசியது. அட்டெண்ட் பண்ணினாயா?"

"ஆமாம்மா" என்றவள் நீட்டிய தட்டிலிருந்த காப்பிக் கோப்பையை எடுத்துக் கொண்டாள்.

"யாரு? சினிமா கம்பெனிகாரங்களா?"

"அவங்கதான் வரல்லேன்னு நேத்து காலையிலேயே போன் பண்ணி சொல்லிட்டாங்களே."

"வேற யாரு?"

"யாரோ – ரிசர்வ் பண்ணாமல் நேராக வந்தால் காட்டேஜ் கிடைக்குமான்னு கேட்டாங்க. வாங்கன்னு சொல்லிட்டேன்."

"யாராம்?"

"பேரு சொன்னாங்க. குறிச்சு வைச்சிருக்கேன். விடிய விடிய வந்துடறேன்னாங்க. இப்ப வர்ற நேரம்தான்."

"மானேஜரை எழுப்பி பேசச் சொல்றது தானே?"

"பொண்ணுக்குக் கல்யாணம்னு பத்து நாள் லீவு கேட்டு நீங்கதானே அனுப்பினீங்க?"

"ஆமாம்...ஆமாம்...மறந்துட்டேன்."

நாற்காலியில் அமர்ந்து கொண்டு காப்பியைக் குடிக்க ஆரம்பித்தபோது –

கிழக்கு வெளுக்கத் தொடங்கியிருந்தது.

இந்திய நேரத்துக்கு நல்ல இரவு நேரத்தில், பட்டப் பகல் நேரமான அமெரிக்க சூழ்நிலையில் – அட்டகாசமான அந்த ஆஸ்பத்திரி, அவசர கதியில் இயங்கிக் கொண்டிருந்தது.

எங்கும் அவசரம். எதிலும் அவசரம்.

வரவேற்பில் அமர்ந்திருந்த பழுப்பு நிற கண்ணழகிப் பெண் "ஸாரி, ஹி இஸ் இன் தியேட்டர். ப்ளீஸ் ட்ரை லேட்டர்".

"டாமிட்" போன் சீறியது. 'ஐயாம் ஸ்பீக்கிங் ஃப்ரம் இண்டியா."

"ஸாரி ட்டு ஸே. ஐ காண்ட் ஹெல்ப்" என்று போனை வைத்து விட்டு சுற்றிலுமிருந்த போன்களில் இன்னொன்றைப் பறித்தாள்.

வெள்ளை தேவதைகள் போன்ற நர்சுகளின் நடமாட்டம்.

அந்த சூழ்நிலையிலும்கூட சிரித்தது போல பேசும் ஆண் – பெண் டாக்டர்கள்.

ஏதோ விபத்து கேஸை ஸ்ட்ரெச்சரில் தள்ளிக் கொண்டு போக – க்ளுகோஸ் ஸ்டாண்டை



ஏந்தியவாறு நர்ஸும், ஒரு டாக்டரும் கூடவே கிட்டத்தட்ட ஓடி வந்தார்கள்.

ஒட்டமே உருவான அவசர மனிதர்கள்.

ஆபரேஷன் தியேட்டரில் தையல் போட்டு முடித்ததும் - நாடித் துடிப்பு சாதனம் தவிர மற்ற முற்போக்கு கம்ப்யூட்டர் சாதனங்கள் அமர்த்தப்பட்டன. நுனி நாக்கில் ஆங்கிலம் பிரயோகித்துப் பேசினார்கள்.

நர்ஸ் உதவியால் பிளாஸ்டிக் குல்லாவையும் முகத்தை மூடிய வெள்ளை பட்டியையும் நீக்கிய டாக்டர் மகேஷ் -

"சக்ஸஸ். பிரச்னை எதுவும் வராது. அப்படியே வந்தால் வீட்டுக்குப் போன் பண்ணுங்கள்."

வெள்ளைக் கோட்டைக் கழற்றியவாறு பக்கத்து அறைக்கு நர்ஸ் பின் தொடர நடந்தவர், வாஷ் பேஷின் எதிரில் கைகளை நீட்டி நிற்க பிளாஸ்டிக் கையுறைகளை உருவும்போது அவளிடம் சொன்னார்.

"நான் சாப்பிட வராததனால் என் மனைவி கோபமாக இருப்பாள். சமாளிக்க வேண்டும்."

உதட்டைச் சுழித்துச் சிரித்தாள் அந்தக் கறுப்பு நர்ஸ், "ஒரு மணி நேரமாக உங்கள் அறையில்தான் காத்திருக்கிறார் ஸார்."

"ஓஹ்" என்று கண்களில் சலிப்புக் காட்டியவர் அவசரமாக வாஷ் பேஷினில் சோப்புப் போட்டுக் கை கழுவி லோஷன் விட்டு அலம்பி, வெப்பக் காற்று வெளியேற்றும் குழாயில் கைகளைக் காட்டி உலர்த்திக் கொண்டு

விரல்களை அசைத்து "பை பை" சொல்லிவிட்டு இன்னொரு வாசல் வழியே வெளியேறினார்.

தன் அறைக் கதவைத் தயக்கமாக கொஞ்சம் திறந்துப் பார்த்தபோது - முதுகு காட்டி அமர்ந்திருந்தாள். தங்க நிறக் கூந்தலுடன் விக்கை முதுகில் தவழ விட்டிருந்தாள். கறுப்பும் மஞ்சளுமான மிடியை இறுக்கமாக அணிந்திருந்தாள். அது அவளின் இடுப்பு ஏற்ற இறக்கங்களைப் பளீரெனக் காட்டின. இவர் உள்ளே வந்த ஓசைக்கு ஒய்யாரமாகத் திரும்பிப் பார்த்தாள்.

"ஹாய் டாக்டர்" என்று எழுந்து நின்றாள்.

"ஹாய்"

"ஐயாம் லீனா. மிஸஸ் லீனா மகேஷ்."

"ஓ. ஐ.ஸி. கிளாட் ட்டு மீட் யூ" என்று நீட்டிய இவர் கை தட்டி விடப்பட்டது.

"நான் கோபமாக இருக்கிறேன்."

"நான் பசியோடு இருக்கிறேன்" - அவளை இடுப்பில் வளைத்து இழுத்தார். "வா... வீட்டுக்குப் போய் சாப்பிட்டு விட்டுத் தெம்பாகச் சண்டை போடலாம். கமான் யா."

நடக்கும்போது சொன்னாள், "என்ன ஆனாலும் சரி. இன்றைக்கு நான் சாப்பிடப் போறதில்லை. உங்களையும் சாப்பிட விடப் போறதில்லை."

"ஓ! நோ!" போலியாக பயத்தைக் காட்டினார். "ஹங்ரீ ஐயாம். ஸ்லோவ்லி டையிங் யா."

பூனைக்குட்டி மாதிரி அவரோடு ஒட்டி இழைந்து இடுப்பை இணைத்து நடந்தாள் அந்த லீனா. வரவேற்பறையைக் கடந்த போது -

"டாக்டர் மகேஷ்..." பழுப்புக் கண் வரவேற்புப் பெண் கூப்பிட்டாள். "தேர் வாஸ் ஏ கால் ஃபார் யூ, ஃப்ரம் இண்டியா."

முகம் சுளித்தான். கைஜாடையாலேயே 'வெளியே போய் விட்டதாகச் சொல்லிவிடு' என்று காட்டிவிட்டு நடந்தார். "கமான் டியர்".

"யாராக இருக்கும்?"

"வேறு யார்? என் தங்கையாக இருக்கும். பெயர் வினிதா."

"எதற்காகப் போன் பண்ணியிருப்பாள்?"

"வேறு என்ன? பணம் கேட்பாள். கல்யாணமே பண்ணிக்காமல் இன்டீரியர் டெகரேஷன்னு கம்பெனி ஆரம்பிச்சு அலையறா. பணம் விழுங்கி வியாபாரம் அது."

காரின் கதவைத் திறந்து அவளை உள்ளே திணித்து இடப் புறமாக காரோட்டி ஸ்தானத்தில் வந்து அமர்ந்தார்.

நெடுஞ்சாலையொன்றில் கார் பறந்து கொண்டிருக்கும்போது லீனா சொன்னாள், "அந்த மோட்டல் உள்ளே போய் நிறுத்து."

"ஏன், வீடு போகும் வரை பசி தாங்காதா? அவசரமா?"

"இல்லை அதைவிட அவசரமான வேலை ஒன்று இருக்கிறது."

மோட்டல் உள்ளே போய் செடிகளின் நடுவே காரை நிறுத்தினார். திரும்பிப் பார்வையாலேயே 'என்ன?' என்று கேட்டார்.

"உன்னை மூடுக்கு வரவழைப்பதற்கு?" என்றவள் பாய்ச்சலாக அவர் கழுத்தைக் கட்டிக் கொண்டு அவர் கீழுதட்டைக் கவ்விக் கொண்டாள். அவர் 'உம், உம்' என்றபடி திமிறவே விலகிக் கொண்டாள், "என்ன?"

"குழந்தைங்க"

"ஸ்கூலில் இருப்பார்கள், என்ன?"

பின் ஸீட் அடியில் இருந்து எழுந்த சின்னப் பையனும் பெண்ணும் "ஹாய் மாம்" என்றதும் -

திக்கென்று நிமிர்ந்தாள் லீனா.

சென்னையின் நெரிசலை விட்டுத் தனித்து அமைதி காட்டியிருந்தது அந்த பங்களாப் பகுதி. திறமையைக் கொட்டி அலங்கரிக்கப்பட்ட ஹாலில் ஃபோனுடன் மல்லாடிக் கொண்டிருந்தாள் வினிதா.

கோபமாக ஃபோனை அறைவது போல் வைக்கவும் கண்ணாடி கதவுக்குப் பின்னால் பாங்க் மானேஜர் தெரியவே நெளிந்தாள்.

"வாங்க... என்ன விடிய, விடிய? உள்ளே வாங்க!"

"வாங்கித்தான் ஆகணும். மேலேயிருந்து டோஸ் மேலே டோஸ் வருகிறது. என் எல்லைக்கு அப்பால் நான் கொடுத்த ஓவர் டிராஃப்ட் என் சர்வீஸிலேயே பிளாக் மார்க் போட்டுடும் போலிருக்கு மேடம். ப்ளீஸ் டூ சம்திங்."

"செய்யாமலா இருக்கேன்? இப்பக்கூட அண்ணாவை டிரை பண்ணினேன். கிடைக்க மாட்டேங்கிறானே" சலித்துக் கொண்டாள். "அமெரிக்க டாலர்கள் வந்தால்தான் இப்போதைக்கு பிஸினஸை தொடர முடியும். உங்களுக்காவது சில லட்சம். தனியாக பைனான்ஸ்கிட்ட வாங்கின பணம் வேற குட்டி மேலே குட்டிப் போட்டுக் கோடியை எப்பவோ தாண்டி விட்டது. ஒரு நிமிஷம்" என்றவள் போனைத் திருகி ஒரு ரியல் எஸ்டேட்டை முயன்றாள்.

"உங்களைத் தெரிகிறது மேடம். விவரம் சொல்லுங்கள்."

## வாள் எங்கே?

ஆர்.பி. சாரதி

வாளிரண்டைக் காணோமே,
வைத்த இடத்திருந்து
வாகாய் சுழன்று வரும்
வாளிரண்டைக் காணோமே!
தைத்து விடும் நெஞ்சமதில்
தீயாய் எரித்து விடும்
வாளிரண்டைக் காணோமே!
சென்று நெடுந்தூரம்
கொன்று விடும் அம்பல்ல,
நின்ற இடத்திருந்து
நெஞ்சைப் பிளந்து விடும்
வாளிரண்டைக் காணோமே!



உறையென்று வாளுக்கு
ஒரு நாளும் இருந்ததில்லை
துருவேறிப் போயிற்றா,
துயரக் கடல் மூழ்கி?

வாளிருந்த இடத்தினிலே
வந்ததென்ன புல்லிதழ்கள்?
வாள் தேய்ந்து, வலியிழந்து,
புல்லாகப் போயிற்றா?
காதலனைக் காணாது
காலமெலாம், காலமெலாம்
காத்திருந்த விழியிரண்டு
களை இழந்து, ஒளி இழந்து,
களையாகப் போயிற்றா?
வாளிரண்டைக் காணோமே,
வனிதையவள் முகத்திருந்த
வாளிரண்டைக் காணோமே!

"எனக்கு எப்படியாவது இரண்டு கோடி ரூபாய் வேணும்."

"தப்பா டயல் பண்ணிட்டீங்க. இது பைனான்ஸ் கம்பெனி இல்லை. ரியல் எஸ்டேட்."

"தெரிஞ்சுதான் கேட்கறேன். எக்ஸ்ட்ரீம் சௌத்தில் நிலம் என்ன விலை போகிறது?"

"நல்ல விலைக்குதான் போகிறது. எவ்வளவு நிலம் இருக்கு?"

"இருபது ஏக்கர். நான் கேட்ட பணம் கிடைக்குமா?"

சற்று நேர மௌனத்திற்குப் பிறகு – "முடியும்னுதான் நினைக்கிறேன்".

ஃபோனை வைத்து விட்டு மானேஜரிடம் சொன்னாள், "உங்க மேலிடத்தில் ஒரு மாசம் டயம் கேளுங்க. பைசா பாக்கி இல்லாமல் தருகிறேன்."

"ஏது அவ்வளவு இடம்?"

"என் அப்பாவோட சுய சம்பாத்தியம். அம்மா பேரில் இருக்கு. பரவாயில்லை. ஏமாத்தி வாங்கிடலாம்" எழுந்து கும்பிட்டாள், "நீங்கள் வரலாம்".

எங்கேயோ பெய்த கேரளத்து மழையில் நனைந்த ஈர காற்று இங்கே வந்து சிலிர்க்க வைக்கவே கோப்பையை மேஜை மேலே வைத்து விட்டு – காரின் குழலொலிக்கும், தர்வானின் கேள்விக்கும் எட்டிப் பார்த்தாள் அனாமிகா.

கூர்க்கா கேட்டைத் திறந்து விடவே காற்றில் மிதப்பது போல உள்ளே வந்தது அந்த அம்பாஸடர் கார்.

"ராஜாத்தி போய் இன்னும் கொஞ்சம் காப்பி கலந்துடு. நீ அவங்களை ஹால்ல உட்கார வை. நான் டிரஸ் மாத்திட்டு வரேன்" என்றவள் அவசரமாகப் படியிறங்கி அறைக்குள் போனாள்.

"உட்காருங்க, அம்மா இப்ப வந்துடுவாங்க" என்று ராஜாத்தி சொல்லி விட்டுப் போனாள்.

வந்தவர் முகத்தில் கம்பீரமிருந்தது. ஸஃபாரி ஸுட்டும் தங்கப் பிரேம் கண்ணாடியையும் அணிந்து அழுந்த வாரிய தலை முடி அவர் வயதைக் குறைத்தது.

கூட வந்தப் பெண்ணிடம் டீன் ஏஜ் குறுகுறுப்பு இருந்தது. அலையும் கண்கள். "என்ன டாடி! அந்த படத்தையே_ பார்க்கறீங்க? தெரிஞ்சவங்களா?"

"தெரியும்னுதான் நினைக்கிறேன். நான் நினைக்கிறது சரியானால் அவங்க பெயர் அனாமிகா."

அறையில் கொசுவத்தை மடியில் செருகிய அனாமிகா திரும்பிப் பார்த்து அவசரமாக முன்றானையைத் தவழ விட்டுக் கொண்டு முன்னேறினாள். ராஜாத்தி சமையலறையில் காப்பி கலந்து கொண்டிருக்கும்போது –

"தெரிஞ்சவங்கன்னா? உறவுக்காரங்களா?" என்று பெண் கேள்வி கேட்கும் போதுதான் –

தனது அறைக் கதவைத் திறந்து வெளிப்பட்ட அனாமிகா அவரைப் பார்த்து "சஞ்சீவி! நீயா?" என்று உரக்கக் கேட்க –

இளம் பெண் திக்கென்று திரும்ப –

சமையலறையில் காப்பிக்கு சர்க்கரை கலந்து கொண்டிருந்த ராஜாத்தி திரும்பிப் பார்த்தாள் கேள்வியாக...!

—தொடரும்

சொல்

மின்ன லனைய திற லோங்குமே – உயிர்
வெள்ளங் கரையடங்கிப் பாயுமே
தின்னும் பொரு ளமுத மாகுமே – இங்கு
செய்கை யதனில் வெற்றி யேறுமே.

தெய்வக் கனல் விளைத்து காக்குமே – நம்மைச்
சேரு மிரு ளழியத் தாக்குமே.
கை வைத்தது பசும்பொன் னாகுமே – பின்பு
காலன் பய மொழிந்து போகுமே.

வலிமை, வலிமை யென்று பாடுவோம் – என்றும்
வாழுஞ் சுடர்க் குலத்தை நாடுவோம்
கலியைப் பிளந்திடக் கை யோங்கினோம் – நெஞ்சிற்
கவலை யிருள னைத்து நீங்கினோம்.

'அமிழ்தம் அமிழ்தம்' என்று கூவுவோம் – நித்தம்
அனலைப் பணிந்துமலர் தூவுவோம்
தமிழிற் பழமறையைப் பாடுவோம் – என்றுந்
தலைமை பெருமைபுகழ் கூடுவோம்.



மகாகவி
பாரதியார்



# பிரசவத்திற்கு இலவசம்

சரயு

இரவு பத்தரை மணி.

"ஆ..ங்... ஆ...ங்... ஆ...ங்..." மல்லிகா தாளக்கட்டுடன் முனகிக் கொண்டிருந்தாள். "சரோஜா, பாப்பா முனவுதே இன்னான்னு பாரு?" வாயிற்புறத்தில் இருந்தே வேலாயி குரல் கொடுத்தாள்.

சரோஜா மாமியாரின் கட்டளைப்படி உள்ளே சென்று பார்த்தாள். மல்லிகா ஒருக்களித்துப் படுத்துக் கொண்டிருந்தாள்.

"நான்தான் நேத்தே சொன்னேனில்ல - அந்தப் பலகாரங்களெல்லாம் இப்ப உனக்கு ஒத்துக்காதுன்னு. என் பேச்சைக் கேட்டால்தானே? இப்ப வவுத்து நோவுல துடிக்கறே..."

திண்ணையிலிருந்து வேலாயி சட்டென்று உள்ளே வந்தாள்.

"ஏதோ வவுத்து வலி போலவிருக்கு. நிறைமாச புள்ளத்தாச்சி, வவுறு நல்லா கீளே இறங்கினப்புறம் கண்டதையெல்லாம் தின்னாக்க..." சரோஜா புலம்பினாள்.

"இரு... வாரேன்!" வேலாயி சமையற்கட்டுக்குப் போனாள்.

அடுப்பை ஏற்றி வாணலியை வைத்தாள். அதில் கருஞ்சீரகம் மேலும் சில சாமான்களைப் போட்டு வறுத்தாள். பிறகு கொஞ்சம் தண்ணீரை ஊற்றிக் கொதிக்க வைத்தாள்.

"மல்லி! இந்தா, இந்தக் கசாயத்தில் இரண்டு வாய் குடி. வலி நிக்குதா, பார்க்கலாம்!"

"இல்லே, ஆயா! இது அந்த வலிதான்!" என்றாள் மல்லி.

"பரவாயில்லை, குடியேன். கொஞ்ச நேரத்தில நிக்காம போனால் தெரிஞ்சு போயிடுது!"

மல்லிகா கஷாயத்தை வாங்கிக் குடித்தாள்.

சிறிது நேரம் அசதியிலோ என்னவோ கண்ணயர்ந்தாற்போல் படுத்திருந்தாள்.

மணி நடு இரவு பன்னிரண்டு மணியைத் தாண்டிவிட்டிருந்தது.

"அம்மா... அம்மா...!" மல்லி வீறிட்டலறினாள்.

"அடக்கடவுளே! மறுபடியும் வலி வந்திருச்சா? ஆசுபத்திரிக்குத்தான் போகணும்" என்று சரோஜா வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்திருந்தாள்.

"ஆமாண்டி...., இது நெச வலியேதான். ஜல்தியா பொறப்படுங்க ஆசுபத்திரிக்கு...!" என்றாள், வேலாயி.

"எனக்கு அப்பமே தெரியும் ஆயா... யம்மா...வ்... டாக்டரம்மாவும் அண்ணைக்கே... ஊங்... இந்த தேதியிலேதான் பிரசவம் ஆகுமுன்னு கரெக்டா சொல்லிபூட்டாங்களே... யம்மா...வ்..." மல்லி புரண்டு படுத்தாள்.

"டேய், ரஜினி! போய் ஓர் ஆட்டோ ரிக்ஷாவைக் கூட்டியாடா. ஓடு... ஓடு..." சரோஜா தன் பிள்ளையை விரட்டினாள்.

ரஜினியின் உண்மைப் பெயர் சுந்தரவடிவேலு. ஆனால் அவன் திரைப்பட நடிகர் ரஜினிகாந்தின் பயங்கர விசிறி. எந்தப் படத்திலாவது அவருடைய நடிப்பை யாராவது குறைவாகச் சொல்லி விட்டால் போதும், கத்தி, குச்சிகள் சகிதம் அவர்களுடன் அவன் சண்டைபோடப் போய்விடுவான். அவனுக்கு அவர்மீதிருந்த வெகு மதிப்பு காரணமாகவே தன் பெயரை ரஜினி என்று வைத்துக் கொண்டான். அவன் கையிலும் கூட ரஜினி என்று பச்சை குத்திக் கொண்டிருந்தான்.

அம்மா கூப்பிட்டதால் தூக்கம் கலைந்த ரஜினி நிலைமையைப் புரிந்து கொண்டு சட்டையை மாட்டிக் கொண்டு புறப்பட்டான்.

"ஓடுடா! அர்ஜெண்ட்டுன்னா, என்னவோ ரஜினிகாந்த் சினிமாவுக்கு போறாப்பல நிதானமாப் போறியே..." சரோஜா பிள்ளையைக் கடிந்து கொண்டாள்.

"இதோ, போய்க்கிட்டே இருக்கேம்மா! நடு ராத்திரியிலே கூப்பிட்டால் எந்த ஆட்டோக்காரன் வருவான்? எல்லாரும் தூங்கிக் கீட்டு கிடப்பானுவ. சினிமாக் கொட்டாய் கிட்டதான் போய்ப் பார்க்கணும்!"

இந்த அரவத்தில் திண்ணையில் தூங்கிக் கொண்டிருந்த சரோஜாவின் கணவர் சிவகுரு எழுந்து கொண்டு விட்டார். சமாசாரத்தைத் தெரிந்து கொண்டார். சில நாள்களாகவே இதை வீட்டில் எல்லாரும் எதிர்பார்த்துக் கொண்டிருந்ததுதானே?

'ஐயோம்மா... அப்பா...! தாங்கலியே... அம்மா!" மல்லிகா பெரிதாக இரைந்து அழுதாள். உருண்டாள்; படுத்தாள்; உட்கார்ந்தாள்; மறுபடியும் படுத்தாள்; அழுதாள்.

"அடச்சீ, நீயும் ஒரு பொம்பளை சென்மம்தானா? பிரசவ வலின்னா அப்படிதானிருக்கும். பொம்பளைங்க பொறுத்துகிட்டுதான் முக்கி வெளியே தள்ளணும்!" என்றாள் சரோஜா. கடுமையாக வார்த்தைகளைக் கொட்டினாலும் அவளுக்குக் கையும் ஓடவில்லை; காலும் ஓடவில்லை.

"சும்மா இரு. பொம்பளே! புள்ளே துடிக்கிது. நீ என்னவோ பெரீ...சா லெச்சரு அடிக்கறயே! உனக்கு அந்த வலி...!" என்றவர் தன் தவறைப் புரிந்து கொண்டு நிறுத்தினார், சிவகுரு.

"ஆமாம், எனக்கு பிரசவ வலின்னா என்னான்னு தெரியாது பாருங்க. வலியே எடுக்காமத்தான் உங்க மகனையும் மவளையும் பெத்துப் போட்டேன்!" படபடப்பில் வழக்கத்துக்கு மீறிய கோபத்தில் சரோஜா வெடித்தாள்.

"சரோஜா! கொஞ்சம் நிதானமாயிரு. எனக்குத் தெரியுதே! உன் கை, காலெல்லாம் எப்படி நடுங்குது பார்! இது சின்னப் புள்ளை. அதிலேயும் தலைச்சன். அப்படித்தான் அலட்டும். பயப்படும்!" என்ற வேலாயி மல்லியை தடவிக் கொண்டேயிருந்தாள்.

"பொறுத்துக்க, தாயி! ஆண்டவரு சீக்கிரம் புள்ளையை வெளியே கொண்டு வந்துடுவாரு!" என்று ஆறுதல் சொல்லியபடியே வேலாயி மல்லிகாவின் கையையும் காலையும் நீவிவிட்டாள்.

சைக்கிளை மிதித்த ரஜினி அசுர வேகத்தில் ஒவ்வொரு திக்காக ஓடினான். அவன் கண்ணுக்கெட்டிய வரை ஓர் ஆட்டோவும் தென்படவில்லை.

சிறிது தூரம் போனவுடன் ஓர் ஆட்டோவைப் பார்த்தான். அருகே போன ரஜினி தூங்கிக் கொண்டிருந்த ஆட்டோக்காரனைக் கூப்பிட்டான். எழுப்ப, எழுப்ப அவன் எழுந்திருக்கவேயில்லை. அங்கிருந்து பத்து கெஜ தூரத்தில் மற்றோர் ஆட்டோ தென்பட்டது. படுத்துக் கொண்டிருந்த ஆட்டோ டிரைவரை ரஜினி உலுக்கி எழுப்பினான். தலையைத் தூக்கி எங்கே என்றுகூடக் கேட்காமல் அவன் வரமாட்டேனென்று சொல்லிவிட்டு மீண்டும் கண்களை மூடிக் கொண்டு விட்டான்.

ரஜினி சைக்கிளை மடக்கி எதிர் திக்கில் ஓட்டினான். ஒரு மஞ்சள் வண்டி தெரிந்தது. டிரைவர் பின் சீட்டில் படுத்துக் கொண்டு முன் சீட்டில் காலை நீட்டிக் கொண்டிருந்தான்.

"யோவ்... ஆட்டோ, எந்திரியா! அர்ஜெண்ட்!"

"....................."

"யோவ், எந்திரிச்சு வாயேன்னா? மனுஷி அலறுறா!" என்று சொல்லிக் கொண்டே ஆட்டோவின் 'டாப்'பைத் தட்டினான்.

ஊஹூம், அவன் அசைந்து கொடுக்கவேயில்லை.

............

'சரி, சரி, இந்த கும்பகர்ணனகளெல்லாம் எதுக்குதான் ஆட்டோ ஓட்டவர்றானுவளோ?'

ரஜினி இன்னும் கொஞ்சம் தூரம் போனான். ஓர் ஆட்டோ இருந்தது. ஆனால் டிரைவரைக் காணோம்.

"யோவ்... ஆட்டோ!... டிரைவர்!" என்றெல்லாம் கத்தினான். ஒருவனும் இல்லை.



ரஜினிக்கு பயமேற்பட்டு விட்டது.

மல்லிகாவின் கதறல் அவனை மேலும் துரத்தியது.

'சினிமா கொட்டகைக்கு போவதானால் இன்னும் எவ்வளவு தொலைவு போக வேண்டும்? அங்கேயிருப்பவன் 'நைட் சார்ஜ்' என்று ஏகத்தாறாகக் கேட்பானே – ஆசுபத்திரிக்கு வருவானா?' கவலையில் கேள்வியும் சந்தேகமும் மாறி மாறி எழுந்து அவன் பீதியடைந்து கொண்டிருந்தான். கடைசியில் ஓர் ஆட்டோவுமே கிடைக்காவிட்டால் மல்லிகாவின் கதி? போயும் போயும் நடு ராத்திரியில் அவளுக்கு வலி எடுக்க வேண்டுமா? எல்லாம் வேளைக் கோளாறுதான்.

ரஜினி மறுபடியும் ரோடில் வட்டமடித்து பக்கத்து சந்துகளில் ஏதாவது ஆட்டோ தெரிகிறதா என்று திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே போனான்.

அப்பாடா! ஒரு சந்தில் உள்புறமாக ஓர் ஆட்டோ நிறுத்தப்பட்டிருந்தது. அதில் ஒருவன் உடம்பை வளைத்து சுருட்டிப் படுத்துக்கொண்டு தலையில் இருந்து கால் வரை ஓர் அழுக்குத் துண்டால் போர்த்திக் கொண்டிருந்தான்.

"கடவுளே – இவனாவது வர வேண்டும். வராவிட்டால் ஆளை வண்டியில் இருந்தே இழுத்து வெளியே போட்டு விடவேண்டும்!" என்று நினைத்துக் கொண்டு ரஜினி குரல் கொடுத்தான்.

"ஏ. ஆட்டோக்காரரே, சவாரி வரியாய்யா?"

"ஊம்..." ஈனமான குரலில் பதில் வந்தது.

"சீக்கிரம் எழுந்திரிச்சி வாய்யாண்ணா. பிரசவ வலி எடுத்திடுச்சு. எழுந்திரு. எழுந்திரு!" ரஜினி ஆட்டோவின் கூண்டைத் தட்டினான்.

"பிரசவக் கேஸா?" அடிபட்டாற் போல் அவன் எழுந்து உட்கார்ந்து கொண்டான்.

அவன் கண்கள் சிவந்திருந்தன. செமத்தியாகக் குடித்திருப்பான் போலிருக்கிறது என்று ரஜினிக்குத் தோன்றியது.

"இதோ வாரேன்!" என்றவன் தள்ளாடிக் கொண்டே எழுந்து தன் துண்டை முன் சீட்டில் போட்டு விட்டு அதன்மேல் உட்கார்ந்து கொண்டான்.

"அம்மாடி, கடைசியாக ஒருத்தன் வரேன்னான் – பிரசவக் கேஸ் என்று சொன்னதும் எப்பிடி துள்ளி எழுந்திருந்தான். நல்லா பணம் கறக்கலாமில்ல?" என்று ரஜினி நினைத்துக்கொண்டான்.

"நீ முன்னாடி போ! நான் வாரேன்!" என்று சொன்ன ஆட்டோக்காரன் வண்டியைக் கிளப்பக் குனியும் பொழுதே இரண்டு தடவை விழப் போனான்.

இவ்வளவு தண்ணியடிச்சிருக்கிறவன் நிதானமாக வண்டியை ஓட்டுவானா? அதுவும் மல்லி இருக்கிற நிலையில்? ரஜினி பயந்து கொண்டே சைக்கிளை மிதித்தான்.

"எதற்கும் அப்பாவும் நானும் இருக்கிறோமே – அவன் சரியாக ஓட்டாவிட்டால் அவனைக் கீழே இறக்கி விட்டுவிட்டு ஆட்டோவை பின்னாடியில் இருந்து தள்ளி ஓட்டிக்கொண்டே ஆசுபத்திரிக்குப் போய் விடலாம்!" என்று ஒரு நினைப்பு.

"ஆஸ்பத்திரி வாசலில் போய் எக்கச் சக்கமாக பணம் கேட்கப் போகிறான். அதுதான் மீட்டரையே போடவில்லை – என்னவோ பார்க்கலாம்!" பலவிதமான குருட்டு யோசனைகள் ரஜினியின் மனதில் அலைபாய்ந்தன. திரும்பிப் பார்த்தான். ஆட்டோ மெதுவாக வந்து கொண்டிருந்தது.

சில நிமிடங்களில் ஆட்டோ அவனை முந்திவிட்டது.

"நேரே போ! ஒரு சின்னக் கோயில் வரும். அதுக்கடுத்த 'ரைட்'டில் இரண்டாவது சந்துல ஒடிச்சுக்க! முதல் வீடுதான். வீட்டு வாசலில் விளக்கு எரிந்து கொண்டிருக்கும். இதோ நானும் வந்து கொண்டே இருக்கிறேன்!" என்று ரஜினி அடையாளம் சொன்னான்.

அவன் சொன்னது சரியாக காதில் விழுந்ததோ என்னவோ, ஆட்டோ பறந்தது.

ரஜினியும் காற்றாய்ப் பறந்து வீட்டை அடைந்துவிட்டான்.

ஆட்டோவையே வெகு நேரமாக எதிர்பார்த்துக் கொண்டு நின்று கொண்டிருந்தவர்கள் துரிதமாக முதலில் சரோஜா, பிறகு மல்லி, அப்புறம் சிவகுரு என்று இரண்டு பைகள் நிறைய சாமான்களுடன் தங்களை பின் சீட்டில் திணித்துக் கொண்டார்கள்.

ரஜினி "நான் முன் சீட்டில் ஒடுங்கிக்கறேன், டிரைவர்!" என்று சொல்லிக் கொண்டே ஏறிக் கொண்டான்.

"யம்மாவ்... கதவையெல்லாம் சரியாக தாள் போட்டுக்க – ஜாக்கிரதை!" என்று சிவகுரு கத்தினார்.

"தாயுமானவா, புள்ளையை இரண்டு உசிரா பிரிச்சு கொண்டாந்து சேர்த்துவிடு!" என்று வானத்தை பார்த்துக் கும்பிட்டபடியே வேலாயி வீட்டுக்குள் சென்றாள்.

ரஜினி, ஆட்டோ டிரைவரை திரும்பித் திரும்பிப் பார்த்துக் கொண்டே வந்தான். எங்கேயாவது குடிபோதையில் அவன் நிலை தடுமாறி விழுந்துவிட்டால் என்ன செய்வது என்கிற பயம். ஆனால் ஆட்டோவோ அதிக குலுக்கலில்லாமல் சீராக ஓடிக் கொண்டிருந்தது.

அதோ, அப்பாடி, ஆசுபத்திரி வந்துவிட்டது! ரஜினி நிம்மதியாக பெருமூச்சு விட்டான்.

"ரஜினி! நானும் அம்மாவும் மல்லியை அழைச்சுகிட்டுப் போகிறோம். நீ ஆட்டோவுக்கு பணம் கொடுத்துவிட்டு வா. ஏகத்தாறாக கேட்பான். மீட்டரே போடவில்லை. பார்த்துக்கோ!" என்று சொல்லிக் கொண்டே சிவகுரு சரோஜாவுடன் மல்லிகாவைக் கைத்தாங்கலாக மெதுவாக நடத்திச் சென்றனர். பைகளை ரஜினி எடுத்துக் கொண்டு வரட்டும் என்று விட்டுச் சென்றனர்.

ஆட்டோவைக் கிளப்பினான், டிரைவர். ஆட்டோ 'ஸ்டார்ட்' ஆகவில்லை. பின்னால் வந்து கொண்டிருந்த ஆட்டோகாரன் ஹாரன் அடித்தான்.

"எவ்வளவுப்பா கொடுக்கணும் டிரைவர்?" என்றான் ரஜினி.

ஆட்டோ கிளம்பாததால் டிரைவர் கீழே இறங்கி ஆட்டோவைத் தள்ளி ஓரங்கட்டப் பார்த்தான்.

"சீக்கிரம் சொல்லுப்பா! நான் போகணும். நாழியாகிறது!" ரஜினி துரிதப்படுத்தினான்.

ஆட்டோக்காரன் இடக் கையை அசைத்து 'வேண்டாம்' என்பது போல் காண்பிக்கும் பொழுது அவன் உடம்பு ஆடிற்று.

"என்னப்பா, போதையா? ஏதோ நியாயமாகச் சொல்லு, கொடுத்துவிட்டுப் போய் விடுகிறேன். அப்புறம் என்னை நடு ரோடில் கண்டு நிற்க வைத்துத் திட்டாதே!" என்றான், ரஜினி.

ஆட்டோக்காரன் ரஜினியின் கையைப் பிடித்துக்கொண்டு ஆட்டோவின் பின்புறம் அழைத்துக் கொண்டு போய் கொட்டை கொட்டையான சிவப்பு எழுத்துகளில் எழுதியிருந்ததை அவனுக்குக் காட்டினான்.

'பிரசவத்துக்கு இலவசம்!'.

"அதெல்லாம் முடியாதவங்களுக்கப்பா! என்னால் கொடுக்க முடியும். எடுத்துக்கோ!" என்றான், ரஜினி.

'வேண்டாமென்று' சைகை செய்ய கையைத் தூக்கிய டிரைவர் நிலைகுலைந்து சரிந்து தரையில் விழுந்தான்.

"போர்டை என்னவோ எழுதி வைத்துவிட்டான், பிரமாதமாக! குடி போதை தலைக்கு ஏறியிருக்கே!" என்று நினைத்துக் கொண்டான், ரஜினி.

டிரைவர் விழுந்ததைப் பார்த்த பின்னாடி வந்த ஆட்டோக்காரன் இறங்கி ஓடிவந்தான்.

"யாரு! ரங்க மாமாவா? என்னாச்சு, மாமா? உடம்பு சொகமில்லையா?" என்று சொல்லிக் கொண்டே வந்த மணி அவனைத் தூக்கி உட்கார வைத்தான்.

"ஐயையோ! இன்னா மாமா, உடம்பு அனலாகக் கொதிக்குதே?" மணி பதறினான்.

"ஆட்டோ, சீக்கிரம் வாய்யா! வலி எடுத்திடுச்சு. அப்புறம் அரட்டை அடிக்கலாம்!" என்று பின்னாடியில் இருந்து ஒருவர் மணியைக் கூப்பிட்டார். அவர் ஆசுபத்திரிக்கு அருகே வசிப்பவர் போலும்.

"என்ன மாமா?" என்றான் மணி.

"ஆமாம் தம்பி! நாள் முழுவதும் ஒரு சவாரிகூட கிடைக்கலே. உடம்புலே வேறே காய்ச்சல் அனத்துது. வூட்டுல புள்ளைங்க வேற சாப்பிடாம பட்டினியா படுத்திருக்கும்!" என்று கண்ணீர் மல்க ரங்கன் சொன்னான்.

"ஆட்டோ, ஏ, ஆட்டோ! சீக்கிரம் வாய்யான்னா? உன் பேச்சை அப்புறம் வைச்சுக்க!"

"இருய்யா!" மணி எரிந்து விழுந்தான்.

"ஏதோ பிரசவக் கேஸாம். வண்டியில் ஆயில் இல்லை. நானும் 'பிரசவத்துக்கு இலவசம்' என்று போர்டு எளுதி விட்டேன். வண்டி நடுவுலே நின்னு போச்சுன்னா வாய்க்கு வந்தபடி திட்டுவாங்க. நம்ப மனசுக்கும் புள்ளதாய்ச்சியைப் பார்த்து சங்கடமாப் போகும். வரமாட்டேன்னா 'ஏண்டா இப்படி எழுதி வச்சு ஊரை ஏமாத்றே?'ம்பான். இனிமே

எங்கே போய் ஆயில் போட்டுக் கிட்டு கிளம்பறது? நேரமாயிடாதா? என்னவோ அவஸ்தை, போ, மாமா!" என்று சலித்துக் கொண்டான், மணி.

"மணி! ஒரு காரியம் செய்... 'ஹாங்... ஹாங்... உன் வண்டியை அந்த மூலையில் தள்ளி வை! நான் அதிலே படுத்துக்கிட்டிருக் கேன். ஹாங்... என் வண்டியில் ஆயில் 'இருக்கு. அதுதான் இன்னைக்கி பூராவும் ஓடலியே. நீ அதில் அவுங்களை அழைச்சுட்டுப் போய் விட்டு விட்டு... ம்... வரும் பொழுது ஒரு சுர மாத்திரையும் கூடா ஒரு கப் டீயும் வாங்கியா... நாளைக்குத் திருப்பிக் கொடுத்திட றேன்...!" என்று பெருமூச்சு வாங்கியபடியே சொன்னவன் தன் வண்டி பெட்டியில் இருந்த ஒரு காலி பாட்டிலை அவனிடம் நீட்டினான்.

"போ, மாமா! நீ ஒண்ணு! பணந்தாரேன்னு என்னவோ சொல்லிகிட்டு. அக்கா போனதில் இருந்தே நீ ஒரு மாதிரியாயிட்ட... உக்கும்...!" என்று சொல்லிக் கொண்டே மணி ரங்கனை தன் ஆட்டோவில் உட்கார வைத்து ஓர் இருட்டான மூலையில் நிறுத்தி னான்.

பிறகு பிரசவ கிராக்கியை ரங்களின் ஆட்டோவில் ஏற்றிக் கொண்டு சீறிக் கொண்டு கிளம்பி னான்.

இதையெல்லாம் பார்த்த ரஜினி வாயடைத்து உறைந்து போய் நின்றான்.

— ஆட்டோக்காரனுக்கு நாள் பூராவும் சவாரியில்லை!

— பட்டினி!

— பயங்கர ஜுரம்...!

—பெண்டாட்டி இல்லை; பிள்ளைகளும் பட்டினி!

— பிரசவ சவாரிக்கு அவர் களாகக் கொடுத்தாலும் வாங்க மறுக்கிறான்.

ஒவ்வொரு வார்த்தையும் ரங்கன் மேல் சால்வை மேல் சால்வையாக விழ ரங்கன் சினிமா 'ஹீரோ'வின் 'கட் அவுட்'டை விட உயரமாக வானளாவத் தெரிந் தான்.

ரஜினிக்கு தன்னிஷ்ட சினிமா நடிகரைத் தவிர மற்றவர்களை வணங்கப் பிடிக்காது. இப் பொழுது ஆட்டோக்கார ரங்கனை விழுந்து வணங்கலாமா என்று தோன்றியது. சட்டென்று மல்லி யின் நினைவு வரவே பைகளைத் தூக்கிக் கொண்டு ஆசுபத்திரிக்குள் ஓடினான்.

ரங்கனின் கண்முன்னால் ஒரு 'ட்ரெயிலர்' ஓடிக்கொண்டிருந்தது. அவன் மனைவி ராதா மூன்றாவ தாக உண்டாயிருந்தாள். அப் பொழுது ரங்கன் ஏதோ எடுபிடி வேலைகளைச் செய்து கொண்டு பிழைத்துக் கொண்டிருந்தான். அதிக வரும்படி கிடையாது. அன்று அவளுக்கு வேறு வலி எடுத்திருந்தது. அவளை ஆசுபத் திரிக்குக் கொண்டு போக வேண்டும். ரங்கன் கையில் நாலு ரூபாய்தான் இருந்தது. தெருவில் போய் ரிக்ஷாக்காரன், ஆட்டோக் காரன் எல்லாரையும் கூப்பிட்டுப் பார்த்தான். அவர்கள் எல்லாரும் பத்து ரூபாய், பதினைந்து ரூபாய் என்று கேட்டார்கள். அவ்வளவு பணத்திற்கு ரங்கன் எங்கே போவான்?

ராதாவின் கையைப் பிடித்து நடத்தி அழைத்துக்கொண்டு போனான். முதலில் வலுவாக அவன் கையைப் பிடித்துக்கொண் டிருந்த ராதாவின் கையின் இறுக்கம் போகப் போக லேசாகியது. அவளை இழுத்துக் கொண்டு நடக்கும்படியான நிலை வந்துவிட்டது. அப்பொழுதுதான் எதிரே ஒரு சைக்கிள் ரிக்ஷா வந்தது. ரங்கன் அவனிடம் நிலைமையைச் சொன்னான்.

"சரி! நீ கொடுப்பதைக் கொடு! குந்து சீக்கிரம்!" என்றான், அவன்.

ஆசுபத்திரி வந்ததும் ஆயாக்கள் வந்து ராதாவைத் தோளில் சாய்த் துக் கொண்டு உள்ளே அழைத்துக் கொண்டு போனார்கள்.

ரங்கன் வெளியில் நின்று கொண்டிருந்தான்.

பத்து நிமிடம் கழித்து நர்ஸ் வெளிப்பட்டாள்.

"இன்னாம்மா...?" என்றான் ரங்கன் கவலை கப்பிய முகத்துடன்.

"உன் சம்சாரம் இறந்திடுச்சு, பிள்ளையுந்தான்! ஏய்யா, ஒரு மணி முன்னாடி ஆசுபத்திரிக்கு அழைச்சுக்கிட்டு வந்திருக்கக் கூடாதா? அநியாயமாக 'லேட்' பண்ணி இரண்டு உசிரைச் சாக அடிச்சுட்டியே?" என்று சொல்லி விட்டு அவள் நகர்ந்து விட்டாள்.

ரங்கன் இரு கைகளாலும் முகத்தை மூடிக் கொண்டு கேவி னான். கண்ணகி பாண்டிய ராஜா வைக் கேட்டது போல் 'ஆண்டவா! நீயே சொல்லு! நானா குற்ற வாளி? நானா 'லேட்' பண்ணி னேன்? ஒருவனாவது நாலு ரூபா சவாரிக்கு வரமாட்டேனுட்டானே - பணவெறி பிடிச்சவனுக!' என்று தனக்குள்ளேயே புலம்பிக்கொண்டு விசும்பினான்.

அதற்குப் பிறகுதான் அவன் ஆட்டோ டிரைவராகி 'பிரசவத் துக்கு இலவசம்' என்று வண்டியின் பின்னால் சிவப்புப் பெயிண்டால் கொட்டை எழுத்துகளில் எழுதி வைத்தான். ரங்கன் வாடகைக்கு ஆட்டோ எடுப்பவன்தான். சொந்தக்காரர் கேட்டால் பிரசவ கேஸுக்கும் மீட்டர் சார்ஜை தன்னுடைய கூலியில் இருந்து எடுத்துக் கொடுத்து விடுவான்.

அவன் கண்களிலிருந்து நீர் வழிந்து கொண்டிருந்தது. அப் பொழுதுதான் அவனுடைய ஆட் டோவின் ஹார்ன் சப்தம் கேட்டது.

"மாமா, எந்திரி! இந்தா மாத்திரை. ஒரு பன், டீ எல்லாம் வாங்கியாந்திருக்கேன். சாப்பிடு. என்ன, வரியா, உன்னை வூட்டுக்கு இட்டுகிட்டு போய் விட்டிருறேன்?" என்றான் மணி.

"வேண்டாம் மணி. மாத்திரை போட்டுகிட்ட கொஞ்ச நேரத்தில சுரம் வுட்டுடும். காலையில ஏதாவது ஒரு சவாரியாவது கிடைச்சாக்க புள்ளைங்களுக்குத் தின்ன ஏதாவது வாங்கிட்டுப் போவலாம்!" என்றான்.

"நான் இரண்டு சோற்றுப் பொட்டலங்களை வாங்கிட்டுபோய் உன் புள்ளைங்களை எழுப்பி, கொடுத்திட்டுதான் வாரேன்".

ரங்கன் மணியின் கைகளைப் பிடித்துக் கொண்டு கண்களில் ஒற்றிக் கொண்டான். ∴

# மண மாற்றம்

## ஆர்யா தியாகராஜன்

எனக்கு இன்னிக்கு அலுவலகத்தில் வேலையே ஓடவில்லை. ஆச்சு, முப்பத்தெட்டு வருஷமா சர்க்கார் உத்தியோகத்தில் குப்பை கொட்டி, வரும் செப்டம்பர்ல ரிடையர்மெண்ட். வரிசையா பொறந்த மூணு பொண்களுக்கும் அந்த லோன், இந்த லோன், சைக்கிள் லோன், காதி லோன் அது இதுன்னு வாங்கி கல்யாணத்தை முடிச்சு வைச்சாச்சு. புள்ளை இல்லையேங்கிற ஆதங்கத்துக்காக அந்தி காலத்தில பொறந்த பையனோ இப்பத்தான் ப்ளஸ் டூ முடிச்சிருக்கான். பையன் என்னமோ நல்லாத்தான் படிச்சு தொண்ணூத்தியாறு சதவீதம் வாங்கி பாஸ் பண்ணிட்டான். மெரிட்லயே என்ஜீனிரிங் கிடைக்கும்னு ஆவலாய் இருந்தான். ஆனால் இன்னிக்குக் காலையில் வந்த லிஸ்டில் நம்பர் இல்லை.

'அப்பா, ஏதோ கோல்மால் நடந்திருக்கும். ஓர் இருபதாயிரம் செலவழிச்சால், செகண்ட் லிஸ்ட்ல கட்டாயம் கிடைச்சுடும்பா!" என்றான்.

"என்னோட இத்தனை வருஷ சர்வீஸ்ல நான் யார்கிட்டயும் லஞ்சம் வாங்கினதும் இல்லை; கொடுத்ததும் இல்லை. இந்த நேர்மை ஒண்ணு தான் என்னோட சொத்துன்னு நான் கர்வப் பட்டவன். அதனால 'இப்ப சேர்ந்திருக்கிற பி.எஸ்ஸி. கணக்கே படி. போதும்!" என்று சொல்லிட்டேன். பையன் முகம் பார்க்க சகிக்கவில்லை.

சரி, கோயிலுக்குப் போயிட்டு வீட்டுக்குப் போகலாம் என்று எழுந்த போது, "சௌக்கியமா இருக்கீங்களா சார்?" என்று கேட்ட படியே கை நிறைய பத்திரிகையோடு குமரன் வந்தான்.

"என்னப்பா? கல்யாணமா? "பாம்பே'ல என்னவோ சக்கப் போடு போடறையாம், உங்கப்பா உன்னைப்பத்தி அப்பப்ப பெருமையா என்கிட்ட சொல்வார். கேட்கறதுக்கே ரொம்ப சந்தோஷமாயிருக்கு_!"

"அப்பா ரொம்ப மிகைப் படுத்தி சொல்றார்னு நினைக்கிறேன். என்ஜினீரிங் முடிச்ச உடனே பாம்பேயில் கம்ப்யூட்டர் தயாரிக்கிற இந்தக் கம்பெனியில் வேலை கிடைச்சுது. என்னோட ஒரு சின்ன சஜசன் (Suggestion)ஐ பரீட்சை செய்து பார்த்ததில் உற்பத்தியும், தரமும் பல மடங்கு அதிகரிச்சது தெரிஞ்சது. அதுக்கப்புறம் என்னை ஜப்பான், சிங்கப்பூர் அங்கெல்லாம் டிரெய்னிங் குக்கு அனுப்பி வைச்சாங்க. இப்ப ஜப்பான் கூட்டோட கம்பெனி நல்லா போயிட்டிருக்கு. நான் சேர்றப்ப நானூறு தொழிலாளிங்க இருந்தாங்க; இப்ப இரண்டாயிரத்துக்கும் மேல இருக்காங்க. கம்பெனில எல்லாத்துக்கும் நான்தான் காரணம்னு என்னை நல்லா வச்சிருக்காங்க. ஆனால், உண்மையில் என்னோட இந்த வளர்ச்சி எல்லாத்துக்கும் காரணமே நீங்கதானே, சார்? அன்னிக்கு அப்பாகிட்ட பேசி நீங்க என்ஜினீரிங் சேக்கலைன்னா, நான் எப்படி ஆயிருப்பேனோ? சார்! முதல் பத்திரிகையை உங்களுக்குத் தான் கொண்டு வந்திருக்கேன். கோயமுத்தூர்ல நடக்கிற என் கல்யாணத்துக்கு அவசியம் குடும்பத்தோட வந்திடுங்க. அப்பாவும் அம்மாவும் பின்னர் வீட்டில் வந்து தனியா கூப்பிடுவாங்க. நான் வரட்டுமா சார்?" என்றபடியே காலைத் தொட்டு வணங்கிய அவனைத் தோளில் தட்டி வாழ்த்தி அனுப்பினேன்.

அவன் போன பின்னர், பத்திரிகையைப் பிரித்துப் படிக்க ஆரம்பித்தேன். மணமகன், செல்வன் குமரன், பி.ஈ. அவன் அந்த பி.ஈ. பட்டத்தைப் பெற நாமும் ஒரு காரணமாக இருந்திருக்கிறோம் என்பதையும், அதை அந்தப் பையனே நினைவு கூர்கிறான் என்பதையும் எண்ணிப் பார்க்க மனதுக்கு மிகவும் சந்தோஷமாய் இருந்தது. 'சில சமயம் நாம் கொடுக்கிற ஒரு சின்ன அட்வைஸ்கூட வாழ்க்கைல யாருக்காவது பெரிய உதவியா அமைஞ்சுடறது. அன்னிக்கு இப்படித்தான் இவன் அப்பனுக்கு நான் சொன்ன சின்ன அட்வைஸ், அவனை இன்னிக்கு இந்த நிலைக்குக் கொண்டு வந்திருக்கு'. அந்தப் பையனைப் பார்த்தவுடன் பழைய நிகழ்ச்சியெல்லாம் என் ஞாபகத்திற்கு வந்தன.

அது ஒரு ஞாயிற்றுக்கிழமை. பிற்பகல் சாப்பாட்டிற்குப் பின்னர் ஒரு தூக்கம் போட்டுவிட்டு, வழக்கம்போல் மாலை காலாற நடக்க ஆரம்பித்தேன். நான் போகும் வழியில்தான் என் நண்பன் சுந்தரம் வீடு இருந்தது. சுந்தரமும் நானும் பால்யம் முதற் கொண்டே நண்பர்கள். ஆனால் அந்தஸ்தில் நிறைய வித்தியாசம் இருந்தது. அவன் அப்பா அப்பவே பாங்கு உத்தியோகம். ஒரே பிள்ளை, மஞ்சக்காணி சொத்து, பிதுரார்ஜித சொத்து எல்லாம் இருந்தது. சுந்தரமும் பார்க்க ராஜாமாதிரி இருப்பான். இரண்டு பேரும் பத்தாவது வரை ஒண்ணாத்தான் படிச்சோம். பத்தாவதுல தொடர்ந்து நான் ரெண்டு வருஷம் ஃபெயில். நான் எஸ்.எஸ்.எல்.சி. வர்றதுக்குக்குள்ள அவன், டைப்ரைட்டிங், ஷார்ட் ஹேண்ட் எல்லாம் படிச்சு, எப்படா பதினெட்டு வயசாகும்னு பார்த்து அப்பா புண்ணியத்தில பேங்க் உத்தியோகத்துக்குப் போயிட்டான். இருபது வயதி

லேயே கல்யாணமும் பண்ணிண்டு, நாற்பத்தைந்து வயதில ரெண்டு பொண்ணுக்குக் கல்யாணமும் பண்ணி, பையனும் ப்ளஸ் டூ வந்திட்டான். ஆனா, நான்? ஒரு வழியா ஸ்கூல் பைனல் கம்ப்ளீட் பண்ணி, சர்வீஸ் கமிஷன் எழுதி இருபது வயதிலதான் உத்தியோகத்தில சேர்ந்தேன். எங்க அப்பா ஒரு பள்ளிக்கூட வாத்தியாராச்சே. அப்படி என்ன சம்பாதிச்சு வைச்சிருக்கப் போறார். கடன்கிடன் வாங்கி, ரெண்டு தங்கச்சிங்களுக்கும் கல்யாணத்தை முடிச்சுட்டு நான் குடும்பஸ்தனாகப் போனப்ப வயது முப்பது. இப்ப பழங்கணக்குப் பார்த்து என்ன பண்றது? விஷயத்துக்கு வருவோம்.

அன்று அவன் வீட்டைக் கடக்கும் போது, வழக்கத்துக்கு மாறாக அவன் சத்தம் வெளியே கேட்டுக் கொண்டிருந்தது. யாரையோ காரசாரமாகத் திட்டிக்கொண்டிருக்கிறான் என்பது புரிந்தது. ஆனால், யாரை, எதற்கு? ஒன்றும் புரியவில்லை. ஏதாவது குடும்ப விஷயமாக இருக்குமோ? நமக்குத் தெரியாத என்ன விஷயம் இருக்கப் போகிறது? போய்த்தான் பார்ப்போமே என்று உள்ளே நுழைந்தேன். அவன் பையன் குமரன் ஒரு மூலையில் நின்று கொண்டிருக்க, அவனை நோக்கித்தான் இவன் கத்திக்கொண்டு இருந்தான்.

"போயேண்டா! எங்கயாவது போய், ஆடு, மாடு, கோழின்னு மேய்! இல்லாட்டி கையில துரப்பணியைப் புடிச்சு பூந்தி தேக்கிற வேலையப்பார்! வாங்கியிருக்கிற மார்க்குக்கு, அம்மாவுக்கும் பிள்ளைக்கும் என்ஜினிரிங் படிக்கணுமா? ஆசை மட்டும் இருந்துட்டாப் போறாதுடா, கூடவே கஷ்டப்பட்டு உழைக்கவும் செய்யணும். இன்னும் ஏன், என் எதிர்ல நின்னுட்டு இருக்கே? எங்கயாவது போய்த் தொலையேன். இப்ப எனக்கு வர ஆத்திரத்துக்கு உன்னை அப்படியே -" கையை ஓங்கிய சுந்தரத்தின் கைகளைத் தடுத்து, மேற்கொண்டு எதுவும் பேசாதே என்று அடக்கினேன்.

ஆடாமல் அசையாமல் சிலை போல் நின்றுகொண்டிருந்த குமரனை, "சற்று உன் ரூமுக்குப் போப்பா!" என்று அனுப்பி வைத்த பிறகு, "என்ன சுந்தரம்! சின்னக் குழந்தைகளையே பெற்றோர் திட்ட பயப்படற காலம். இப்பப்போய், வளர்ந்த, உன் தோளுக்கு உயர்ந்த பையனைப்போய் இப்படிக் கன்னா பின்னா என்று பேசுகிறாயே?" என்றேன்.

அதற்குள் காபி டம்ளருடன் வந்த அவன் மனைவி, "நீங்க வரத்துக்கு முன்னாடி ரொம்ப மோசமா போய் தண்டவாளத்தில தலையைக் கொடுக்கறதுதானே, இல்லாட்டி மூட்டைப்பூச்சி மருந்து தின்னு சாகவேண்டியதுதானே? அப்படி இப்படின்னு பேசிட்டாருங்க. பையன் நிஜமாகவே ஏதாவது செய்துண்டா என்னங்க பண்றது?" ஒரு குரல் அழுதாள்.

அட, விஷயம் அப்படி ஒன்றும் பெரிதில்லை. பையன் பிளஸ் டூவில் நிறைய மார்க் வாங்கவில்லை. அதுக்குன்னு ரொம்பக் குறைச்சலும் இல்லை. எண்பத்தொன்பது சதம் வாங்கி இருக்கான். ஆனால், என்ஜினிரிங்குக்கு அது போதாதே. சுந்தரத்துக்கு தன் பையன் என்ஜினியர் ஆகணும்கிறதில கொள்ளை ஆசை. ஏனென்றால், அவன் குடும்பத்துல வசதி இருந்தும் அதுவரைக்கும் யாருமே என்ஜினிரிங் படிச்சது கிடையாதாம். நிறைய பணம் செலவழிச்சு ஸ்பெஷல் கோச்சிங் கூட கொடுத்தான். பையனும் நல்லாத்தான் படிச்சான்.

"அவனுக்கு அதிர்ஷ்டம் இல்லைன்னு நினைச்சுண்டு, ஏதாவது ஆர்ட்ஸ் காலேஜ்ல சேர்த்துடு! அனாவசியமா இனிமே அவனைத் திட்டாதே!"ன்னு சொல்லிட்டு, கூடவே குமரனையும் அழைச்சிட்டு வீட்டுக்குப் போய், "அப்பா திட்டினதெல்லாம் மனசுல வைச்சுக்காதே! பேசாம அவர் சொல்றபடி ஏதாவது ஒரு டிகிரி வாங்கி, உங்கப்பா மாதிரியே பேங்க் உத்தியோகத்துக்குப் போயிடப்பா!" என்றேன்.

ஆனால், அவனோ, "மத்த படிப்பெல்லாம் படிக்க எனக்கு விருப்பமில்லை; விருப்பமில்லாமல் கல்லூரியில் சேர்ந்து, ஊர் சுற்றி என் எதிர்காலத்தைப் பாழாக்கிக் கொள்ள விரும்பவில்லை. பேசாம எனக்கு ஏதாவது வேலை வாங்கிக் கொடுத்திடுங்க. எதா இருந்தாலும் பரவாயில்லை!" என்றான்.

அவன் சொல்வதும் வாஸ்தவந்தானே? எத்தனை புத்திசாலிப் பசங்க தொண்ணூறு தொண்ணூத்தஞ்சுன்னு வாங்கியும், விருப்பமான பாடத்தைப் படிக்க முடியாமல், கிடைச்சதுல சேர்ந்துண்டு, அதையும் படிக்கப் பிடிக்காமல், சினிமா, பார்க்ன்னு சுத்திண்டு, கெட்டுப் போயிட்டிருக்காங்க. ஆனால், அதுக்காக இந்த சின்ன வயதில போய் என்ன வேலை பார்க்க முடியும்? பையனும் பிடிவாதமாக இருந்தான்.

"சரி, போ! உன் அப்பாகிட்ட பேசிக்கிறேன்"ன்னு சொல்லி அவனை அனுப்பிச்சுட்டு, என் பையனை அனுப்பி சுந்தரத்தை அழைத்து வரச் சொன்னேன்.

முகத்தை 'உர்' என்று வைத்தபடியே சுந்தரம் வந்தான். அவனிடம் நேரடியாகவே பேச ஆரம்பித்தேன்.

"ஏம்பா, சுந்தரம்! உனக்கு எவ்வளவு பெண்கள்?"

"இதென்ன, தெரியாத மாதிரி கேள்வி! அதான் ரெண்டு பெண்ணைப் பெத்துட்டுப் பாடாப் பட்டேனே!"

"அவங்களுக்கெல்லாம் வாழ்க்கைல என்ன செஞ்சே?"

"என்னடா? ஏதாவது பேட்டி எடுக்கிறயா? எல்லாத்தையும் ஸ்கூல் பைனல் வரை படிக்க வைச்சு, சுளையா மூணு லட்சம் செலவழிச்சு ரெண்டுத்துக்கும் கல்யாணத்தைப் பண்ணி வைச்சேன்! ஏண்டா எல்லாத்துக்கும் நீயும் கூடத்தானேடா இருந்த?"

"அது சரி இப்ப குமரனும் பெண்ணா இருந்திருந்தா என்ன பண்ணியிருப்பே?"

"அதையே தான் இப்பவும் பண்ணியிருப்பேன். படிச்சது போதும்னு நிறுத்திட்டு கட்டிக் கொடுத்திருப்பேன். இருந்ததெல்லாம் அதுங்களுக்குச் செய்திட்டேனே. அதுவும் இப்ப அதே மாதிரி செய்யணும்னா குறைஞ்சது இரண்டு லட்சமாவது வேணுமே. வீட்டைத்தான் அடமானம் வைக்கணும்!"

"அதையேதான் நான் சொல்ல வறேன்! அதுல பாதி செலவழிச்சு குமரனை என்ஜினிரிங்ல சேர்த்து டேன். மைசூர்ல ஒரு நல்ல என்ஜினிரிங் கல்லூரில கேபிடேஷன் (Capitation) கொடுத்தா மார்க் அடிப்படையில் சீட் கொடுக்கிறாங்க. இவனைவிட கொறச்சு மார்க் வாங்கியிருக்கிற என் தங்கை பையனை அங்கதான் சேர்க்கப் போறாங்க. சிரமத்தைப் பார்க்காம, வீடுமேல கடன் வாங்கியாவது, சேர்த்துவிடு! நாளைக்கே அவன் சம்பாதிக்க ஆரம்பிச்சான்னா இந்தப் பணமெல்லாம் ஒண்ணுமே இல்லப்பா. வேணும்கிற சொத்தை நாளைக்கு அவனாக்கூட சம்பாதிச்சுக்க முடியும். ஆனால், அவனுக்கு பி.ஈ.ங்கிற பட்டத்தை உன்னாலதாம்பா சம்பாதிச்சுக் கொடுக்க முடியும். யோசிச்சு ஒரு முடிவுக்கு வாப்பா!" என்று சொல்லி அனுப்பி வைத்தேன்.

"வீடு ஒண்ணுதான் பாக்கி, அதுகூட கண்ணை உறுத்த ஆரம்பிச்சுடுச்சு". ஏதோ முணுமுணுத்துண்டே போனான்.

நான் பி.டபிள்யூ.டி. இன்ஸ்பெக்ஷன் பிரிவில் இருந்ததால மறுநாளே டூர் போய் விட்டேன். ஒருமாதம் கழிச்சுத்தான் திரும்பி வந்தேன். வந்த உடனே என் மனைவி சொன்னாள்: "குமரனுக்கு நம்ம பாபு சேர்ந்திருக்கிற அதே மைசூர் காலேஜில இடம் கிடைச்சுடுத்தாம். நீங்க வந்த உடனே சொல்லி அனுப்பச் சொன்னார். உங்களை அழைச்சுட்டுப் போய்த்தான் பணம் கட்டணும்னு காத்திட்டு இருக்காங்க!"

உடனே தாமதிக்காம குமரனை அழைச்சிட்டுப் போய், பணத்தைக் கட்டி, ஹாஸ்டலில் அவனை விட்டுட்டுத் திரும்பும்போது அவன் ஒரு காரியம் செய்தான். நானோ, அவன் அப்பாவோ எதிர்பாராத விதமாக, என் காலில் விழுந்து, "சார்! நீங்க செய்த இந்த உதவியை என் வாழ்நாள் முழுவதும் மறக்கமாட்டேன்!" என்று கண்ணீர் மல்க அழுதான். ஊர் திரும்பி நெடுநாள் வரை அந்த மகிழ்ச்சி என் மனதை ஏதோ செய்துகொண்டே இருந்தது. நிச்சயம் இவன் வாழ்க்கையில் வெற்றி



## ஆரோக்கியத்துடன் இருக்கின்றோமா?

நம் அன்றாட வாழ்வில் மேற்படி. சந்தேகம் வருமேயானால் கீழ்வரும் அம்சங்கள் இருக்கின்றனவா என உறுதிப்படுத்திக் கொள்ளுங்கள்.

1. சுறுசுறுப்பாகவும், உற்சாகமாகவும் இருத்தல்.

2. நல்ல பசியும் உணவு உட்கொள்ள வேண்டும் என்ற ஆர்வமும் இருத்தல்.

3. வயதிற்கேற்ற உடல் வளர்ச்சியும், வளர்ச்சிக்கேற்ற உடல் எடையும் இருத்தல்.

4. தெளிந்த சிந்தனை, எதையும் எளிதில் உணரக் கூடிய ஆற்றல்.

5. பிரகாசமான கண்கள், நுண்ணொலி கேட்கும் காது, சுவையுணரும் நாக்கு, மூக்கு நன்கு இயங்கிக் கொண்டு இருத்தல்.

6. பற்கள் உறுதியாயிருத்தல், மது, புகை, போதை மருந்துகளின் மீது நாட்டமின்மை.

7. கவலையிலும், கஷ்டத்திலும் பாதிக்கப்படாமல் இருத்தல்.

8. மனத் தளர்ச்சியின்றி எச்செயலையும் துணிந்து செயலாற்றுதல்.

9. அன்பான பழக்க வழக்கங்கள். கோபத்திலும் எரிச்சலடையாமல் இருத்தல்.

இவையெல்லாம் ஒருங்கே பெற்றிருந்தால் மருந்தின்றி வாழ்ந்திடலாம்!

●

## இருதய நோய் வராமல் தடுக்க ஐந்து அறிவுரைகள்

**1. உணவில் கவனம் தேவை :** அதிக கலோரி (அதாவது சக்தி தரும் தன்மை) உடைய உணவுப் பொருள்கள் விஷயத்தில் அக்கறை வேண்டும்; அதாவது அவற்றை ஜீரணிக்கும் வகையில் உடல் உழைப்பு அமையாவிடில், அவையெல்லாம் கொழுப்புச்சத்தாக மாறி நிலைபெற்றுவிடும். ஆகவே எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும்.

**2. சீரான உடற்பயிற்சி அவசியம் :** தேகப்பயிற்சியின் விளைவாக இருதயத்திற்கு இரத்தம் அனுப்பும் செயல்பாடு செம்மையுறும்; நம் உடற்கட்டைச் சரி செய்து கொள்ள, அதிக வயது ஒரு தடையல்ல. அதை எப்போது வேண்டுமானாலும் தொடங்கலாம். ஆனால், நம் உடலை முழுமையாக மருத்துவப் பரிசோதனை செய்து கொண்ட பிறகே, நம் உடல் நிலைக்கேற்ற பயிற்சியை மேற்கொள்வது பாதுகாப்பு தரும் முறையாகும்.

**3. புகையே பெரும் பகை :** புகை பிடிக்காதவர்களைவிட அப்பழக்கம் கொண்டவர்களுக்கு இருதய நோயின் தாக்குதல் மிக விரைவிலேயே ஏற்படுகிறது என்பதில் சந்தேகமில்லை. ஆகவே, புகைபிடிக்கும்பழக்கமுள்ளவர்கள் உடனடியாக அப் பழக்கத்தை நிறுத்தி, வரவிருக்கும் ஆபத்தைக் குறைத்துக் கொள்ளலாமே!

**4. வேண்டாம் வீண் கவலை :** கவலை, பரபரப்பு, உணர்ச்சிக் கொந்தளிப்பு இவையெல்லாம் ரத்த அழுத்தத்தை அதிகரிக்கச் செய்பவை. நம் படபடப்பு, உடலெங்கும் பரவியுள்ள சிறு ரத்தக் குழாய்களை மேலும் சுருங்கச் செய்துவிடும். அத்துடன் ரத்தத்தில் உள்ள கொலஸ்ட்ரால் அளவையும் மேலேற்றிவிடும். இருதய நோய்கள் வருமுன் காக்க வேண்டுமானால் நம் மன நிலையை மிகவும் பாதிக்கக்கூடிய எந்தவிதச் சந்தர்ப்பங்களையும் தவிர்க்கப் பழகுதல் அவசியம்.

**5. அவ்வப்போது உடலைப் பரிசோதித்துக் கொள்வது அவசியம் :** உங்கள் பிறந்த நாள், உடலை மருத்துவப் பரிசோதனை செய்து கொள்ள நினைவூட்டுவதாக அமையட்டும். தவிர, உடல்நலன் சற்று மாற்றம் அடையும்போது, உடனே தக்க சிகிச்சையைச் செய்து கொள்ளுங்கள். உடல்நலக் குறைவிற்கான அறிகுறிகள் தோன்றும் போது அலட்சியமாக இருந்துவிட வேண்டாம்.

ஆதாரம் : சென்னை லயன்ஸ் மருத்துவமனையின் வெளியீடான You and your Heart என்ற கையேடு.

– கே. ஏ.

பெறுவான் என்று உறுதியாக நம்பினேன்.

இன்று, பல வருடங்களுக்குப் பிறகு தன் கல்யாணப் பத்திரிகையோடு வந்த அவனைப் பார்த்த போதுகூட அந்த நிகழ்ச்சிதான் முதலில் கண்முன் தோன்றியது. கூடவே மனதில் ஓர் உறுதியும் ஏற்பட்டது. என்ன ஆனாலும் சரி, பத்தாயிரமோ இருபதாயிரமோ லஞ்சமாய்க் கொடுத்து இங்கேயே சீட் வாங்கிறதவிட ஒரு லட்சம் ஆனாலும் பரவாயில்லைன்னு கேபிடேஷன் கொடுத்து – ரிடையர்மெண்ட்டுக்கப்புறம் சொந்தமா ஒரு குடிசையாவது போட்டுக்கணும்னு வைச்சிருக்கிற நிலத்தை வித்தாவது, ஒரு நல்ல காலேஜ்ல பையனைச் சேர்த்துவிட வேண்டியதுதான். ஒரு கல்லூரியோட வளர்ச்சிக்குக் கொடுத்த நன்கொடையாகவாவது அது இருக்கட்டும்.

என்ன செய்றது? சில சமயங்களில் நம்ம கடைப்பிடிக்கிற நேர்மையும் சத்தியமும் நம்ம பிள்ளைங்களைப் பாதிக்கும்கிற இக்கட்டான சூழ்நிலை வந்தாக்கூட நம்ம கொள்கையை விட்டுக் கொடுக்கக் கூடாதுங்கிற பிடிவாதத்தில இருக்கிறவங்க வாழ்க்கைல சில நஷ்டங்களை அனுபவிச்சுத்தான் தீரணும். இல்லாவிட்டால், பிற்காலத்தில இந்த விஷயத்தில பையன் நம்ம நேர்மையைப் பாராட்டமாட்டான். 'எங்கப்பன் ஓர் இருபதாயிரத்துக்கு மலைச்சு என் வாழ்க்கையைக் குட்டிச்சுவர் ஆக்கிட்டான்'னு தன் பசங்ககிட்ட பேசுவான். நான் போகணும்னு நெனச்ச அந்த சாமிதான் இன்னிக்கு குமரன் மூலமா எனக்கு இதை உணர்த்தி வைச்சிருக்கணும்.

காலை முதல் இருந்த மன உளைச்சல் நீங்கி, ஒரு தெளிவு ஏற்பட்டதில் உற்சாகத்துடன் வீட்டுக்கு நடையைக் கட்டினேன். ஃ

# அப்பாவுக்காக ஒரு திருட்டு

வேதா கோபாலன்

காலையில் கணவன் சாப்பிட்டுவிட்டுப் போனபின் அப்படியே கிடந்த தட்டுகளை எடுத்துக் கழுவிக்கொண்டிருந்தபோது தான் கதவை யாரோ தடதட வென்று தட்டும் ஒசை கேட்டது. கையை அப்படியே கழுவிக் கொண்டு குழாயை அவசரமாய் மூடிவிட்டுக் கதர்ப்புடைவையின் தலைப்பால் கையைத் துடைத்துக்கொண்டு திரும்பினாள் மைதிலி. இளநீலப்புடைவையில் திட்டுத் திட்டாய் ஈரம் பட்டுக் கருநீலமாய்த் தெரிந்தது.





யார் வாசல் கதவைத் தட்டுவது? அப்பாவாய் இருக்குமோ? அப்பாவையும் அம்மாவையும் பார்த்து எத்தனை நாளாகிவிட்டது? டூரிஸ்ட் பஸ்ஸில் க்ஷேத்திராடனம் மாதிரிப் போயிருந்தார் அப்பா. அதனால் அவரைப் பார்த்துக் கிட்டத்தட்ட ஒருமாசம ஆகிவிட்டது. வில்லிவாக்கத்துக்கு இரண்டு முறை போய் அம்மாவைப் பார்த்துவிட்டு வந்தார்கள் இவளும் கணவனும், அம்மா ஆஸ்த்துமா நோயாளி. அதனால் அப்பாவுடன் போகவில்லை என்று குறை.

நேற்றைக்கு அப்பா டூர் முடிந்து வந்திருக்க வேண்டும். அதனால் இன்றைக்கு மாலையில் போய் இரண்டு பேருமாய் அவர்களைப் பார்த்துவிட்டு வரலாம் என்று இவள் புருஷன் சொல்லியிருந்தான். அதற்குள் அப்பாவே வந்துவிட்டாரோ என்னவோ?

ஆசை ஆசையாய் இரண்டே எட்டில் வாசலை அடைந்து கதவைத் திறந்த மைதிலிக்கு முகத்தில் அறைந்த மாதிரி ஏமாற்றம்தான் மிஞ்சியது. காய்கறிகள் விற்கும் கிழவி நின்று கொண்டிருந்தாள். வழக்கமாய் வருபவள்தான்; படு கிழவி. சுருங்கிப்போன நைலான் புடைவை போல் முகம். மிஞ்சியிருந்த ஓரிரண்டு பற்களில் காவிக்கறையின் நிரந்தரத் தங்கல். கிழிந்து போன பழைய நூல் புடைவை. பெயருக்குத் தகுந்த மாதிரி நூல் நூலாய்த்தான் இருந்தது. இடுங்கிய கண்களில் நூறு வருஷ அனுபவம். அறுபது வயதின் தளர்ச்சி!

போனால் போகிறது என்று ஓரிரண்டு முறை பேரம் பண்ணாமல் வாங்கப்போய் இப்போது தினசரி வந்து கேட்பது ஒரு தொந்தரவாகவே போய்விட்டது.

"யம்மா.. எம்மாம் வெயில்.. உஸ். வாழைக்கா, வாழைத்தண்டு, வாழைப்பூ அல்லாம் கொணாந்திருக்கேன் கண்ணு... வாங்கிக்கோ..." உரிமையாய்ச் சொன்னவாறு கதவைத் திறந்துகொண்டு படிக்கட்டுக்கு இந்தப பக்கம் அமர்ந்துகொண்டு ஃபேன் காற்று முகத்தில் படுமாறு திரும்பிக் கொண்ட கிழவியை ஐயோ பாவம் என்று பார்த்தாள் மைதிலி.

"எனக்கு எதுவும் வேணாம் பாட்டி... போயிட்டு வா.. காசு இல்லை.." சங்கடத்துடன் சொன்னாள் உண்மையில் அவளிடம்

காசு எதுவும் இல்லை. மாசம் தனது இறுதி நாள்களை எண்ணிக் கொண்டிருக்கிறதே.

"அட உன்னண்டை காசு எவன் கேட்டான்? காய எடுத்துக்க ராசாத்தி... நீ எங்கே போறே.. நான்தான் எங்கே போறேன்? நிதானமாய் என்னிக்குக் காசு தர்றியோ தா.. காய் வித்து முடிஞ்சா போதும்... மருமக கிட்டே திட்டு வாங்க என் உடம்புல யும் சக்தி இல்லை... மனசுலயும் தெடம் இல்லை..." கிழவியின் குரலில் நடுக்கம். வயதாலா? பயத்தாலா?

"எனக்கு இன்னிக்குக் காயெல் லாம் வேணாம்... சமையல் முடிச்சுட்டேன். போயிட்டு வா... அதுக்கு முன்னால் தண்ணியாவது மோராவது குடுக்கறேன் குடிச் சுட்டுப் போறியா?" என்று கேட்ட வாறு வாழைக்காயைப் பார்த்தாள். அற்புதமான காய்கள். பிரமாத மாய் முற்றியிருந்தது. கடைக்குப் போனால் ஒன்றின் விலை இரண்டு ரூபாய்கூட ஆகும். இந்தக்கிழவி ஏமாந்த ஜென்மம். ஒரு ரூபாய்க்குக் கொடுத்துவிடும். ஆனால் கடன் சொல்லி வாங்கி னால் தன்கணவன் திட்டுவானோ என்று மைதிலிக்குப் பயமாய் இருந்தது.

"யம்மா.. நீ மவராசியா இருப்பே.. மோர் குடு தாயி.." கிழவி மகிழ்ச்சியுடன் கேட்டவுடன் உள்ளே போய் கிளாஸ் டம்ளரில் தொண்ணூறு சதவிகிதம் நீர் கலந்த மோரைக்கொண்டு வந்து கொடுத்தாள். கிழவி அகமகிழ்ந்து போய்விட்டாள். "இந்த வெயிலுக்கு எத்தனி எதம்மாய் இருக்கு தெரியுமா..." என்றவள், ஆயாசத் துடன், அப்படியே நீட்டிப்படுத்து விட்டாள் "கொஞ்சம் இப்பிடிப் படுத்துக்கறேம்மா... கண்ணை அசத்துது..." என்றவள் சட்டென்று அப்படியே தூங்க ஆரம்பித்து விட்டாள்.

நாலில் இரண்டில் அந்த வயதான ஆத்மா இப்படிப்பட்ட உரிமைகளை எடுத்துக்கொள்வது வழக்கம்தான். மைதிலி அனு மதித்துவிடுவாள். பாவம் கிழவி,



வீட்டுக்குப் போனால் மருமகள் தூங்கக்கூட விடாமல் வேலை கொடுத்துக்கொண்டே இருப்பாளாம்.

கிழவி தூங்கட்டும் என்று கதவைச் சாத்திக்கொண்டு உள்ளே வந்து இரண்டு நிமிடம் கூட ஆகியிருக்காது. மீண்டும் கதவைத் தட்டும் ஓசை. புருவம் நெரியக் கதவைத் திறந்தாள். இந்த முறை நிஜமாகவே அப்பா வந்துவிட்டதைப் பார்த்து வாயெல்லாம் பல்லானாள்.

"அடேடே... வாங்கப்பா வாங்க... டூரெல்லாம் நல்லபடியா முடிஞ்சுதா? கரெக்டாய்ச் சொன்ன தேதில திரும்பிட்டீங்க போலிருக்கே..? ஒரு லெட்டர்கூடப் போடலையேப்பா... நல்லவேளையாய் அம்மாவுக்காவது போட்டீங்களே.." மகிழ்ச்சியில் படபடப்பாகப் பேசியவாறு அப்பாவின் கையிலிருந்த பையை வாங்கிக்கொண்டாள் மைதிலி. அவளுக்குத் தலைகால் புரியவில்லை.

"என்னம்மா முழுப்பரீட்சை கேள்வித்தாள் மாதிரி அடுக்கறே? செத்த இரு... கை கால் கழுவிண்டு வந்து உனக்குப் பதில் சொல்றேன். ஒரு டம்ளர் ஜில்லுன்னு தண்ணி குடு." அப்பா சிரித்தவாறு சொன்னார்.

"எத்தனை மணிக்குப்பா கிளம்பினீங்க? குழம்பு, ரசம் எல்லாமே இருக்கு சாப்பிடறீங்களாப்பா?" ஆர்வக் குரலில் கேட்டாள்.

"நல்ல பசிம்மா... உனக்குத் தொந்தரவு இல்லைன்னா... சாப்பிடறேன், எனக்காக எதுவும் புதுசாய்ச் செய்துடாதே... எது இருக்கோ போதும்..." பெண் கஷ்டப்படக்கூடாது என்ற பரிவும் அக்கறையும் குரலில் தெரிந்தன.

சட்டென்று நினைவுக்கு வந்தது மைதிலிக்கு. இன்றைக்கு அவள் தொட்டுக்கொள்ளக் கறி எதுவும் சமைக்கவில்லை. வெறும் சாதமும் குழம்பும் மட்டும் போதுமா? பாவம் அப்பா. எப்போதோ ஒரு முறை வருபவர். வாய்க்கு ருசியாய்ச் செய்து போடவேண்டாமா?

காய் என்றவுடனே வாசல் பக்கம் இருந்த கிழவிதான் நினைவுக்கு வந்தாள். திரும்பிப் பார்த்தாள், மைதிலி. கிழவி அட்டகாசமாய்ச் சுவர்ப்பக்கம் திரும்பிப் படுத்துக்கொண்டு லேசான குறட்டையுடன் தூங்கிக் கொண்டிருந்தாள். அப்பா வந்த சத்தத்துக்குக்கூட எழுந்திருக்காமல் நல்ல தூக்கம். சுத்தமாய்க் கணக்கு வழக்கு எதுவும் தெரியாத ஜென்மம். இவளிடம் காய்கறி வாங்கும் தினங்களில் மைதிலியே கணக்குப் பண்ணி என்ன கொடுக்கிறாளோ அதை எண்ணக்கூடத் தெரியாமல் அப்படியே சுருக்குப் பையில் போட்டுக்கொண்டு விடுவாள்.

போதாக்குறைக்கு, "ரூபாய்க்கு மூணு காய்வீதம் இந்த மாங்காயை வித்தா... கூடையில் உள்ள அம்புட்டுக்காயும் வித்து முடிஞ்ச பெறகு எனக்கு எத்தனி ரூவாம்மா கிடைக்கும்?" என்று இவளிடமே கணக்குக் கற்றுக்கொண்டு போவாள்.

கூடையை எட்டிப் பார்த்தாள் மைதிலி. நெத்து நெத்தாய்க் க்காய்கள் சிரித்தன. திரும்பிப் பார்த்தாள். கிழவியின் முதுகில் உட்கார்ந்திருந்த கொசுவின் கடிக்குக்கூட அவள் அசையவில்லை.

சட்டென்று மைதிலி ஒரு காரியம் செய்தாள். அந்தக் கூடையிலிருந்த அரை டஜன் வாழைக்காய் சீப்பு ஒன்றை சட்டென்று எடுத்துக்கொண்டாள். இன்னொரு முறை திரும்பிப் பார்த்தாள். கிழவி அதே மாதிரியே சுவர்ப் பக்கம் திரும்பியிருந்தாள். அப்பா கொல்லைப்புறம் கால் அலம்பிக்கொண்டிருந்தது சர்ரென்ற குழாய் நீர் ஓசையிலிருந்து தெரிந்தது. ஆக, அவரும் எதையும் கவனிக்கவில்லை.

கணக்குக் கூடத் தெரியாத கிழவி இன்னொரு முறை கூடையைப் பார்த்தாலும் எதுவும் புரியாது என்று மகிழ்ச்சியாய் இருந்தது. கையில் காசில்லாமலேயே காய்கறிப் பிரச்னையைச் சமாளித்துவிட்ட திருப்தி முகத்தில் அப்பட்டமாய்த் தெரிந்தது.

"ஏம்மா... பாய்லர்ல வெந்நீர் மிச்சமிருக்கு போலிருக்கே... வீணாயிடுமே," என்று கவலையாய்க் கேட்டவாறு உள்ளே வந்த அப்பாவைப் பார்த்ததும் சட்டென்று வாழைக்காய்களை அரிசி டின்னில் போட்டு மறைத்தாள். இப்போது அவர் பார்த்தால் ஒன்றும் ஆகிவிடாதுதான். ஆனால், தனக்காக எதுவுமே புதிதாய்ச் சமைக்க வேண்டாம் என்று கண்டிப்பாய்ச் சொல்லியிருந்ததால் இவள் ஏதாவது சமைக்கப் போனாலே தடுத்துவிடுவார். அப்புறம் பாவம் தொட்டுக்கொள்ள எதுவும் இல்லாமல் சாப்பிட வேண்டும். அவருக்கு வாழைக்காய் என்றால் உயிர். அம்மா செய்கிற மாதிரி அதில் வதக்கல் செய்தால் என்னமாய் விரும்பிச் சாப்பிடுவார்!

"ஆங்... என்னப்பா கேட்டீங்க? வெந்நீர்தானே? ஆமாம்... நாங்க குளிச்சாச்சு. சுரேஷும் ஸ்கூலுக்குப் போயிட்டான்.... ஒண்ணு செய்யுங்களேம்ப்பா. நீங்க வேணா.. அந்தத் தண்ணில நல்லாக் குளிச்சுடுங்களேன். அப்புறம் சாப்பிடலாம்" என்றாள். உடல்நலம் கருதி, அவர் எத்தனை வெயிலிலும் வெந்நீரில்தான் குளிப்பது வழக்கம்.

"நல்ல ஐடியாம்மா. நான் குளிச்சுட்டு வந்துடறேன். நீ இலையைப் போடு..." என்றார் சந்தோஷமாய்.

இவளுக்கு நிம்மதியாய் இருந்தது. வாழைக்காயை நறுக்கும் போதும் வதக்கும்போதும் அப்பா பக்கத்தில் இருந்தாரானால் 'ஏம்மாச் சிரமப்படறே'. என்று தடுத்துவிடுவாரோ என்ற பயம் இனி இல்லை. "இருங்கப்பா வர்றேன்." என்றவள் புடைவையை இழுத்துச் செருகிக்கொண்டு பக்கெட்டில் வெந்நீர் ஊற்றிப் பதமாய் விளாவி, அவருக்கு ஏற்ற சூட்டில் கொண்டு போய் பாத்ரூமில் வைத்தாள். மொண்டு ஊற்றிக்கொள்ளக் குவளை ஒன்றையும் வைத்துவிட்டு, பாத்ரூம் கதவின்மேல் டவல் ஒன்றைப் போட்டுவிட்டு வந்தாள். அப்பாவுக்கு எல்லாமே சுத்தமாய் இருக்க வேண்டும். அதனால் நன்றாய்த் தோய்த்து உலர்த்திய டவலாய்ப் பார்த்து வைத்தாள்.

"ததரீனானா..." என்று கல்யாணியை இழுத்தவாறு அப்பா பாத்ரூம் கதவைச் சாத்திக் கொண்டு குளிக்க ஆரம்பித்தார். அப்பாவுக்கு எப்போதுமே குளிக்கும்போது பாட்டு தன்னிச்சையாய்க் கிளம்பிக்கொண்டு பாயும்.

கல்யாணி, மோஹனம், காம்போதி என்று ஜமாய்த்துக் கட்டுவார். சுருதி சுத்தமானக் குரல்.

சமையலறைக்கு வந்து, வாழைக்காயை எடுத்து, மெது வாய்த் தோல் சீவ ஆரம்பித்தாள். சுருள் சுருளாய் விழுந்தது தோல். இது போன்ற முற்றல் காய் கிடைக்க எத்தனை ரூபாய் வேண்டுமானாலும் கொடுக்கலாம். அழகாய் அரிவாள்மனையில் வைத்துப் பொறுமையாய் அழகாய்ச் சதுரம் சதுரமாய் டைஸ்கள் போல் நறுக்கினாள். அனுபவம் காரணமாய்க் கைகள் வேக வேகமாய் இயங்கின. தயாராய் வாணலியில் காய்ந்து கொண்டிருந்த எண்ணெயில் காயைப் போட்டபோது சொய்ங் என்று தெறித்தது. உப்பைப் போட்டுவிட்டு ஹாலுக்கு வந்தாள்.

கிழவி இன்னமும் அதே போஸில் தூங்கிக்கொண்டிருந்தாள். "டவலை எங்கேம்மா உலர்த்தட்டும்...?" குரல் கேட்ட போதுதான் அப்பா வந்துவிட்டது புரிந்தது.

"குடுங்கப்பா... நீங்க ஏன் சிரமப்படறீங்க? நானே உலர்த்தறேன்." என்றவாறு வாங்கிக் கொண்டாள். அப்பாவுக்காகப் பீரோவிலிருந்து வெள்ளை வெளேரென்று மின்னிய வேட்டி ஒன்றை எடுத்துக் கொடுத்தாள். பாச்சை உருண்டையின் வாசமும், ஃப்ளவர் டஸ்ட்டின் மணமுமாய் இணைந்து கிளம்பியது.

"பூஜை ரூமை நல்லா வெச்சிருக்கே... அம்மாடீ... இந்த வாட்டி எத்தனை கோயில் பார்த்துட்டேன் தெரியுமோ? மனசுக்கு ரொம்பவும் இதமாய் இருந்தது. உனக்காக நிறைய பூஜைப் பொருளெல்லாம் வாங்கி வந்திருக்கேன்." சொன்னவாறு சின்னக் கீற்றாய் விபூதியை எடுத்து நெற்றியில் இட்டுக்கொண்டு விழுந்து விழுந்து நமஸ்கரித்தார்.

அப்பா முணு முணுவென்று சின்னதாய் ஏதோ சுலோகம் சொல்லிக் கொண்டிருக்க, இவள் உள்ளே போய் அடுப்பில் இருந்த வாழைக்காயைக் கிளறிக் கொடுத்தாள். கணிசமாய்க் கண்டிருக்கிறது. நான்கு காய்கள்தான் நறுக்கினாள். ஆனால் அது வாணலி முழுக்க இருந்தமாதிரி தோன்றியது. பிஞ்சுக்காயாய் இருந்திருந்தால் இத்தனை நேரத்துக்குக் குன்றிப் போயிருக்கும். இந்த மாதிரிக் காயில் சிப்ஸ் செய்தால் எத்தனை அட்டகாசமாய் இருக்கும்? சே. இரண்டே இரண்டு காய்கள்தான் மிச்சமிருக்கின்றன. சே! எடுத்ததுதான் எடுத்தோம். ஒரு டஜன் சீப்பாய் எடுத்திருக்கக் கூடாதோ. இந்தச் சீப்பில் வெறும் ஆறு காய்கள்தான் இருந்தன.

டக்கென்று அடுப்பை அணைத்தாள். "அப்பா, ரெடி.... இலை போடட்டுமா?" கேட்டவாறு வந்தாள்.

இவள் கேள்வி காதில் விழாத வண்ணம் அப்பா பூஜையறையில் இருந்த சாமியிடம் என்னவோ பேசிக் கொண்டிருப்பதுபோல் சுலோகத்தை முணுமுணுத்துக் கொண்டிருந்தார்.

வெளியே வந்தவர், "உன் பூஜையில் ஓர் அன்னபூரணிதானே

**உடல் எடை குறைய :**

தினமும் காலையில் 5 கிராம் அளவு தேனை இளஞ்சூடான வெந்நீரில் கலந்து பருகி வந்தால் உடல் பருமன் குறையும். சதை பிடிக்காமல் தடுக்கும்.

**தலையின் பேன், பொடுகு நீங்க :**

தலைமுடி நன்கு வளர மிளகு பெருமளவில் உதவுகிறது. மிளகில் வெள்ளை மிளகு என்ற ஓர் இரகம் உண்டு. இந்த வெள்ளை மிளகைப் பால் ஊற்றி அரைத்துக் குளிக்கும் பெண்களுக்குத் தலை முடி உதிர்வது குறைந்து விடும். பேன், பொடுகு ஆகிய தொல்லை தலையில் இருப்பின் அவையும் அகலும். முடி வளர விரும்பும் ஆண்களும் இதை மேற்கொள்ளலாம்.

**குடிக்கும் தண்ணீரின் அளவைக் குறைக்க வேண்டாம்**



ஒவ்வொருவரும் நாள்தோறும் குறைந்தது எட்டு டம்ளர் தண்ணீரைத் தவறாமல் பருகி வருவது மிக நல்ல பழக்கம்; உடல் நலம் காக்கும் உயரிய பழக்கம். குடிக்கும் தண்ணீரின் அளவைக் குறைத்தால் உடலில் நீர்ச்சத்து குறைந்துவிடும். இரத்த ஓட்டம் எளிதாக நடைபெற சிரமப்படும் என்பதால் இது இருதயத்திற்கு நல்லதல்ல. சிறுநீரகம், பித்தப்பை போன்றவற்றில் கற்கள் உருவாகவும், குறைவாக நீர் உட்கொள்வதே காரணமாகிறது என்பதால் குடிக்கும் தண்ணீரின் அளவை எக்காரணங் கொண்டும் குறைக்க வேண்டாம். — சங்கரி சண்முகம்

வெச்சிருக்கே? மொத்தம் அஞ்சு அன்னபூரணி இருந்தால் ரொம்பவும் விசேஷம்மா... நான் உனக்கு ரெண்டு கொண்டு வந்திருக்கேன், வெச்சுக்கோ... வீட்டில் அன்னத்துக்குப் பஞ்சம் வராது. காய்களும் பழமுமாய் சுபிட்சமாய் நிறைஞ்சு இருக்கும்." என்று மனதாரச் சொன்னார்.

"ஆகட்டும்ப்பா." என்றவள், அவர் அன்னபூரணி கொண்டு வந்தவுடனேயே வீட்டில் காய்கறி நிறைந்துவிட்டதை உணர்ந்து மனசுக்குள் சிரித்துக்கொண்டாள்.

ஷெல்பில் தயாராய் எடுத்து வைத்திருந்த மந்தாரை இலையை எடுத்துத் தரையில் போட்டுத் தண்ணீர் தெளித்தாள்.

அப்பா அந்த இலையில்முன் அமர்ந்தார். கண்ணை மூடிக் கொண்டு இறைவனை வேண்டிக் கொண்டு கண்களைத் திறந்தார். எப்போதுமே இலை முன்பாக அமர்ந்தவுடனேயே அன்றைய வேளைக்குச் சாப்பாடு கொடுத்த இறைவனுக்கு நன்றி சொல்லும் வழக்கம் அவருக்கும் உண்டு. குழந்தைகளுக்கும் பழக்கிவிட்டிருந்தார்.

குக்கரைத் திறந்தாள். காலையில் வடித்த சாதத்தை அப்படியே மீண்டும் குக்கருடன் அடுப்பின்மேலே வைத்துச் சுட வைத்திருந்தாள். குக்கரைத் திறந்தபோது சூடான ஆவி பரவியது.

"என்னம்மா எனக்காகப் புதுசாய்ச் சாதம் வடிச்சியா என்ன?" அப்பா கவலையும் பதற்றமுமாய்க் கேட்டார்.

"சேச்சே... இல்லைப்பா... சாப்பிடறதை நல்லாச் சாப்பிடலாமேன்னு காலையில் வடிச்ச சாதத்தையே சுட வெச்சேன்." என்றவாறு தட்டிலிருந்த சாதத்தை அவர் இலையில் போட்டாள். "அப்புறம்... எப்பிடிப்பா இருந்தது உங்க டூர்? என்னென்ன ஊருக்கெல்லாம் போனீங்க?"

"ரொம்ப நிறைவான பயணம்மா... ஐயோ போதும் போதும்... எத்தனை முறை சாதம் போடுவே... சாப்பிடவே முடியாது..." என்றார்.

நெய்க் கிண்ணத்தில் மிச்சமிருந்த நெய்யை உருக்கி உருக்கித் தேற்றிக் கொண்டு வந்து ஊற்றினாள். இனிமேல் சம்பளம் வந்தால்தான் நெய் வாங்க முடியும்.

"குழம்பு நல்லா வெச்சிருக்கே... உங்க அம்மா மாதிரியேச் சமைக்கிறே..." என்று புகழ்ந்தார். அவளுக்கு மகிழ்ச்சியாய் இருந்தது.

ஆவி பறக்க, வாழைக்காய் வதக்கலை எடுத்து வந்து அவர் இலையைச் சமீபிக்கும்போது அவர் கேட்டார். "என்னம்மா காய் இது?"

"வாழைக்காய் வதக்கல் அப்பா... உங்களுக்கு உயிராச்சே... அம்மா பண்ற மாதிரியே பண்ணியிருக்கேன்." ஆசையாய் அத்தனைக் காயையும் அவர் இலையில் போட்டுவிடும் தீர்மானத்துடன் குனிந்தாள்.

அவர் அவசரமாய் இலையின் முன்னால் குனிந்துகொண்டார். "போட்டுடாதேம்மா. காசிக்குப் போனேன் இல்லையா... வாழைக்காய் சாப்பிடுவதை விட்டுட்டேன்." என்று தடக்கென்று அதிர்ச்சி வழங்கினார்.

"அ..ப்..பிடியா.." அப்படியே குன்றிப்போயிருந்தாள் மைதிலி. சே! திருட்டுத்தனமாய் அவருக்காக வாழைக்காயை எடுத்தது இறைவனுக்கே பொறுக்கவில்லை போலும்.

வாசல்பக்கம் புடைவைத் தலைப்பைக் கிழவி உதறிக் கொள்ளும் சத்தம் கேட்டது.

"யம்மா. நான் போயாரட்டுமா? நல்லாத் தூங்கிட்டேன் உன் வீட்டில். நீ நல்லாயிருப்பே... உன் புருஷனும் குழந்தையும் மவராசனாய் இருப்பாங்க..." என்று வாயார வாழ்த்திவிட்டுக் கிளம்பினாள் கிழவி.

"இரும்மா... உன்கிட்டேயிருந்து ஆறு வாழைக்காய் எடுத்துக்கிட்டேன். காசு குடுக்கறேன் இரு.." என்றாள். குரலிலிருந்த குற்ற உணர்ச்சியை மறைத்துக் கொண்டாள்.

"அட காசு உன்னாண்டையே இருக்கட்டும்மா... மாசக்கடைசி காசு இல்லைன்னு சொன்னியே... அடுத்த மாச ஆரம்பத்துல வாங்கிக்கறேன்." என்று அலட்சியமாய்ச் சொல்லிவிட்டுக் கிழவி இறங்கி நடந்தாள்! அவளின் குரல் தேய்ந்து மறைந்தது!

"காசியைப் பற்றிச் சொல்லுங்கப்பா..." என்று மனசாரக் கேட்டவாறு அப்பாவின் பக்கத்தில் உட்கார்ந்தாள்!

ஃ

# பண்டிதரின் தந்திரம்

# இளைய அமுதம்

தயாரிப்பு : குண்டு மணி

"வாருங்கள் பண்டிதரே! காசியில் இருந்தா வருகிறீர்கள்? தொலை தூரப் பயணமாயிற்றே!' என்று வரவேற்றார், ஹைதராபாத் நிஜாம்.

"ஆமாம்! ரயிலில் இருந்து இறங்கி, நேராக இங்குதான் வருகிறேன்!" என்றார், பண்டிதர்.

"அப்படியா? மகிழ்ச்சி... என் அரண்மனை அறை ஒன்றில் தங்கி ஓய்வு எடுத்துக் கொள்ளுங்கள்!" என உபசரித்தார், நிஜாம்.

"அதற்கெல்லாம் நேரமில்லை. இந்நகரில் இன்னும் சில பெரும் செல்வர்களைச் சந்தித்துவிட்டு இன்றே காசிக்குத் திரும்பியாக வேண்டும்!" என்ற பண்டிதர், நிஜாம் தன்னை 'என்ன காரியமாக வந்துள்ளீர்கள்?' என்று கேட்பார் என எதிர்பார்த்தார். ஆனால், நிஜாம் கேட்கவில்லை.

மாறாக நிஜாம், 'ஏதாவது நிதி வசூலாக இருக்குமோ?' என்று நினைத்தார். அவர் சற்றுப்பிடி வாதக்காரர்! . என்னைப் பார்க்க வந்தது சரி... இன்னும் சிலரையும் பார்க்கிறாராமே! அவர்களும் நானும் ஒன்றா?' என்று அவர் எண்ணமிட்டார். இறுதியில், 'எதற்காக இருந்தாலும் சரி... சல்லிக் காசுகூடக் கொடுக்கக் கூடாது!' என்று முடிவு செய்து கொண்டார். எனவே, எதற்கும் அவர் பிடி கொடுக்கவில்லை.

ஆனால், பண்டிதர் பலே ஆள். நேராகவே விவரத்தைக் கூறிவிட்டார். "நாங்கள் ஒரு நற்பணியைத் தொடங்கி உள்ளோம். அதற்கு நீங்கள் நிதியுதவி செய்ய வேண்டும்...!"

பண்டிதர் எப்படிக் கொக்கி போட்ட போதிலும் நிஜாம் அதில் சிக்கவில்லை. "நல்ல காரியம்...! செய்யுங்கள்... செய்யுங்கள்...! என் ஆசிகள் என்றும் உண்டு...!" என்றவாறு விலகிக் கொள்ள முயன்றார்.

அச்சமயம் பார்த்து நிஜாமைச் சந்திக்கச் சிலர் வந்தனர். அவர்களிடம் பேசி அனுப்பிய நிஜாம், "என்ன பண்டிதரே! நீங்கள் ஒரு நாள் தங்கிச் செல்லலாமே!" என்றார்.

"இல்லை...! இன்றே போயாக வேண்டும்!" என்ற பண்டிதர், நிதிவசூல் பற்றிப் பேச்சை எடுக்கும் முன்பே, நிஜாம் குறுக்கிட்டு, "அப்படியா... சரி! போய் வாரும்" எனக் கூறிவிட்டுப் பதிலுக்குக் காத்திராமல் எழுந்து உள்ளே போய்விட்டார்.

பண்டிதர், வேறு வழியின்றி, வெறும் கையோடு நிஜாம் மாளிகையை விட்டு வெளியேறினார்.

ஹைதராபாத் நகரில் வேறு சில செல்வர்களின் வீடுகளை நோக்கிப் போய்க் கொண்டிருந்தார், பண்டிதர்.

அவ்வழியே ஒரு பிணத்தின் இறுதி ஊர்வலம் போய்க் கொண்டிருந்தது. இறந்தவர் பெரும் பணக்காரர் போலும். உறவினர் பலர் பிணம் செல்லும் சாலை நெடுகிலும் சில்லறைக் காசுகளை வாரி இறைத்துக் கொண்டே



சென்றனர். நகரின் ஏழை பாழையர் அக் காசுகளை முட்டி மோதிக் கொண்டு பொறுக்கினார்கள்.

அக்காட்சியைக் கண்டதும் பண்டிதரின் மனத்தில் உடனே ஒரு யோசனை பளிச்சிட்டது. சட்டென்று ஓடிப்போய் அவரும் பிணத்துக்கு இறைக்கப்பட்ட சில்லறைக் காசுகளைப் பொறுக்கிச் சேகரிக்கலானார்.

பண்டிதருக்கு அது புதிய ஊர். தெரிந்தவர் அறிந்தவர் யாரும் இல்லாத இடம். எனவே, அவர் வெட்கப்படவில்லை.

ஆனால், பிணத்துடன் வந்தவர்கள், பண்டிதரின் உயர்ந்த ஆடையணிகளைப் பார்த்துவிட்டு, 'இவர் ஏன் இப்படி நடந்து கொள்கிறார்...?' என்று வியந்தனர். ஓர் இளைஞன் கேட்டே விட்டான்.

உடனே பண்டிதர், "நான் ஒரு நற்பணிக்காக நிதி திரட்டக் காசியில் இருந்து இந்த ஊருக்கு வந்தேன்... இங்கு என் நிலைமை இப்படியாகிவிட்டது..." என்றார்.

"ஏன்? வசூலாகவில்லையா? யார் யாரைப் பார்த்தீர்கள்?" →

## சிரஞ்சீவி இலக்கியங்கள்

'அலைசும் அற்புத உலகமும்', 'பார்க்கும் கண்ணாடி வழியே' குழந்தைகளுக்காக எழுதப்பட்ட இலக்கியங்கள். இந்த உலகப் பிரசித்திபெற்ற நூலுக்குப் படம் வரைந்து தந்தவர் சர் ஜான் டென்னியல். இந் நூலை எழுதியவர் ஸி.எல். டாட்ச்ஸன், இவர் ஆக்ஸ்போர்டு சர்வகலாசாலை கணக்குத் துறை வல்லுநர். அவர் 'லூயிஸ் கரால்' என்ற புனைப்பெயரைச் சூட்டிக் கொண்டு இந்த அற்புத இலக்கியங்களைப் படைத்தார்.

"தயவு செய்து அதையெல்லாம் கேட்காதீர்கள்...! இப்போது நான் காசிக்குத் திரும்பிப் போக வேண்டும்...! கையில் சல்லிக்காசும் இல்லை... அதற்காக நான் பிச்சை யெடுக்கவா முடியும்? அதைவிட இப்படிப் பிணத்துக்கு இறைக்கப் படும் காசுகளைப் பொறுக்குவது உத்தமம் இல்லையா? எனவே தான் ரயில் டிக்கெட்டுக்குத் தேவையான சில்லறையை மட்டும் பொறுக்கிக் கொண்டேன்...!"

அதைக் கேட்டுச் சுற்றி நின்றவர்கள் வாயடைத்துப் போய் விட்டனர். பண்டிதர் தொடர்ந்தார், "எப்படியோ... ஊருக்குத் திரும்பி விடுவேன்... அங்கு உள்ளவர்கள், 'என்ன பண்டிதரே! ஹைதராபாத் போனீர்களே... நல்ல வசூலா?' என்று கேட்கும் பொழுது, 'நிஜாம் ராச்சியத்தில் நற்பணிக்கு நன்கொடை கொடுக்க யாரும் இல்லாவிட்டாலும், ரயில் டிக்கெட்டுக்குப் பிச்சையெடுக்க வேண்டியிராத அளவுக்கு அங்கு பணம் திரட்டிக் கொண்டுவிட முடியும்' என்று என்னால் தைரியமாகப் பதில் சொல்லிக் கொள்ள முடியும்" என்றார்.

ஊர்வலத்தினர் ஓரளவு நடந்ததை ஊகித்து விட்டனர். அவர்கள் நிஜாம் ராச்சியத்தின் நிலைமை கண்டு வெட்கித் தலை குனிந்தார்கள்.

பண்டிதரின் இச் செயல்கள் பற்றிய எல்லா விவரங்களும், சற்று நேரத்தில் நிஜாம் வரையில் எப்படியோ எட்டிவிட்டது. அதன் பிறகுதான், அவருக்குத் தனது தவறு புரிந்தது. நிதியுதவி வழங்குவதில் இப்படிப் பிடிவாதமாகக் கஞ்சத்தனம் காட்டியது தவறு என்பதை அவர் புரிந்து கொண்டார். மிகவும் வருந்தினார்.

ஓர் ஆளை அனுப்பிப் பண்டிதரைக் கையோடு அழைத்து வரச் சொன்னார். அவரிடம் மன்னிப்புக் கேட்டார். பண்டிதர், 'போதும், போதும்' என்று கூறும் அளவுக்கு அவருடைய நற்பணிக்குத் தாராளமாக நிதியை வாரி வழங்கினார்.

தான் செய்த தந்திரம் வெற்றி பெற்று விட்டது கண்டு பண்டிதர் மகிழ்ந்தார்.

சரி குழந்தைகளே! அந்தத் தந்திரக்காரப் பண்டிதர் யார் தெரியுமா? - அவர்தான் பண்டித மதன் மோகன் மாளவியா!

இப்படியெல்லாம் சிரமப்பட்டு நிதி திரட்டி அவர் நிறுவியதுதான் காசியில் இன்றுள்ள 'காசி இந்து பல்கலைக் கழகம்!'

— ஜானகி மணாளன்

"நர்ஸரி ரைம்" என்று ஆங்கிலத்தில் சில குழந்தைகள் பாடுவது போலத் தமிழிலும் நிறைய வரவேண்டும் என்ற எண்ணத்தில் எழுந்த சில பாடல்கள்.

# மழலைச் சந்தம்

### தம்பி சீனிவாசன்





தாத்தாகூட வெளியே போக
தெருவில் நடக்கும்போது
எத்தனை எத்தனை வண்டி
எத்தனை எத்தனை காரு
எத்தனை எத்தனை பஸ்ஸு
எத்தனை எத்தனை லாரி
தாத்தாகூட வெளியே போக
தெருவில் நடக்கும்போது
எத்தனை எத்தனை ஸ்கூட்டர்
எத்தனை எத்தனை சைக்கிள்
எத்தனை எத்தனை ரிக்ஷா
எத்தனை எத்தனை மாடு
தாத்தாகூட வெளியே போக
தெருவில் நடக்கும்போது
இப்படி எல்லாம் வந்தால்
எப்படி நானும் நடப்பேன்!



கடுக்கு முடுக்கு முறுக்கு
கடிச்சு வாயில் நொறுக்கு
கடுக்கு முடுக்கு முறுக்கு
உருட்டு உருட்டு சீடை
உருட்டி உள்ளே தள்ளு
உருட்டு உருட்டு சீடை
இனிப்பு இனிப்பு மிட்டாய்
எனக்கும் உனக்கும் நிறைய
இருக்கு, எடுத்துத் தின்னு.
எடுத்து எடுத்துத் தின்னு,
முறுக்கு சீடை மீட்டாய்
இருக்கு உனக்கு எனக்கு.

குட்டி மாரி வீட்டில் யாரும்
மாரி மாரி மாரி.
அப்பா மிஸ்டர் மாரி
அம்மா மிஸஸ் மாரி
அண்ணா மாஸ்டர் மாரி
அக்கா மிஸ்ஸு மாரி
அப்பா மாரி போகிறார்
வேலை மாறிப் போகிறார்
வீடு மாறிப் போகிறார்.
ஊரும் மாறிப் போகிறார்.
அம்மா மாரி
அண்ணா மாரி
அக்கா மாரி போலவே
குட்டி மாரி கூட இன்று
வீடு மாறிப் போகிறான்!
ஊரும் மாறிப் போகிறான்!

# சமுத்திர ராணி!





சாட்கோ வாத்திய இசையில் வல்லுநன். ஒருநாள் படகில் சாட்கோ சென்று கொண்டிருக்கும்போது வாத்தியத்துடன் சமுத்திர ராஜன் இருந்த கடல் கோட்டைக்கு மிதந்து வந்து விட்டான்.

"உன் வாத்தியத்தை இசைத்து எங்களை மகிழ்விக்க வேண்டும்! அப்போதுதான் உன்னை அரண்மனையில் இருக்க விடுவோம். இல்லையேல் நீரில் அமுக்கி விடுவோம்!" என்றான் சமுத்திர ராஜன்.

சாட்கோ வாத்திய இசையை முழக்கியபோது கடல் கொந்தளித்தது. சமுத்திர ராஜன் நீரில் உருண்டான். கடலில் அலைகள் பயங்கரமாக அலைமோதின. அந்தச் சமுத்திரத்தின் சமுத்திர ராணி சாட்கோவிடம் வந்து, "உன் வாசிப்பினால் கடல் கொந்தளிக்கிறது. எங்கள் அரண்மனை வாசிகள் நீரில் மூழ்கி விடுவார்கள் போலிருக்கிறது. தற்செயலாக உன் வாத்தியத்தில் நேர்ந்ததாகத் தந்திக் கம்பிகளைத் தரித்துவிடு. உன் வாசிப்பு நின்றதும் கடல் கொந்தளிப்பு நின்று விடும்!" என்றாள். சமுத்திர ராணியின் கட்டளைக்குச் சாட்கோ அடிபணிந்தான். கடல் கொந்தளிப்பு நின்றது.

"எங்களுடனேயே தங்கியிருக்கலாம். எங்கள் அரண்மனை அழகிகளில் ஒருத்தியை மணந்து கொள்" என்று கேட்டுக் கொண்டான் சமுத்திர ராஜன்.

சமுத்திர ராணி செரநவா என்ற கறுப்பு அழகியைத் தேர்ந்தெடுக்கும்படி சாட்கோவுக்குச் சொல்லியிருந்தாள். செரநவாவை விமரிசையாக மணந்து கொண்டான் சாட்கோ. "இரவு தூங்கும் போது, நன்றாகத் தூங்குங்கள். காலையில் உங்களுக்கு ஓர் அதிசயம் காத்திருக்கும்."

காலை விடிந்ததும் சாட்கோ செரநவா நதிக்கரையில் தன் சொந்தக் கிராமத்தில் இருந்தான். அழகி செரநவாவும் அவனுக்குப் பணிவிடை செய்து கொண்டிருந்தாள். அழகிய வீட்டில் சாட்கோ தன் இசைவாத்திய முழக்கத்துடன் அழகி செரநவாவுடன் குதூகலமாகக் காலம் கழித்தான்!

# வேண்டுதல்...

இந்த வரம் நீ எனக்கு வழங்க வேண்டும் - இறைவா
எந்த நாளும் நான் சிறந்து விளங்க வேண்டும்
உன்ற னுக்காய் என் உளத்தைக் கோயில் செய்துள்ளேன் - அதன்
உள் ளிருந்து நாளும் எனை வழி நடத்து வாய்
— இறைவா

உலக மனித னாக நானும் வளர வேண்டும் - என்
உள்ளத் திலே உயர்ந்த வையே மலர வேண்டும்
வளர் கலைகள் அனைத் தையும் நான்பயில வேண்டும் - அதை
வைய நலம் வளர்க்கப் பயன் படுத்த வேண்டும்
— இறைவா

அறி வியலில் அருள் இயலைக் கலக்க வேண்டும் - உயிர்கள்
அத் தனைக்கும் சாந்தி வரச் செய்ய வேண்டும்
உறுபசி ஓவாப் பிணி செறு பகைஇம் மூன்றும் - எந்த
உலகி லுமே இல்லா மல்நீங்க வேண்டும்
— இறைவா



எளிமை தூய்மை தொண்டு மூன்றும் இலட்சிய மாக்கி - சொந்த
இலாப நோக்கை முழுது மாக அலட்சிய மாக்கி
சலிப்பில் லாமல் உலக வளம் தழைக்க உழைக்க- வேண்டும்
சக்தி யினைத் தந் தருள்வாய் கருணைக் கடலே!
— இறைவா

ரா. பொன்ராசன்

# எங்கள் ஊர்!

அமரர் குழந்தைக் கவிஞர் அழ. வள்ளியப்பா

என்றன் ஊரே இராயவரம்
இனிமைமிக்க சிறுநகராம்
மன்னர் ஆண்ட புதுக்கோட்டை
மாவட்டத்தைச் சேர்ந்ததுவாம்.

தென்னைமரங்கள் இருபுறமும்
தென்றல் வீசி வரவேற்கும்
செந்நெல் விளையும் வயல்களுமே
தெரியும் அந்த வழி யெல்லாம்.

ஊரின் உள்ளே நுழைந்ததுமே
உள்ளம் கவரும் கோபுரங்கள்
நேராய் உள்ள தெருக்களுடன்
நிறைய மாட மாளிகைகள்

பொன்னாச்சியெனும் ஊருணியில்
பொன்னைப் போன்ற நிறமுள்ள
தண்ணீர் உண்டு ஊர்மக்கள்
தாகம் தீர்க்கும் குணமுண்டு.



# இளம் கண்டுபிடிப்பாளர்!

இந்த வருடக் கண்டுபிடிப் பாளர் பரிசு இந்திய இளம் சிறுவன் அகில் ரஸ்டோசிக்குக் கிடைத் துள்ளது. இச்சிறுவனுக்கு வயது 12தான்! அறிவாளிகள் பொருள் கள் சொந்தக்காரர்கள் கழகம் (Intellectual Property owners Association) இந்தப் பரிசை வழங்கி உள்ளது.



பால் பாத்திரத்தில் கொட்டும்போது பால் சிந்திவிடுவ தால், சிந்தாதபடி பால் பாத்திரத் திற்குச் சிறப்பு மூடி தயாரித்துப் பெருமை பெற்றுள்ளான் இளம் விஞ்ஞானி ரஸ்டோசி.

'வாஷிங்டன் போஸ்ட்' பத்திரி கையில் இந்த இளம் சிறுவ னின் சாதனை பற்றி வெளியாகி இருக்கிறது. இவன் தந்தை அஜெய் ரஸ்டோசி மெக்கானிக்கல் இன்ஜினீயர்.

இளம் விஞ்ஞானி ரஸ்டோசி தனக்குக் கிடைக்கும் பணத்தில் இருந்து கல்லூரிப்படிப்பைத் தொட ருவதாகச் சொல்லியிருக்கிறான்!

ஆதாரம் : "ஸ்பான்"

## உங்களுக்குத் தெரியுமா?

வைரம் சாதாரணக் கரித்துண் டாக மண்ணுக்கு அடியில் புதைந் திருந்து ஆயிரம் ஆயிரம் ஆண்டு களாக அழுத்தப்பட்டு ஒளி பெற்றுவிட்டது.

முத்தும் பவளமும் கடலில் விளைபவை. இவை கற்கள் அல்ல. முத்து என்பது ஒரு வகை சுண் ணாம்பு. பவளம் ஒருவகை கடல்பூச்சிகளின் எச்சமாகும்!



## பூஜ்யம்!

மாணவன் : ஸார்! கணக்குப் பரீட்சையில் பூஜ்யம் மார்க்குக்கும் தகுதியானவனா என்று எனக்குச் சந்தேகமாயிருக்கு.

ஆசிரியர் : நீ தகுதியானவன் இல்லைதான்! ஆனால் இவ்வளவு குறைச்ச மார்க்குதான் என்னால் தர முடியும்!

# சங்கப் பலகை

## அறுகம்புல் சாற்றின் ஆற்றல்கள்

(ஆசிரியர் - மகரிஷி க. அருணா சலம். வெளியீடு - தமிழ்நாடு இயற்கை மருத்துவ சங்கம், மதுரை - 625 020. பக்கங்கள் - 24. விலை - ரூ. 4.00).

அறுகம்புல்லின் பெருமை, சித்த வைத்திய பதார்த்த குண விளக்கம் கூறும் அறுகம்புல்லின் பயன், இயற்கை மருத்துவத்தில் அறுகம்புல்லின் பணி, அற்புத அமுதமாக அறுகம்புல் பயன்படு வதை தெள்ளத் தெளிவாக விஞ் ஞானக் குறிப்புகளுடன் விளக்கு கிறது இந்நூல். மிகக் குறைந்த விலையில் நிறைந்த பயன் பெற இந்நூல் நிச்சயம் பயன்படும்.

—நாகு

## 12 சோதி லிங்கங்களின் வரலாறு

(ஆசிரியர் - ஈரோடு த. விசுவ நாதன். பதிப்பகம் - அருணோ தயம் பதிப்பகம், 3, கௌடியா மடம் சாலை, ராயப்பேட்டை, சென்னை - 600 014. பக்கங்கள் - 250. விலை - ரூ. 35.00).

சிவநெறிச் செல்வர் ஈரோடு விசுவநாதன் அவர்கள் எழுதியுள்ள இந்நூல் சர்க்கரை, முந்திரிப் பருப்பு இவை கலந்த பாயசம் போல் தெய்விக மகிமை, சிற்சில அற்புதச் செய்திகள், ஈசனின் கருணை, சிவனின் வீரத் திரு விளையாடல்கள் இவற்றைத் தன்னகத்தே கொண்டு படிப் பவர்களை எங்கோ இழுத்துச் செல்கிறது.

பற்பல தல வரலாறுகளைப் போரடிக்காமல் மிகச் சுவைபட ஆசிரியர் சொல்வதால், முழுக் கவனத்துடன் நூலை விரைவாகப் படிக்க முடிகிறது. வரலாறு களின் இடையே கும்பமேளா, திருவிழாக்கள், கோயிலின் உலக அதிசயம், அரசர்களின் சுக போகங்கள், பக்தர்களின் அற்புத அனுபவம் முதலான அரிய செய்திகளையும் இவர் உள்ளடக்கி சுருக்கமாக விவரிப்பதால் அந் தந்தத் தலங்களுக்கே சென்று நாமும் அவற்றை அனுபவிக்க ஓர் ஆவல் எழுகிறது. குறிப்பிட்டுச் சொல்ல வேண்டுமானால் அந்தச் 'சோமநாதம்' தலம் பற்றிய அதிசயங்கள் இருக்கிறனவே... அவற்றைப் படித்தால் மெய் சிலிர்க்கிறது. இவை மட்டுமல்ல 12 சோதிர்லிங்கத் தலங்கட்கும் நாம் பயணம் செய்கையில் கைக் கொள்ள வேண்டிய முக்கிய ஏற்பாடுகள், திட்டங்கள், எதிர் கொள்ளும் இக்கட்டுகள் போன்ற வற்றையும் இவர் விரிவாகச் சொல்லியிருப்பது அன்னாரது கருணை மனத்தைத் தெள்ளென விளக்குகிறது. புகைப்படங்கள் இன்னும் சற்றுத் தெளிவாக இருந் திருக்கலாம். மொத்தத்தில் ஆத்தி கர்கள் அனைவரும் வாங்க வேண்டிய அருமையான நூல் இது.

## சங்க நூல்களில் செடி கொடிகள்

(ஆசிரியர் - பி.எல். சாமி ஐ.ஏ.எஸ். (ஓய்வு). 4, கிழக்கு சந்நிதி வீதி, வில்லியனூர், புதுச் சேரி - 605 110. விலை - ரூ. 20.00).

பற்பல அறிவியல் நுணுக்கங் களையும், அன்றையத் தமிழரின் அற்புத மனத்தைப் பற்றியும், இலக்கிய இன்பத்தையும் தன்ன கத்தே கொண்டுள்ள நம் தமிழரின் சங்க இலக்கியங்கள் உலகப் புகழ் பெற்றவை. அயல்நாட்டு அறிஞர் பலரும் ஆழப்படித்து அனு பவித்து வருகின்றனர். ஆனால் நம்மவரோ ஏனோ பழந்தமிழர் நூல்கள் என்றாலே பாம்பைக் கண்டதுபோல் அஞ்சி ஓடுகின் றனர். அத்தகைய இக் காலத்துத் தமிழருக்கு இந்நூல் அமுதம் போல் அறிவின்பம் தருகிறது. இயற்கையோடு ஒன்றி வாழ்வது செடி கொடிகளைப் பயன் அறிந்து வளர்த்து, மருந்தாகவும் அவற்றைத் துய்த்து, அவற் றிடையே வாழ்ந்த பண்டைய தமிழர் நிலை பற்றி ஆசிரியர் மிகச் சுவையாகச் சொல்லுகின்றார்.

செடி, கொடி, புல், பூண்டு களில் கண்டறிந்த புதிய செய்திகளை அன்றைய தமிழர்கள் எப்படி நுணுக்கமாக ஆராய்ந்து பயன் துய்த்துள்ளனர் என்று நூலாசிரியர் படம் பிடித்துக் காட்டும்போது மெய்சிலிர்க்கிறது. உதாரணமாக 'காய்த்த கரந்தை... வயல்வந்து இறைகொண்டது தானை' என்ற சங்கப் பாட்டில் வாசனையுடைய கரந்தைச் செடி வளர்ந்த வயலில் சேனை தங்கியது என்பதை எடுத்துச் சொல்லி கரந்தையில் விஷ்ணுகரந்தை, சிவ கரந்தை என்று இரண்டு உண்டு என்று நுட்பமாக ஆராய்கிறார். அக்காலக் 'குன்றி'ச் செடிதான் (குன்றி அன்ன கண்ண... என்ற பாட்டு) இன்றைய 'குந்துமணி' என்பதும் அஃதை அன்றே தமிழர் பொன்னை எடை காண்பதற்குப் பயன்படுத்தினர் என்ற செய்தியை யும் நூலாசிரியர் எடுத்துக் காட்டியிருப்பது வியத்தற்குரியது. பிரம்பிற்கும் (Cane) புளியங்கனி போன்று சுவையான பழம் உண்டு என்பன போன்ற நுட்பங்களைத் தரும் நூல். பாராட்டுக்குரியது.

—கவிஞர் வேதம்

## "அம்மா வீட்டுச் சீதனம்"

(ஆசிரியர் - ஜே.டி.ஆர். வெளி யீடு - மணிமேகலைப் பிரசுரம், தபால் பெட்டி எண். 1447, 4, தணிகாசலம் சாலை, தி.நகர், சென்னை - 17. விலை - ரூ. 16.50)

இச்சிறுகதைத் தொகுப்பில் உள்ள அனைத்துக் கதைகளும் சிறப்பாக உள்ளன. இக்கதைகள் ஏற்கனவே பல பத்திரிகைகளில் வெளியானவை.

## "எட்ட நின்று சுட்ட நிலா"

(ஆசிரியர் - பாலகுமாரன். வெளியீடு - விசா பப்ளிகேஷன்ஸ், 55, வெங்கட் நாராயணா சாலை, தி. நகர், சென்னை - 17. விலை - ரூ. 24.00)

இந்த நாவலில் மிகச் சிறந்த கருத்துகள் கூறப்படுகின்றன. வீட்டிற்கு மூத்த மகனாகவும், தம்பிகளுக்கு அண்ணனாகவும் இருப்பது எவ்வளவு கொடுமை என்பதை இந்த நாவல் மூலம் உணர முடிகிறது.

—எம். சகுந்தலா தேவி

## கடலூருக்கு ஒரு டிக்கட்

(ஆசிரியர் - ரஸவாதி. வெளியீடு - தேன்மழைப் பதிப்பகம், ஆலந்தூர், சென்னை - 16. பக்கங்கள் 176. விலை ரூ. 22.00).

*ஓரிரு கதைகளைத் தவிர மற்றவையெல்லாம் பிரபல இதழ்களில் வெளியான 14 சிறுகதைகளின் தொகுப்பு நூலிது. லா.சா.ரா. போன்று எழுத்தை தபஸ்போல எண்ணி ஆழ்மன உணர்ச்சிகளை எளியமுறையில் எழுதும் வல்லமை ரஸவாதிக்கு உண்டு என்பதற்கு இது ஓர் அத்தாட்சி.*

## மருந்தில்லாத மனநல மருத்துவம்

(ஆசிரியர் - டாக்டர் ஆர்.எம். சோமசுந்தர். வெளியீடு - குமரன் பதிப்பகம், 2. முத்துகிருஷ்ணன் தெரு, சென்னை - 17. பக்கங்கள் 208. விலை - ரூ. 25.00).

*மனம் என்ற குரங்கின் தாவல்களையும் அதனால் ஏற்படும் ஆழ் மனப் பாதிப்புகளையும் அறிவியல் பூர்வமாக விவரித்து இந்த மனத்தில் ஏற்படும் கவலை, பயம், தாழ்வு மனப்பான்மை போன்றவை நீங்க பலவித சிகிச்சை முறைகளையும் விளக்கும் ஆக்கப்பூர்வமான நூல். மன நிம்மதியும், அமைதியும் பெற பல வழிமுறைகள் கூறப்பட்டுள்ளன.*

— பின்னலூர் மு. விவேகானந்தன்

## சிறுவர் நூல்கள்

(ஆசிரியர் - பேராசிரியர் எ. சோதி. வெளியீடு - நன்மொழிப் பதிப்பகம், 75, அரவிந்தர் வீதி, புதுச்சேரி - 1. விலை - 12.00).

*நேர்மையான வழியில் சிங்கத்தை எதிர்த்து வெல்கிறது ஒரு நரி. சுவாரஸ்யமான நெடுங்கதை. குழந்தைகளுக்கு மிகவும் தேவையான அறிவுரைகளை மறைமுகமாய்க் கொடுத்திருக்கும் முறை பாராட்டுக்குரியது. நரி என்றாலே தந்திரம், ஏமாற்று என்ற எண்ணத்தை மாற்றும் வகையில் அமைந்த கதை. அழகழகான ஓவியங்கள். குழந்தைகள் சிரமமின்றி வாசிக்குமளவுக்குப் பெரிய பெரிய எழுத்துகளாய் அச்சடிக்கப்பட்டிருக்கின்றன.*

## பாப்பாவுக்கு காக்கை, குருவி, கழுகு, கிளி கதைகள்

(ஆசிரியர் - குண்டுமணி. வெளியீடு - சாந்தி நிலையம், 108, உஸ்மான் சாலை, சென்னை - 17. விலை ரூ - 8.00).

*ஏற்கனவே நமக்குத் தெரிந்த சில கதைகள் இருந்தாலும் சொல்லப்பட்டிருக்கும் முறை மிகவும் கைதேர்ந்ததாய் உள்ளது. அந்தந்தப் பறவைகளுக்கேற்ற கதைகளாய் வகைப்படுத்தியிருக்கும் முறை மிகவும் பாராட்டத் தக்கது. குழந்தைகள் மிகவும் ரசித்துப் படிப்பார்கள்.*

# சங்கப் பலகை

## கௌசிக ஜோதிட சிந்தாமணி

(ஆசிரியர் - விட்டலாபுரம் ராஜன். வெளியீடு - மணிமேகலைப் பிரசுரம், 4, தணிகாசலம் தெரு, தி. நகர், சென்னை - 17. விலை ரூ. 17.00).

*சின்னச்சின்ன ஜோதிடக் குறிப்புகள் அடங்கிய நூல். எந்தத் தசையில் எந்த புக்தியில் என்ன அந்தரத்தில் எந்த மாதிரி நிகழ்ச்சிகள் நடக்கும் என்பதைப் பட்டியல் போட்டுக் கொடுத்திருக்கிறார் ஆசிரியர். மிகவும் சுருக்கமான குறிப்புகள். சில வியக்க வைக்கின்றன.*

*இந்நூல் நாடிகளில் பிரதானமான கௌசிக நாடியை அடிப்படையாய்க் கொண்டது. விஸ்வாமித்திரருக்கும் வசிஷ்டருக்கும் ஜோதிட விஷயமாய் ஏற்பட்ட வாக்கு வாதமே இந்நூல் என்கிறார் ஆசிரியர்.*

— பரணி பாலன்

## நானும் உன்னோடு

(ஆசிரியர் - எம்.வி. வெங்கட்ராமன். வெளியீடு - வானதி பதிப்பகம், 13, தீனதயாளு தெரு, தி. நகர், சென்னை - 17. விலை ரூ. 38.00).

*நீண்ட ஆறு குறு நாவல்களை உள்ளடக்கிய நூல். ஆளை அசத்திக் கட்டிப்போடும் வார்த்தை ஜாலங்கள். சௌராஷ்டிர மொழியில் நிறையக் கதை மாந்தர்கள் உரையாடினாலும் அவற்றிற்கு அர்த்தம் என்னவென்று நம் தலையைப் பிய்த்துக் கொள்ள வைக்காமல் அவ்வப்போது அடைப்புக்குறியில் விளக்கமாய் அதன் பொருளைச் சொல்லிவிடுகிறார் ஆசிரியர். ஒரு குறுநாவலுக்கு மிகவும் தைரியமாய் அந்த மொழியிலேயே தலைப்புக் கொடுத்திருக்கிறார். (மாய்ஃபாப்) குழப்பமின்றி ரசிக்க முடிகிறது. உணர்ச்சிகளை மிக நன்கு விளக்கி நம்மையும் உணரச் செய்வதில் இவருக்கு நிகர் இவரே.*

— ஜி. ஹரி

## விலங்கின விந்தைகள்

(ஆசிரியர் - தங்கவயல் லோகிதாசன். வெளியீடு - கலைவாணன் பதிப்பகம், 3/17, சத்தியமூர்த்தி நகர், அன்பு காலனி, நந்தனம், சென்னை - 35. விலை - 18.00).

*விலங்குகளின் பழக்க வழக்கங்கள், தோற்றம், உணவு முறைகள், போன்ற விவரங்களை எளிமையாகவும் சுருக்கமாகவும் கூறும் நூல். அநேகமாய் அனைத்துக் காட்டு விலங்குகளையும் பற்றிச் சொல்லி இருக்கிறார் ஆசிரியர்.*

*பல விவரங்கள் நமக்கும் தெரியாதவை. குழந்தைகளுக்குப் பலன் அளிக்கும் நூல். பெரியவர்களும் படித்துப் பலன் பெறலாம்.*

— வேதாஜி

## ஓ, ரிக்கி!

(ஆசிரியர் - டைரக்டர் மகேந்திரன். வெளியீடு - வானதி பதிப்பகம், 13, தீனதயாளு தெரு, தி. நகர், சென்னை - 17. விலை - ரூ. 15.00).

*தன் வாழ்க்கையில் நல்லவர்களின் அன்பினாலும், ஆசிர்வாதத்தாலும் உன்னத நிலை அடையும் பண்புள்ள ஓர் இளைஞனின் கதை. ஓ, ரிக்கி! இசையை நீ நேசிக்கிறாயா! இசை உன்னை நேசிக்கிறதா?*

— எம். சகுந்தலா தேவி

# உனக்கு மட்டும்...

உதயம் ராம்



- என்னைப் பிரசவித்து... இந்த பிரபஞ்சத்திற்கு தரப்போகின்றவளே... என் தாயே... உனக்கு மட்டும் கேட்கும்படி சில கேள்விகள்.
- கருவறையே பெண்ணுக்கு கல்லறையாகிறதாமே?
- காவலர்களே இன்று கற்பழிப்பு பயிற்சி வகுப்பு நடத்துகின்றார்களாமே?
- மதங்களா தாயே... மனனைப் படைத்தது? பின் எப்படி அது... மனிதனைப் பிடித்தது?
- சுயநலமும் சோம்பலுமா தாயே... பூமியின் சொத்துகள்?
- வன்முறையும் வக்கிரமுமா வாழ்வின் முகங்கள்?
- அராஜகமும் அநாகரிகமுமா ஆயிரம் காலத்துப் பயிர்கள்?
- விந்தில்கூட கலப்படம் செய்து விற்கின்றார்களாமே?
- பூமி உருண்டையா? - இல்லை ஊழல் பந்தா?
- பொன் விளையும் பூமியில் பொறுப்பற்ற மனிதர்களேன்?
- பூமியில் இவ்வளவு பிரச்னைகளேன்? புறப்படப் போகிறேன் விடைகாண...
- மாதங்கள் குறைவானாலும் பரவாயில்லை... மனமிரங்கி என்னை வெளியேற்று...

## "நாங்கள் இந்தியர்கள்!"

மன்னித்துவிடு மகாத்மா!-
நாங்கள் இந்தியர்கள்!

முகத்திற்கு நெருப்பு வைத்து விட்டு,
விரல்களுக்கு மருதாணி
வைப்பவர்கள்.

பாதங்களைத் தொலைத்துவிட்டு,
பாதையைக்
கண்டு பிடிப்பவர்கள்!

ஆலயத்தில் வேதங்களைப் பேசிவிட்டு
வீதிகளில் பேதங்கள் பேசுபவர்கள்!

இரைப்பையை விற்றுவிட்டு
இரைகளைப்
பெற்றவர்கள்!

கொடியைக்கோவணமாக்கிவிட்டு,
கொடிக் கம்பத்தைக் கொண்டு
கட்-அவுட் செய்பவர்கள்!

இருக்கும் அறிவை
அறுவைச் சிகிச்சைக்கு
அனுப்பிவிட்டு
இரவல் மூளைக்கு அலைபவர்கள்!

நீ வாங்கிக் கொடுத்த சுதந்திரம்
அதுவே!
நாங்கள் இந்தியர்கள்!-
எங்களைத் திருத்த முடியாது!

ஒ.எஸ்.எம். மங்கையர் செல்வன்



## என் நிலை

வாழ்வில் வீழ்ந்தேன்...
எனைக்கண்டு சிரித்தார்கள்!

எழுந்தேன்....
எனைக் கண்டு முறைத்தாகள்!

குனிந்தேன்....
என் முதுகில் குந்திக் கொண்டனர்!

நிமிர்ந்தேன்.....
எனைக் கண்டு ஒதுங்கினர்!

பணத்தைக் காட்டினேன்...
தங்கள் பல்லைக் காட்டினர்!

அ. விஜயசுந்தரம்

# ஓர் அழைப்பு

இனிய தென்றலே!
இல்லத்தின் கதவுகள்
மூடப்பட்ட வேளையிலும்,
உள்ளத்தின் நினைவுகளில்
நீயே!
கடந்த காலங்கள்
வானில் ஜொலித்த
நட்சத்திரங்கள்.
நாளைய வாழ்க்கையிலோ,
நல்லவன் முத்துகள்.
பூஞ்சோலைப் பயணத்தில்
புன்முறுவல் விடைகளே-
நெஞ்சங்கள் பிரியாது
அன்பிற்கில்லை தடைகளே!
வானம் நித்தம்
காட்சிமாறலாம்;
தேனின் சுவைகூடத்
திகட்டிவிடலாம்-
நம் ஆன்மாவில்
குடியிருக்கும் அன்பே தெய்வம்!
அன்பு கொண்ட
நமது சொந்தம்
என்றென்றும் வாழும்!

– தமிழ் முகில்

# கண்ணதாசன்



கல்ல டுக்கி வைப்பதுபோல்
சொல்லடுக்கி வைத்துவிட்டு
மெல்ல மெல்லக் கட்டுவதா கவிதை!-அதை
மென்றுவிடும் காலமெனும் கழுதை

கன்னலையும் கதலியையும்
கவிதையாக்கி உலாவவிட்ட
கண்ணதாசக் கவிஞனொரு மேதை - அவன்
கவிதைகளோ நமக்குத்தரும் போதை

குப்பனையும் சுப்பனையும்
கூடத் திரைப் பாடலினால்
அப்படியே அவன் கவர்ந்ததுண்டு - அவன்
பாடிய தத்தனையும் கற்கண்டு

– கலைமாமணி மா.வரதராஜன்

# தரமே நிரந்தரம்

பாரதி சந்திரன்

எண்ணிக்கை முக்கியமல்ல
இளைஞனே!
நீ ஈடுபடும்
படைப்போ, வேலையோ
எதுவானாலும்
தரத்தை சரிபார்த்துக் கொள்!
ஏனெனில்
தரம் ஒன்றுக்கே
மரியாதை நிரந்தரம்!
ஓராயிரம் ஊமத்தைப் பூக்கள்
பூத்தால் என்ன?
ஒரு ரோஜாவுக்கு ஈடாகுமா?



# காலம் வரும்

குறும்புக் கனவுகள்;
அரும்பும் நினைவுகள்!

நிரம்பும் நிம்மதி,
நெருப்பின் நேசம்;

சிரிப்புச் சிந்தனை;
சிதறிய சிந்தை!

பதறிய பகுத்தறிவு,
பாதை மாறிய பயணம்.
போதை தெளியாப் பேதை;
இரட்டை மணப் பெண்;
இணையாத தண்டவாளம்-
கலையாத கவிதை!
விளையாத விதை!
தடம் புரண்ட தத்துவங்கள்,
சீர் குலைந்த சித்திரங்கள்;
வேரறுந்த வேலிக் கொடி;
காதறுந்த கதர்ப் பை
என்றெல்லாம் "படம்' எடுக்க
எனக்கும் ஒரு காலம் வரும்!

கல்லங்கொல்லை ச. மோகன்



# பாவை பக்கங்கள்

(அமுதசுரபி வழங்கும் பெண்கள் பகுதி)




# எண்ணிப் பார்க்கலாம் பெண்ணே!

அன்புச் சகோதரிகளே!

பெண்களுக்குப் பொதுவாகவே ஒரு குணம் உண்டு. தான் மட்டும் தான் எல்லாவற்றையும் தாங்கிக் கொண்டிருப்பதாக ஒரு நினைப்பு. ஒரளவு உண்மையும் கூட அது.

பெண் கல்யாணத்திற்கு சிறுகச் சிறுக பாத்திரம், நகை சேர்ப்பதில் இருந்து, இன்ஷூரன்ஸ் பிரீமியம் இந்த மாதம் கட்டவேண்டுமே என்று ஞாபகம் வைத்துக் கொண்டு செய்வது வரை, பொறுப்பெடுத்துக் கொண்டு செய்வதில் பெண்கள் படு சமர்த்தர்கள்.

ஆனால் இதில் ஒரே ஒரு சிக்கல். இந்த மாதிரி, அது செய்ய வேண்டும், இதை முடிக்க வேண்டும் என்று எப்போதும் யோசித்து யோசித்துச் செய்வதில் பெரும்பாலும் அவள் இறந்த காலத்தையோ, எதிர்காலத்தி லேயோதான் வாழ்ந்து கொண் டிக்கிறாளே தவிர நிகழ் காலத்தை மறந்து விடுகிறாள்; அல்லது இழந்து விடுகிறாள்.

வாழ்க்கையில் இறந்தகாலம் முடிந்த ஒன்று. எதிர்காலம் நமக்குப் புரியாத அல்லது தெளிவாகத் தெரியாத ஒன்று. அப்படி இருக்கும்போது, நிச்சயமாகக் கண்ணில் தெரியும் நிகழ்காலத்தில் நிறைவாக வாழ்ந்து விட்டுப் போகலாமே!

கல்யாணமாகி வந்திருப்போம். கணவன் எதிர்பார்த்த அளவு சாதுர்யமில்லை. கொஞ்சம் டல்தான். மாமியார் மேஜர் ஜெனரல் மாதிரி மிரட்டுகிறாள். பெரிய குடும்பம், எப்போதும் வேலை.

இப்படி ஒரு சூழல் அமைந்து விட்டால் "சே! எனக்கு மட்டும் அந்த டாக்டர் வரன் அமைந் திருந்தால் எப்படி இருந்திருக்கும்?" என்றோ, "என் அம்மா வீட்டில் எப்படி ராணி மாதிரி இருந்தேன்? இங்கு வந்து வேலைக்காரி மாதிரி வேலை செய்யும்படி ஆகிவிட்டதே" என்றோ புலம்புவதில் என்ன பயன்?

ஆன கல்யாணத்தை அழிக்க முடியுமா?

இதற்கு மாறாக "எனக்கு அமைந்துவிட்ட வாழ்க்கை இது. புகுந்த வீட்டினர் இந்த குணங் களுடன் இருக்கிறார்கள். அவர் களுக்குத் தகுந்த மாதிரி என்னைப் பழக்கப்படுத்திக் கொள்வதே உசிதம்" என்று மனதைத் தெளிவு படுத்திக் கொண்டால் இன்றைய சந்தோஷம் நிலைக்கும்.

அதற்காக, மாமியார் கொடுமை, கணவன் சித்திரவதை இதையெல்லாம் பொறுத்துக் கொள்ள வேண்டும் என்பது அர்த்தமில்லை.

சின்னச் சின்ன விஷயங்களுக் காக நிகழ்கால சந்தோஷங்களை இழக்கவேண்டாம் என்கிற எண்ணம் வந்தால் போதும்.

படிக்கவில்லை என்பதற்காகக் குழந்தையைத் திட்டிவிட்டால், அடுத்த நிமிடம் அதை மறந்து சாதாரணமாகி விடலாம். காலை யில் கணவன் சுள்ளென்று ஒரு வார்த்தை சொல்லியிருந்தால், அந்தக் கோபத்தை மாலைவரை போற்றிப் பாதுகாத்து அவனே மறந்துவிட்ட அதை, வந்தவுடன், ஆரம்பித்து சண்டை போட்டு... அழுது, மறுபடி தொடர்ந்து... இது எதற்கு?

மனிதர்களை, அவர்களின் குணங்களை, நம் உணர்ச்சிகளை, சுற்றி நடக்கும் விஷயங்களை எல்லாவற்றையுமே அந்தக் கணத்திற்காகப் பாருங்கள். பழைய கோபம், புதிய எதிர்பார்ப்பு எதுவுமே இல்லாமல் வாழ்க்கையை இந்த நிமிடத்திற்காக மட்டுமே வாழ ஆரம்பியுங்கள்.

ஏனென்றால் நம் சந்தோஷம் வெளியே இல்லை. நமக்குள்தான் இருக்கிறது. நமக்குள்ளே இருக் கும் நமக்குச் சொந்தமான ஒன்றை வெளியே இருப்பவர்கள் கெடுக்க அனுமதிக்கலாமா?

கொஞ்சம் எண்ணிப் பாருங்கள்!

'பாவை பக்கங்'களைப் படிக்கும்வாசகர்களிடமிருந்து கோலப் போட்டிக்கு நிறைய கடிதங்கள் வருகின்றன. சந்தோஷம். ஆனால் போட்டியில் மட்டுமே பங்கெடுப்பேன் என்பது என்ன நியாயம்? உங்களுக்கு வேறு எவ்வளவோ திறமையிருக்கலாம். எண்ணங்கள் தோன்றலாம். உங்கள் பாட்டி சொன்ன கஷாயம் போடத் தெரிந்திருக்கலாம்.

அதையெல்லாம் எங்களுக்கு எழுத்து வடிவில் அனுப்பலாமே! "இதையெல்லாம் எழுதலாமா, இதைப் போடுவார்களா, போடா விட்டால் எழுதியது வீண்தானே" - இப்படிப்பட்ட எண்ணங்கள் வந் தால் தூக்கி ஓரமாக வையுங்கள்.

நினைத்ததை எழுதுங்கள். திறமையில்லாதவர் இங்கு யாரு மில்லை! தன்னம்பிக்கையுடன் எழுதுங்கள்.

நட்புடன்

கிரிஜா ராகவன்






# மங்கையர் மகிழ்ந்திட மகத்தான சேவை

பத்மா கோபால்

பல நாள்களாக என் தோழி ஒருத்தி சொல்லிக் கொண்டே இருந்தாள், ஏதாவது யோகா வகுப்பில் சேர வேண்டும் என்று. யோகா செய்தால் உடம்பு குறையும், டிரிம்மாக இருக்கலாம் என்று அவளிடம் யாரோ சொன்னார்களாம்.

எனக்கும் ஆசைதான். ஆனால் தினமும் போக வேண்டும், ஒரு குறிப்பிட்ட நேரம் உட்கார வேண்டும், உடம்பை வளைத்து நீட்டி எக்ஸர்ஸைஸ் செய்ய வேண்டும் - இந்த எண்ணமே என்னைக் களைப்பாக்கி விடும்.

'வேண்டாம் போ' என்று விட்டு விடுவேன். போதாக் குறைக்கு காசு வேறு நிறைய செலவாகும் என்ற பயம் வேறு!

சரி ஏதாவது புத்தகம் படித்துத் தெரிந்து கொள்ளலாம் என்றால் நாலு பக்கம் படிப்பதற்குள் நாற்பது சந்தேகங்கள்!

அப்போதுதான் அடுத்த தெருவில் ஒரு வீட்டில் காலை 7 இல் இருந்து 9 வரை வீட்டில் வந்து சொல்லிக்கொடுக்கிறார்கள் என்று கேள்விப்பட்டுப் போனேன்.

திரு. ராம்தாஸ் - ஆத்ம ஞான யோகா நிலையத்தின் ஓர் ஆசிரியர். பார்க்க வயதில் சிறியவராகத்தான் இருந்தார். ஒரு நாள் இரண்டு நாள் போக ஆரம்பித்ததுமே எனக்கு இதன் வித்தியாசம் புரிய ஆரம்பித்து விட்டது.

எல்லாமே மூச்சு சம்பந்தமான பயிற்சிகள்தான். ரொம்ப சுலபமாகவும் இருந்தது.

பாதி வகுப்புதான் யோகா; மீதி யாவும் வாழ்க்கைக் கல்வி. (உடனே கற்பனையில் டி.வி.யில் நன்னன் தோன்றுகிறாரா!) சாதாரண வாழ்வில் நாம் செய்யும் சின்னச் சின்னத் தவறுகள், குடும்ப சந்தோஷத்திற்காக நம்மிடம் நாம் கொண்டுவரக் கூடிய சில மாற்றங்களைப் பற்றி மிக அழகாக அவர் எடுத்துக் கூறக்கூற மனசின் ஒரு பக்கம் ஏதோ வெளிச்சம் உள்ளே புகுந்து கொண்டது போல் இருந்தது.

மூச்சை ஒரே சீராக இழுத்து விடுவது போல், எண்ணங்கள் ஒரே சீராக இயங்க ஆரம்பித்து விட்டன.

கோபம், ஆத்திரம், படபடப்பு ஆகியன யாவும் அடங்குவதுடன், தைரியம், அமைதி ஆகியவை அதிகமாவதையும் உணர முடிகிறது.

இந்த நிலையத்தின் இந்த பத்து நாள் பயிற்சி மூலம் ஆஸ்துமா, டையாபடிஸ், ஹார்ட் பிராப்ளம், டென்ஷன், ருமாடிக் பெயின், பிளட் பிரஷர் என்ற எல்லாமே தீர்க்கப்படும் என்று அடித்துச் சொல்கிறார்கள்.

பத்து நாளில் என்னுடைய முதுகுவலி "போயே போச்சு" என்பது நான் என் அனுபவத்தில் கண்ட உண்மை.

இவர்களின் இன்னொரு சிறப்பு - வகுப்புகளைத் தேடி நீங்கள் போக வேண்டியதில்லை. பத்து பேர் ஓர் இடத்தில் சேர்ந்து நேரத்தையும் தேதியையும் சொன்னால் ஓடிவந்து வகுப்பெடுக்கிறார்கள்.

→

டாக்டருக்கும் மாத்திரைக்கும் கொடுக்கும் பணம் மிச்சப்படும் என்றால் இவர்கள் கேட்கிற 150/- ரூபாய் ஒன்றும் பெரிய விஷய மில்லை என்றுதான் எனக்குத் தோன்றியது.

பத்து நாள் வகுப்பு முடிந்த பிறகு ஒரு மாதம் கழித்து ஏதாவது சந்தேகம் வந்தால் கவலை யில்லை. இந்த வகுப்பு எங்கு நடந்தாலும் மறுபடி இலவசமாகப் போய் ஞாபகங்களைப் புதுப் பித்துக் கொள்ளலாம். ஒருமுறை சேர்ந்துவிட்டால் வாழ்நாள் முழு வதும் இலவசம்தான்.

நல்ல விஷயங்களைப் பற்றி நாம் அறிய நேரும்போது, நமக்குத் தெரிந்த நாலு பேருடன் அதைப் பகிர்ந்து கொள்வதில் தான் உண்மையான சந்தோஷமே இருக்கிறது.

அந்த வகையில் எனக்கு இதைப் பற்றி சொல்லிக் கொள்ள லாம் போலத் தோன்றியதைச் சொல்லி இருக்கிறேன்.

இதற்கு மேலும் விரிவாக விவரம் சொல்லக் கூடியவர் இதன் ஸ்தாபகர் திரு. நாரா யிணன். 4996457 - என்ற தொலை பேசி எண்ணுடன் தொடர்பு கொண்டு உங்கள் சந்தேகங்களை நிவர்த்தி செய்து கொண்டு பயனடையலாம்.




## புதுமையான கோலப் போட்டி

இந்த மாதம் பரிசு பெறும் கோலத்தை வரைந்தவர் :

என்.எஸ்.கே. வள்ளி, 18 / 140, ஜீவா சாலை, பெரியார் நகர், ஆழ்வார் திருநகர், சென்னை - 87.

• வாசகர்கள் இந்த இடம் பிடித்துப் பரிசு பெற இதுவரை வெளிவராத புதுமையான சிறந்த கோலத்தை, கறுப்பு மையினால் வரைந்தனுப்பவும். தேர்ந்தெடுக் கப்படும் கோலத்துக்குப் பரிசு ரூ. 50/- •




பிரசுரத்திற்குத் தேர்ந்தெடுக் கப்பட்ட மற்ற கோலங்களை வரைந்தவர்கள் :

எஸ். பரிமளம், துரை நல்லூர், உமா சேதுராமன், சென்னை - 4.



# குழந்தைகளுடன் நாம் ...

'ஜெய ரோஜா'




என் தோழி ஆண்டாளின் கைக் குழந்தை இறந்த சம்பவம் ஒன்று நினைவுக்கு வருகிறது.

கைக் குழந்தையைத் தூங்க வைத்து நடுக்கூடத்தில் பாய் விரித்துக் கிடத்திவிட்டு அம்மாக் காரி சமையல் வேலையைக் கவ னிக்கப் போனாள். புருஷன் வேலைக்குப் போகிற அவசரத்தில் சைக்கிளுக்குக் காற்றடித்து விட்டு பம்ப்பை ஓர் ஓரமாகப் போட்டு விட்டுச் சென்று விட்டான். நான்கு வயதுப் பையன் பிரகாஷின் கையும் காலும் துறுதுறுத்தன. 'பம்ப்பை' எடுத்துக் கொண்டு வந்தான். மெல்ல மெல்ல 'பம்ப்' அடிக்க அடிக்க உற்சாகம் ஏற்பட்டது. 'பம்ப்பி'ன் மறுமுனையை, தூங்கிக் கொண்டிருக்கும் குழந்தையின் வாயில் வைத்து, தான் என்ன செய்கிறோம் என்பது தெரியாமல், உற்சாகமாகக் காற்றடித்தான். குழந்தையின் வயிறு வீங்கி, மூச்சுத் திணறி இறந்துவிட்டது. வேலையை முடித்துவிட்டு அம்மா வந்து பார்த்தபோது இறந்து போயிருந்த குழந்தையைக் கண்டு அலறினாள்.

அக்கம் பக்கத்தில் இருந்து பலர் வந்து கூடிவிட்டார்கள். தகப்பனுக்குச் செய்தி போய், அவன் அலறி அடித்துக் கொண்டு ஓடிவந்தான். குழந்தையின் இறப்புக்கான காரணத்தை அறிந் ததும் வெறிபிடித்தவன் போல் பிரகாஷை அறைந்தான். அவன் மிரள மிரள விழித்துக்கொண்டு மூலையில் பதுங்கினான்.

ஒன்றுமே புரியவில்லை. தான் ஏதோ தவறு செய்து விட்டோம் என்று மட்டும் தெரிகிறது. இது அந்தக் குழந்தையைப் பெரிதும் வாட்டியது. நெஞ்சில் பெரும் திகில் குடிகொண்டது. இந்த அதிர்ச்சி அந்தக் குழந்தையின் உயிரைக் குடித்தது. கைக் குழந்தை இறந்த பத்தாவது நாள் பெரிய குழந்தையும் இறந்து விட்டது.

இதற்குக் காரணம் யார்? பெற்றோரின் கவனமின்மைதானே முதல் இறப்புக்குக் காரணம்? குழந்தையின் கண்ணில் படும்படி அவன் கைக்கு எட்டும் இடத்தில் அந்தப் 'பம்ப்பை' வைத்திருக்க லாமா? தவறு பெற்றோரிடம் இருக்கக் குழந்தையைக் கண்டிக்க லாமா? அது அந்தக் குழந்தையின் இதயத்தை எந்த அளவுக்குக் காயப்படுத்திவிட்டது!

சிறு குழந்தைகளை வைத் துள்ள பெற்றோர் மிகவும் எச்ச ரிக்கையுடன் இருக்க வேண்டும். ஊசி, கத்தி போன்ற அபாய கரமான பொருள்களை அவர்கள் கைக்கு எட்டும்படி வைக்கக் கூடாது. துப்பாக்கி 'லைசன்ஸ்' வைத்திருப்பவர்கள் துப்பாக்கியை குழந்தைகளுக்கு எட்டும்படி வைக்கக்கூடாது. சிலர் வேடிக்கை யாகக் குழந்தைகள் எதிரில் துப்பாக்கியை நீட்டி 'டிஷ்யூம் டிஷ்யூம்' என்பார்கள். இது மிகவும் தவறானது.

பன்னிரண்டு வயதுப் பையன் நான்கு வயதுப் பையனின் எதிரில் கத்தியை நீட்டி, 'hands up' என்று வேடிக்கைக்காக மிரட்டினான். இது வேடிக்கை என்று அவ னுக்குத் தெரியும்; குழந்தைக்குத் தெரியுமா? மற்றொரு நாள் குழந்தை கையில் கத்தி கிடைக்க, அது அந்தப் பெரிய பையனை நோக்கிக் கத்தியை நீட்ட அந்தப் பையன் அலறிய அலறல்! குழந்தையின் பின்னாலிருந்து தாய் சட்டென்று பிடித்துக் கொண்ட தால் ஒரு விபத்து தவிர்க்கப் பட்டது.

சில வீடுகளில் மிக்ஸி, கிரைண்டர் போன்றவற்றை 'ப்ளக்' கில் எப்போதும் இணைத்து வைத் திருந்து அவ்வப்பொழுது கீழே உள்ள 'ஸ்விட்'சைப் போடவோ அணைக்கவோ செய்வார்கள். இது தவறு. பாதி அரைத்துக் கொண் டிருக்கும்போது கீழே மட்டும் 'ஆஃப்' பண்ணி விட்டு வேறு வேலையை கவனிக்கப் போனதால், ஏற்பட்ட விபரீதங்கள் பல. என்ன அவசர வேலையாக இருந்தாலும் 'ப்ளக்' இணைப்பை எடுத்து விட்டுத்தான் அகல வேண்டும். இது சிறு குழந்தைகள் உள்ள வீட்டில் கண்டிப்பாகக் கடைப் பிடிக்க வேண்டிய முறையாகும்.

எங்கள் வீட்டில் தற்பொழுது எல்லாரும் பெரியவர்கள்தான். சிறு குழந்தை இல்லை. ஒரு நாள் காரட் துருவ எண்ணி துண்டங் களாக நறுக்கினேன். அவற்றை 'மிக்ஸி'யில் போட்டு 'ப்ளக்'கைச் செருகினேன். அடுத்த நொடி துண்டங்கள் அனைத்தும் வெளியே சிதறி விழுந்தன. 'என்ன, எப்படி நிகழ்ந்தது இது?' என்று திகைத் தேன். பிறகுதான் நினைவு வந்தது. சில நாள்களுக்கு முன உற வினர்கள் வந்திருந்தார்கள். அவர் களுக்கு ஒரு துறுதுறு குழந்தை. எப்பொழுதும் மிக்ஸி, கிரைண்டர், டி.வி., ரேடியோ என்று எதை யாவது திருகிக் கொண்டே இருக் கும். நானும் கூடவே போய் அது 'on' செய்ததை 'off' செய்தேன். ஏதோ ஒரு சமயம் நான் பார்க்காத நேரத்தில் 'மிக்ஸி'யை 'on' செய்து வைத்திருக்கிறது. அதன் விளைவு தான் இது. இப்பொழுதெல்லாம் 'ப்ளக்'கைச் செருகுமுன் 'on'இல் இருக்கிறதா, 'off'இல் இருக்கிறதா என்று என்னை அறியாமலே என் கண்கள் கவனிக்கின்றன.

சிறு குழந்தைகள் இம்மாதிரி விஷமம் செய்யும்போது அடிக் கவோ திட்டவோ கூடாது. மாறாக நல்ல வார்த்தையில் அவர்கள் புரிந்து கொள்ளும்படி சொல்ல வேண்டும். குழந்தைகளிடம் பேசும் போதுகூட எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

# ஒலிப்பேழை

அறந்தாங்கி சங்கர்

## டூயட்

**ஏ.ஆர்.** ரகுமானின் இன்னிசையில் கவிஞர் வைரமுத்து எழுதிய செவிக்கினிய ஒன்பது பாடல்கள் இந்தத் தொகுப்பில் இடம் பெற்றுள்ளன. அஞ்சலி... அஞ்சலி, மெட்டுப் போடு, கவிதைக்குப் பொருள் தந்த, சித்தத்தினால், கத்திரிக்கா, வெண்ணிலாவின் தேரில் ஏறி, நான் பாடும் சந்தம், என் காதலே ஆகிய பாடல்களை எஸ்.பி. பாலசுப்பிரமணியம், சித்ரா, பி.சுசிலா, பிரபு, ஸ்ரீஜா, சுஜாதா, ஆர். பிரசன்னா, கே.ஜே. யேசுதாஸ், (கத்ரி கோபால்நாத்) டி.கே. கலா ஆகியோர் பாடியுள்ளனர். இவை தவிர லவ் ஈஸ் டார்ச்சர், சக்ஸ் லல்லபி ஆகிய ஆங்கிலப் பாடல்களும் இடம் பெற்றுள்ள 'டூயட்' இனிமையான ஓர் இசைத்தொகுப்பு.

## அதர்மம்

இசைஞானி இளையராஜாவின் இன்னிசையில் கவிஞர் வாலி எழுதிய 5 பாடல்களும் இளையராஜா எழுதிய ஒரு பாடலும் இத்தொகுப்பில் இடம் பெற்றுள்ளன. தென்றல் காற்றே, வம்புக்காரப் பாட்டி, முத்துமணி, ஒரு பக்கம், தகதோம், நூறுவயது ஆகிய பாடல்களை மனோ, எஸ்.பி. பாலசுப்பிரமணியம், சண்முகசுந்தரி, சித்ரா, இளையராஜா, எஸ். ஜானகி ஆகியோர் தங்கள் தேன் போன்ற குரலில் அருமையாகப் பாடியுள்ளனர்.

## வீரா

கவிஞர் வாலி, பஞ்சு அருணாசலம், இளையராஜா ஆகியோரின் பாடல்களுக்கு இசைஞானி இளையராஜா இசையமைத்துள்ளார். முந்தி முந்தி, மலைக்கோயில் வாசலில், பட்டுப்பூ, திருமகள் வந்தாள், வாடி வெத்தல பாக்கு, அடி பந்தலிலே, கொஞ்சிக் கொஞ்சி, ஆத்துல அன்னக்கிளி, மாடத்திலே கன்னி மாடத்திலே ஆகிய ஒன்பது பாடல்களையும் மனோ, சுவர்ணலதா, சித்ரா, அருண்மொழி, எஸ்.பி.பி. ஆகியோர் மிகவும் அருமையாகப் பாடியுள்ளார்கள். மீண்டும் மீண்டும் கேட்கத் தூண்டும் பாடல்கள் கொண்ட தொகுப்பு இது.

## செவத்தப்பொண்ணு

கலர் கலர் (ஸ்வர்ணலதா, மனோ), வடக்கு காத்து (எஸ். ஜானகி, மனோ), தொடலாமா கூடாதா (ஜானகி, கிருஷ்ணராஜ்), சித்திரையில் திருமணம் (எஸ்.பி.பி, உமா ரமணன்), வட்டப் பொட்டு வச்ச (மனோ, சுவர்ணலதா) ஆகிய இனிமையான பாடல்கள் இந்த இசை நாடாவில் இடம் பெற்றுள்ளன. தேனிசைத் தென்றல் தேவாவின் இசையில் கவிஞர் வாலி பாடல்களை எழுதியுள்ளார்.

## சீர்காழி கோவிந்தராஜன் பக்திப்பாடல்கள்

சுவிட்சர்லாந்து நாட்டில் பத்மஸ்ரீ (அமரர்) டாக்டர் சீர்காழி கோவிந்தராஜன் பாடிய அருமையான சில பக்திப் பாடல்களின் தொகுப்பு இது. கல்யாணி, கன்னியாகுமரி, அன்னை உன் அடியினை, தனி ஆவர்த்தனம், குலபிருதுனு, காட்டைக் கடந்து, ஒரானைக் கன்றை, வெற்றி எல்லாம் தரும், தலையே நீ வணங்கு, எங்கேனும், ஆடிக் கொண்டார், தில்லானா, என் குருநாதன், ஆறிரு தடந்தோள் ஆகிய இனிய பாடல்களை சீர்காழியின் மணிக்குரலில் நாம் கேட்டு மகிழலாம்.

(மேற்காணும் 5 கேசட்களும் வெளியீடு – பிரமிடு ஆடியோ, 73, நுங்கம்பாக்கம் ஹை ரோடு, சென்னை – 34. கேசட் ஒன்றின் விலை ரூபாய் 30.00)



# உங்கள் ராசி பலன்

வித்வான் வே. லட்சுமணன்

**15-5-1994 முதல்**
**14-6-1994 வரை**

| | | | |
|---|---|---|---|
| செவ் | | சூரி புத, சுக், கேது | |
| சனி | கிரக நிலை | | |
| | | | |
| | ராகு | குரு-வ | |

### கிரக மாறுதல்

15-5-1994 முதல் மேஷ-செவ்வாய். 15-5-1994 முதல் மிதுன-சுக்கிரன். 19-5-1994 முதல் துலா-ராகு. 19-5-1994 முதல் மேஷ-கேது. 23-5-1994 முதல் மிதுன-புதன். 10-6-1994 முதல் கடக-சுக்கிரன். 12-6-1994 முதல் புதன்-வக்கிர ஆரம்பம்

### கிரக பாத சாரம்: 15-5-1994 காலை 6.00 மணிப்படி:

சூரியன் - கிருத்திகை 2. சந்திரன் - திருவாதிரை 4. செவ்வாய் - ரேவதி 4. புதன் - ரோகிணி 2. குரு - சுவாதி 3 (வக்). சுக்கிரன் - மிருகசீரிஷம் 2. சனி - சதயம் 4. ராகு - விசாகம் 4. கேது - கிருத்திகை 2.

## மேஷம் : (அசுவினி, பரணி, கிருத்திகை 1 ஆம் பாதம் முடிய)

16ஆம் தேதி முதல் செவ்வாய் பலம் கூடுவதால் உங்கள் தேக ஆரோக்கியம், கௌரவம், அந்தஸ்து, புகழ், வாழ்க்கை வசதிகள் யாவும் திருப்திகரமாக இருந்துவரும். முக்கியமான எண்ணங்கள் ஒன்றிரண்டு ஈடேறவும் வழிபிறக்கும். மற்றையோர் உங்களைப் போற்றுவார்கள். பொருள்வரவு திருப்தி தரும். எதிர்பாராத திடீர் அதிர்ஷ்ட வாய்ப்புகளையும் பெறுவீர்கள். வாக்குவன்மை, செயல்திறமை, அறிவாற்றல் யாவும் பளிச்சென்று பிரகாசிக்கும். எதிரிகள் ஓடி ஒளிவார்கள். திருமணம் ஆகாதவர்களுக்குத் திருமணம் ஆகும். ஏற்கெனவே திருமணம் ஆனவர்கள் இல்லறத்தில் இன்பம் காண்பார்கள். குடும்பத்தில் குழப்பங்கள் அகன்று, தெளிவான சூழ்நிலை நிலவி வரும். நண்பர்கள், உற்றார், உறவினர் சேர்க்கை மனத்திற்கு மகிழ்ச்சியூட்டும். மக்களால் ஓரிரு எண்ணங்கள் ஈடேறப் பெறுவீர்கள்.

சினிமா, நாடகம், நாட்டியம், சங்கீதம் போன்ற கலைத்துறைகளைச் சேர்ந்தவர்கள் வெற்றி நடைபோடுவார்கள். கடிதப்போக்குவரத்து நற்செய்தி கொண்டுவரும். உடன்பிறந்தவர்களுக்கும், உங்களுக்குமிடையே கருத்து ஒற்றுமை கூடும். 19ஆம் தேதி முதல் உங்கள் ஜன்ம ராசிக்கு கேது வருவதாலும், 7ஆமிடத்திற்கு ராகு இடம் மாறுவதாலும் அலைச்சலும், மனக்கிலேசமும், பிறமொழி, மதக்காரர்களால் ஓரிரு இடையூறுகளும் உண்டாகும். எக்காரியத்திலும் நிலையான ஒரு முடிவுக்கு வரமுடியாமல் குழம்புவீர்கள். உங்களைவிட வயதிலும், அனுபவத்திலும் சற்றே மூத்தவர்களை அணுகி, அவர்களின் ஆலோசனைகளைப் பெற்று, அதன்பிறகு காரியங்களில் ஈடுபடலாம். வீண் அலைச்சலைத் தவிர்ப்பது நல்லது. 23ஆம் தேதி முதல் வியாபாரிகளுக்கும், எழுத்தாளர்களுக்கும், சிறுசிறு சோதனைகள் ஏற்படும். என்றாலும் அவை விலகவும் சந்தர்ப்பம் கூடிவரும். மே 16,17,20,22,23, 27,28,29,31 ஜூன் 3,5,7,8,12,13 தேதிகள் அனுகூலமானவை. வடகிழக்கு, மேற்குத் திசைகள் நலம் தரும். ரிஷப, துலா, கும்ப ராசிக்காரர்கள் உதவுவார்கள். 3,5,6,8 எண்கள் அதிர்ஷ்டமானவை. பரணி நட்சத்திரக்காரர்களுக்குச் சிறுசிறு பிரச்னைகள் சூழும். இறைவழிபாட்டின் மூலம் அவற்றைக் குறைத்துக் கொள்ளலாம்.

## ரிஷபம் : (கிருத்திகை 2ஆம் பாதம் முதல், ரோகிணி, மிருகசீரிஷம் 2 ஆம் பாதம் முடிய)

குரு, செவ்வாய் ஆகிய முக்கியமான கிரகங்கள் அனுகூலமான நிலையில் சஞ்சரிக்காததால் மனத்தில் தெளிவான நிலை இராது. போட்டி பொறாமைக்காரர்களால் தொல்லைகளுக்கு ஆட்பட வேண்டிவரும். வழக்கு, வியாஜ்ஜியங்களில் அனுகூலமான போக்கைக் காண்பது அரிதாகும். உடல் ஆரோக்கியம் சீராக இராது. பொருள் வரவைவிட செலவுகள் கூடும். மேலும், கைப் பொருள் காணாமல் போகவும் நேருமாதலால் பத்திரமாகப் பாதுகாத்துக் கொள்வது நல்லது. வீண் அலைச்சலைத் தவிர்ப்பது அவசியம். புதிய முயற்சிகளில் ஈடுபட வேண்டாம். மாமூலான காரியங்களில் அக்கறையுடன் ஈடுபடுவது நல்லது. வீண்சண்டை, சச்சரவுகளில் பிரவேசிக்கலாகாது. நில புலங்களால் அனுகூலத்திற்கு இடமிராது. 10இல் சனி உலவுவதால் நீங்கள் எவ்வளவுக்கெவ்வளவு பாடுபடு

வீர்களோ அவ்வளவுக்கவ்வளவு பயன் கிட்டும். திடீர் அதிர்ஷ்ட வாய்ப்புகளை எண்ணிக் கைப் பொருளை வீணாக்க வேண்டாம்.

ராசிநாதன் சுக்கிரன் அனுகூலமாக உலவுவதால் மாதர்கள், சமுதாய நலப்பணியாளர்கள், கலைத்துறைகளைச் சேர்ந்தவர்கள் ஆகியோருக்கெல்லாம் வெற்றி வாய்ப்புகள் கூடும். கணவன், மனைவியிடையே சலசலப்புகள் குறையும். குடும்பத்தில் நற்காரியங்கள் நிகழும். விருந்து உபசாரங்களில் பங்கேற்கவும், உற்றார், உறவினர்களைச் சந்தித்து மனமகிழ்ச்சி கொள்ளவும் சந்தர்ப்பங்கள் கூடிவரும். 19ஆம் தேதி முதல் ராகு பலம் பெறுவதால் அலைச்சல் குறையும். நூதன நண்பர்களால் அனுகூலம் பெற வாய்ப்பு கனிந்து வரும். நவீன விஞ்ஞானத்துறைகள் ஆக்கம் தரும். 23ஆம் தேதி முதல் வியாபாரிகள் வெளிச்சம் காண்பார்கள். மக்களால் ஓரிரு நன்மைகளும் பொருளாதார நிலையில் வளர்ச்சியும், பேச்சுத்திறமையும் 'உண்டாகும். முக்கியமான ஓரிரு எண்ணங்கள் ஈடேறவும் வழி பிறக்கும். உங்கள் ஜனன கால ஜாதகப்படி தற்சமயம் யோக பலம் உள்ள தசை, புக்தி, அந்தரங்கள் நடக்குமானால் சங்கடங்கள் குறையவும், ஓரிரு நற்பலன்கள் உண்டாகவும் வாய்ப்பு கூடி வரும். இறைவழிபாட்டில் தொடர்ந்து ஈடுபடுவது நல்லது. மே 16,17,20,22,23,25,29,31 ஜூன் 3,5,7,8,12,13 தேதிகள் சுமாரானவை. வடக்கு, தென் கிழக்குத் திசைகள் ராசியானவை. மிதுன, விருச்சிக, கும்ப ராசிக்காரர்கள் உதவுவார்கள். 5,6,8 எண்கள் அதிர்ஷ்டமானவை. ரோகிணி நட்சத்திரக்காரர்களுக்குச் சாதாரணமான நேரமிது.

## மிதுனம் : (மிருகசீரிஷம் 3ஆம் பாதம் முதல், திருவாதிரை, புனர்பூசம் 3 ஆம் பாதம் முடிய)

குரு, செவ்வாய் ஆகியோரது அனுகூலமான சஞ்சாரம் காரணமாக உங்கள் அறிவாற்றலும், செயல்திறமையும் பிரகாசிக்கும், மனத்தில் நல்ல எண்ணங்கள் உருவாகும். தெய்வப்பணிகளிலும், தருமப்பணிகளிலும் ஈடுபாடு கூடும். பெரியவர்களின் ஆசிகளையும், ஆதரவையும் பெறுவீர்கள். அயல்நாட்டுத் தொடர்பால் அனுகூலம் உண்டாகும். செந்நிறப் பொருட்கள் லாபம் தரும். மருத்துவம், இரசாயனம், விஞ்ஞானம், ஆன்மிகம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் முன்னணிக்கு உயருவார்கள். மக்களாலும், உடன் பிறந்தவர்களாலும் அனுகூலம் பெறுவீர்கள். ஸ்பெகுலேஷன், கொடுக்கல்-வாங்கல் இனங்கள் லாபம் தரும். பொறியியல், சட்டம், காவல், இராணுவம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் சாதனை படைப்பார்கள். திருமணப் பருவத்தில் உள்ளவர்களுக்குத் திருமணம் ஆகும். ஏற்கெனவே திருமணம் ஆனவர்கள் மகப்பேறு பாக்கியம் பெறுவார்கள்.

கலைத்துறை ஊக்கம் தரும். மாதர்களது எண்ணம் நிறைவேறும். சமுதாய நலப்பணியாளர்கள் நற்பெயருக்கும் பாத்திரமாவார்கள். நிறுவன, நிர்வாகத்துறைகளைச் சேர்ந்தவர்கள், வியாபாரிகள், கணிதத் துறையாளர்கள், அரசியல்வாதிகள ஆகியோர் விழிப்புடன் இருப்பது நல்லது. அரசாங்கத்தாரால் ஓரிரு செலவுகளைச் சந்திக்க நேரலாம். தந்தை நலனில் கவனம் தேவைப்படும். 19ஆம் தேதி முதல் ராகு 5ஆமிடத்திற்கும், கேது 11ஆமிடத்திற்கும் இடம் மாறுவதால் மனத்தில் சிறுசிறு குழப்பங்கள் சூழும். மக்கள் நலனில் அக்கறை செலுத்த வேண்டிவரும். 23ஆம் தேதி முதல் வியாபாரிகளுக்கு வெளிச்சமான பாதை தெரியவரும். மாணவர்கள், எழுத்தாளர்கள், பத்திரிகையாளர்கள், கணிதத்துறையாளர்கள் ஆகியோர் தங்கள் நிலை உயரப் பெறுவார்கள் . ரியல் எஸ்டேட் இனங்கள் லாபம் தரும். திருவாதிரை நட்சத்திரக்காரர்கள் விழிப்புடன் இருப்பது நல்லது. மே 16,17,20,22,23,25,27,31 ஜூன் 3,5,7,8,12,13 தேதிகள் சிறப்பானவை. தென்கிழக்கு, தெற்குத்திசைகள் அனுகூலமானவை. துலா, விருச்சிக ராசிக்காரர்கள் உதவுவார்கள். 3,6,7,9 எண்கள் அதிர்ஷ்டமானவை.

## கடகம் : (புனர்பூசம் 4ஆம் பாதம் முதல், பூசம், ஆயில்யம் முடிய)

குரு, சனி ஆகிய முக்கியமான கிரகங்கள் அனுகூலமான நிலையில் சஞ்சரிக்காததால் அலைச்சல் அதிகரிக்கும். எண்ணங்கள் ஈடேறத் தடைகள் ஏற்படும். கடுமையாக உழைக்கவேண்டிய அவசியம் உண்டு. மனத்தில் சிறுசிறு கவலைகள் குடிகொள்ளும். நூதனமான தொழில் துறைகளில் ஈடுபட இந்த நேரம் சிறப்புடையதாகாது. பொருளாதார நிலையில் அபிவிருத்தி காண அரும்பாடுபடவேண்டி வரும். குடும்பத்தில் சிறுசிறு பிரச்னைகள் உருவாகும். மக்களால் மனச்சலனம் உண்டாகும். ஸ்பெகுலேஷன், கொடுக்கல்-வாங்கல் இனங்களில் ஈடுபடவேண்டாம். நண்பர்கள், உற்றார், உறவினர்களால் அதிகம் அனுகூலமிராது. வாழ்க்கை வசதிகளுக்காகப் பொருட்செலவு ஏற்படும். பொறியியல், சட்டம், காவல், இராணுவம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் தங்கள் திறமைக்குரிய வளர்ச்சியைக் காண்பார்கள்.

11ஆமிடத்தில் உள்ள கிரகங்கள் சங்கடங்களைச் சமாளிக்கும் ஆற்றலை உங்களுக்கு வழங்குவார்கள். வழக்கமான காரியங்கள் சீராகவே நடந்து வரும். அரசியல்வாதிகள், அரசுப்பணியாளர்கள் ஆகியோர் தங்கள் எண்ணம் ஈடேறப் பெறுவார்கள். எழுத்தாளர்களுக்கும், பத்திரிகையாளர்களுக்கும் இருந்து வரும் வளர்ச்சி பாதிக்கப்படாது. வியாபாரிகள் அளவோடு முன்னேறுவார்கள். எலக்ட்ரானிக், கம்ப்யூட்டர் துறைகள் ஆக்கம் தரும். குடும்பத்தில் நற்காரியம் நிகழுவதற்குச் சூரிய பலம் கைகொடுக்கும். 19ஆம் தேதி முதல் ராகு 4ஆமிடத்திற்கும், கேது 10 ஆமிடத்திற்கும் இடம் மாறுவதால் விசேடமான நன்மைகளைப் பெறத் தடையிருந்துவரும். தெய்வ வழிபாடும், கிரக வழிபாடும் அவசியம் தேவை. அதன் மூலம் சங்கடங்கள் விலகவும், நற்பலன்கள் உண்டாகவும் வழிபிறக்கும். ஆயில்ய நட்சத்திரக் காரர்களுக்குச் சோதனையான நேரமிது. மே 16,17,20,22,23,25,27,28,29 ஜூன் 3,5,7,8,12,13 தேதிகள்

சுமாரானவை. கிழக்கும், தெற்கும் அனுகூலமான திசைகளாகும். மேஷ, ரிஷப ராசிக்காரர்கள் உதவு வார்கள். 1,5,7,9 எண்கள் அதிர்ஷ்டமானவை.

## சிம்மம் : (மகம், பூரம், உத்திரம் 1 ஆம் பாதம் முடிய)

10இல் உள்ள கிரகங்கள் உங்கள் பராக்கிர மத்தை வெளிப்படுத்துவார்கள். சங்கடங்கள் என்பவை ஓரிரு கோணங்களில் ஏற்படுமென்றாலும் அவற்றைச் சமாளிப்பீர்கள். வழக்கமான பணிகள் சீராகவே நடந்துவரும். அரசு விவகாரங்கள் ஆக்கம் தரும். தந்தையால் அனுகூலம் பெறுவீர்கள். கணிதம், விஞ்ஞானம், வியாபாரம், எழுத்து போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் முன்னணிக்கு உயரு வார்கள். நிர்வாகத்திறமை கூடும். கலைத்துறை களைச் சேர்ந்தவர்கள் வெற்றிப்படிகளில் முன் னேறுவார்கள். உடன்பிறந்தவர்களால் உங்க ளுக்கும், உங்களால் அவர்களுக்கும் அனுகூலங்கள் உண்டாகும். மாதர்களது குறிக்கோள் நிறைவேறும். வேலையில்லாதவர்களுக்கு வேலை வாய்ப்புகள் கிடைக்கும். மருத்துவர்கள், இரசாயனத்துறை களைச் சேர்ந்தவர்கள் ஆகியோருக்கெல்லாம் செழிப் பான பாதை புலப்படும். பொருளாதார நிலை சீராகவே இருந்துவரும்.

4இல் ராகுவும், 7இல் சனியும் உலவுவதால் அலைச்சல் கூடும். எக்காரியத்தையும் சுலபமாக நிறைவேற்றிவிட இயலாது. கடுமையாகப் பாடுபட வேண்டிய அவசியம் உண்டு. குருபலம் குறைந் திருப்பதால் மக்கள் நலனில் கவனம் தேவைப்படும். திடீர் அதிர்ஷ்ட வாய்ப்புகளுக்குச் சந்தர்ப்பம் குறைவு. ஸ்பெகுலேஷன், கொடுக்கல்-வாங்கல் இனங்களில் ஈடுபடலாகாது. நூதனமான தொழில் துறைகளில் பிரவேசிக்க இந்த நேரம் சிறப்புடைய தாகாது. 19ஆம் தேதி முதல் ராகு பலம் பெறுவ தால் சங்கடங்கள் என்பவை குறைவடையும். பிற மொழி, மதக்காரர்களது தொடர்பால் நலம் உண் டாகும். பயணத்தால் பயன் பெற முடியும். ஏற்று மதி, இறக்குமதி இனங்கள், தோல் பொருள்கள், போக்குவரத்துச் சாதனங்கள் ஆகியவற்றால் அனுகூலம் உண்டாகும். 23ஆம் தேதி முதல் குடும் பத்தில் குதூகலம் கூடும். எதிர்பாராத திடீர் அதிர்ஷ்ட வாய்ப்புகள் உண்டாகும். மனத்தில் மகிழ்ச்சி கூடும். பூர நட்சத்திரக்காரர்களுக்குச் சோதனையான நேரமிது. மே 15,16,17,20,22,23,25, 27,28,29, ஜூன் 5,7,8,12,13 தேதிகள் சிறப்பானவை. கிழக்கு, வடக்கு திசைகள் நலம் தரும். ரிஷப, மிதுன ராசிக்காரர்கள் உதவுவார்கள். 1,5,6 எண்கள் அதிர்ஷ்டமானவை.

## கன்னி : (உத்திரம் 2ஆம் பாதம் முதல், ஹஸ்தம், சித்திரை 2 ஆம் பாதம் முடிய)

குரு, சனி ஆகிய முக்கியமான கிரகங்கள் அனுகூலமான நிலையில் சஞ்சரிப்பதால் உங்கள் செல்வாக்கும், மதிப்பும் உயரும். குடும்பத்தில் நற்காரியங்கள் நிகழும். பொருள்வரவு கூடும். நல்லவர்களின் நேசத்தால் நலம் பெறுவீர்கள். எடுத்த காரியங்கள் இனிது நிறைவேறும். தடை களும், எதிர்ப்புகளும் அகலும். உற்றார், உறவி னர்கள், நண்பர்கள் ஆகியோரது தொடர்பு ஆக்கம் தரும். கணவன், மனைவி உறவுநிலை சீராகவே இருந்துவரும். நிலம், மனை, வீடு, வாகனங்களால் அளவோடு நலம் உண்டாகும். ஸ்பெகுலேஷன், கொடுக்கல்-வாங்கல் இனங்கள் லாபம் தரும். அலு வலகங்களில் பணிபுரிபவர்கள், தொழிலாளர்கள், தொழிலதிபர்கள், ஆன்மிகவாதிகள், அரசியல் வாதிகள் ஆகியோருக்கெல்லாம் உற்சாகமான சூழ்நிலை உதயமாகும். வரவேண்டிய பணம் வந்துசேரும். எண்ணெய் வகையறாக்கள், தோல் பொருள்கள், ஏற்றுமதி, இறக்குமதி இனங்கள் ஆகிய வற்றால் வருவாய் கிடைத்துவரும்.

மக்களால் ஓரிரு எண்ணங்கள் ஈடேறும். தந்தை யால் சிறுசிறு பிரச்னைகள் உருவாகும். தொலை தூரப் பயணத்தால் அனுகூலமிராது. பொறியியல், சட்டம், காவல், இராணுவம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் விழிப்புடன் காரியமாற்றுவது நல்லது. 19ஆம் தேதி முதல் ராகு 2ஆமிடத்திற்கும், கேது 8ஆமிடத்திற்கும் இடம் மாறுவதால் சிறுசிறு இடையூறுகள் அவ்வப்போது ஏற்படும். பேச்சிலும், உணவு விஷயத்திலும் கட்டுப்பாடு தேவை. எக் காரியத்திலும் பதற்றத்திற்கு இடம் தரலாகாது. பொறுமை அவசியம் தேவை. 23ஆம் தேதி முதல் ராசிநாதன் புதன் வலுப்பெறுவதால் செய்தொழில், வியாபாரம், வர்த்தகம் போன்ற இனங்களில் வளர்ச்சி காணலாம். புதிய துறைகளில் ஈடுபடவும் சந்தர்ப்பம் கூடி வரும். கணிதம், விஞ்ஞானம், எழுத்து போன்ற இனங்கள் லாபம் தரும். பதவி உயர்வு, ஊதிய உயர்வு, இடமாற்றம் ஆகியவற்றை எதிர்பார்த்திருந்தவர்களுக்கு அதற்கான சந்தர்ப் பம் கூடிவரும். ஜூன் 10ஆம் தேதி முதல் கலை ஞர்கள் வெளிச்சம் காண்பார்கள். எதிர்பாராத திடீர் அதிர்ஷ்ட வாய்ப்புகள் உண்டாகும். மாதர்களது எண்ணம் நிறைவேறும். ஹஸ்த நட்சத்திரக்காரர் களுக்குச் சிறுசிறு சங்கடங்கள் ஏற்படும். மே 15,16, 17,20,22,23,25,27,28,29,31 ஜூன் 3,8,12,13 தேதிகள் சிறப்பானவை. வடகிழக்கு வடக்கு, மேற்கு திசைகள் அனுகூலமானவை. துலா, ரிஷப, மிதுன ராசிக் காரர்கள் உதவுவார்கள். 3,5,6,8 எண்கள் அதிர்ஷ்டமானவை.

## துலாம் : ( சித்திரை 3 ஆம் பாதம் முதல், சுவாதி, விசாகம் 3 ஆம் பாதம் முடிய)

விசேடமான நன்மைகளை நீங்கள் இந்த நேரத் தில் பெறமுடியாவண்ணம் கிரகநிலை அமைந் துள்ளது. அலைச்சலும், உழைப்பும் அதிகரிக்கும். மனதில் நிம்மதி குறையும். குடும்பத்தில் அமைதி இராது. பிறர் மனம் புண்படும்படியான வார்த்தை களை உதிர்க்காமல் இருப்பது அவசியமாகும். உணவுப் பழக்கத்தில் கட்டுப்பாடு தேவை. மக்களால் சிறுசிறு பிரச்னைகள் சூழும். கணவன், மனைவியிடையே வீண் வாக்குவாதங்கள் உண் டாகும். விட்டுக் கொடுத்துப் பழகிவருவது நல்லது. கூட்டுத் தொழில் செய்பவர்கள் பங்கு தாரர்களிடம் எச்சரிக்கையுடன் பழகுவது அவசிய

மாகும். உடல் ஆரோக்கியம் கவனிக்கப்படவேண்டி வரும். உஷ்ணாதிக்கம் கூடும். பயணத்தை ஒத்திப் போடுவது நல்லது. எக்காரியத்திலும் பதற்றம் சிறிதும் கூடாது. அரசியல்வாதிகள், அரசுப்பணி யாளர்கள் ஆகியோர் தங்கள் பொறுப்புகளைச் சரிவர ஆற்றிவருவது நல்லது. அலுவலகப் பணியாளர்களுக்கு விரும்பத்தகாத இடமாற்றமோ நிலைமாற்றமோ ஏற்படும்.

19 ஆம் தேதி முதல் ராகு உங்கள் ஜன்ம ராசிக்கும், கேது 7 ஆமிடத்திற்கும் இடம் மாறினாலும் கூட, அவர்களால் அனுகூலமான பலன்களைப் பெற இயலாது. நூதன முயற்சிகளில் பிரவேசிக்க வேண்டாம். வழக்கமான காரியங்களில்கூட அதிக அக்கறை தேவைப்படும். வீண் அலைச்சலைத் தவிர்ப்பது நல்லது. ராசிநாதன் சுக்கிரன் அனுகூல மான நிலையில் சஞ்சரிப்பதாலும், புதபலம் கூடியிருப்பதாலும் மோசமான விளைவுகள் அதிகம் நேராவண்ணம் காக்கப்படுவீர்கள். தெய்வப் பணி களிலும், தருமப்பணிகளிலும் ஈடுபாடு உள்ளவர் களுக்கு மனஅமைதி கிட்டும். கலைத்துறை ஆக்கம் தரும். மாதர்கள், சமுதாயநலப் பணியாளர்கள் ஆகி யோர் ஓரளவு வளர்ச்சி காண்பார்கள். வியா பாரிகள், கணிதத்துறையாளர்கள், எழுத்தாளர்கள், பத்திரிகையாளர்கள், மாணவர்கள் ஆகியோர் அளவோடு முன்னேறுவார்கள். உங்கள் ஜனனகால ஜாதகப்படி தற்சமயம் யோக பலம் உள்ள தசை, புக்தி, அந்தரங்கள் நடைபெறுமானால் சங்கடங்கள் என்பவை குறைய வழி பிறக்கும். சுவாதி நட்சத்திரக்காரர்களுக்குச் சோதனையான நேரமிது. மே, 16,17,20,22,23,25,27,28,29,31 ஜூன் 3,5,12,13 தேதிகள் சுமாரானவை. தென்கிழக்குத்திசை நலம் தரும். மிதுன ராசிக்காரர்கள் உதவுவார்கள். 5,6 எண்கள் அதிர்ஷ்டமானவை.

## விருச்சிகம் :(விசாகம் 4 ஆம் பாதம் முதல், அனுஷம், கேட்டை முடிய)

ராசிநாதன் செவ்வாய் அனுகூலமான நிலையில் சஞ்சரிப்பதால் உங்கள் ஆற்றல் வெளிப்படும். துணிவோடும், தன்னம்பிக்கையோடும் செயற்கரிய பணிகளில் ஈடுபட்டு, அவற்றில் வெற்றியும் பெறுவீர்கள். பொறியியல்துறை லாபம் தரும். சட்டம், காவல், இராணுவம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் சுபிட்சம் காண்பார்கள். நிலபுலங் களால் அனுகூலம் உண்டாகும். நிறுவன, நிர்வாகத் துறைகளைச் சேர்ந்தவர்களுக்குச் செழிப்பான பாதை புலப்படும். உடல்நலம் சீராகவே இருந்து வரும். சினிமா, சங்கீதம் போன்ற கலைத்துறை களைச் சேர்ந்தவர்கள் வெற்றிநடை போடுவார்கள். குடும்பத்தில் குதூகலம் கூடும். நற்காரியங்களில் பங்கு கொள்ளச் சந்தர்ப்பம் கனிந்து வரும். பேச்சில் இனிமை கூடும். பொருளாதார நிலை சீராக இருந்துவரும். சுபகாரியங்களுக்காக ஓரிரு செலவுகளை மேற்கொள்ள வேண்டி வரலாம்.

4 இல் சனி உலவுவதால் அலைச்சலும், உழைப்பும் கூடும். உற்றார், உறவினர்கள், நண்பர் களால் அதிகம் நன்மையை எதிர்பார்க்க இயலாது. விரயத்தில் குரு இருப்பதால் மக்களால் ஓரிரு சலனங்கள் உண்டாகும். ஸ்பெகுலேஷன், கொடுக்கல் - வாங்கல் இனங்களில் விசேடமான லாபத்தைப் பெற இயலாமல் போகும். உத்தியோகஸ்தர்கள், தொழிலாளர்கள், விவசாயிகள், ஆன்மிகவாதிகள், மருத்துவர்கள், இரசாயனத்துறைகளைச் சேர்ந்த வர்கள் ஆகியோருக்கெல்லாம் முன்னேற்றம் தடைப்படும். 19 ஆம் தேதி முதல் ஜன்ம ராகு விரயத்திற்கும், 7 இல் உலவிக்கொண்டிருந்த கேது 6 ஆமிடத்திற்கும் மாறுவதால் மனக்குழப் பங்கள் குறைவடையும். அலைச்சலும் அதிகமிராது. கணவன், மனைவியிடையே இருந்துவந்த சல சலப்புகள் குறையும். கூட்டுத் தொழில் வளர்ச்சி பெறும். சங்கடங்கள் என்பவை படிப்படியாகக் குறைய ஆரம்பிக்கும். 23 ஆம் தேதி முதல் கணிதம், விஞ்ஞானம், வியாபாரம், எழுத்து போன்ற துறைகளைச் சேர்ந்தவர்களுக்கு வெளிச்சமான பாதை தெரியவரும். குரு, சனி ஆகிய கிரகங் களுக்குப் பிரீதி, பரிகாரங்கள் செய்துவருவது நல்லது. கேட்டை நட்சத்திரக்காரர்களுக்குச் சோதனையான நேரமிது. மே 16,17,20,22,23,25, 27,28,29,31 ஜூன் 3,5,7,8,12,13 தேதிகள் சிறப் பானவை. தெற்கும், தென்கிழக்கும் அனுகூலமான திசைகளாகும். மேஷ, மிதுன ராசிக்காரர்கள் உதவுவார்கள். 6,7,9 எண்கள் அதிர்ஷ்டமானவை.

## தனுசு :(மூலம், பூராடம், உத்திராடம் 1 ஆம் பாதம் முடிய)

ராசிநாதன் குருவும், 3 இல் உள்ள சனியும் அனுகூலமான நிலையில் உலவுவதால் உங்கள் எண்ணங்கள் எளிதில் நிறைவேறும். உற்றார், உற வினர்களால் அனுகூலம் பெறுவீர்கள். மாணவர் களுக்கு வெற்றி வாய்ப்புகள் கூடும். நிலம், மனை, வீடு, வாகனங்கள் போன்ற ஸ்திரச் சொத்துகளின் சேர்க்கையோ அல்லது அவற்றால் ஆதாயமோ பெறுவீர்கள். அந்தஸ்தும், மதிப்பும் உயரும். பெரியவர்களும், தனவந்தர்களும் உங்கள் வளர்ச்சிக்கு உற்ற துணையாக விளங்குவார்கள். செல்வச் சேர்க்கை அதிகரிக்கும். ஸ்பெகுலேஷன், கொடுக்கல் - வாங்கல் இனங்கள் லாபம் தரும். அரசியல்வாதிகளும், அரசுப்பணியாளர்களும், சமு தாயநலப் பணியாளர்களும் தங்கள் எண்ணம் ஈடேறப் பெறுவார்கள். வியாபாரிகளுக்கு ஆதாயம் கூடும். உத்தியோகஸ்தர்களும், தொழிலாளர்களும், தொழில் அதிபர்களும் தங்கள் எண்ணம் நிறைவேறப் பெறுவார்கள்.

எதிர்ப்புகள் என்பவை அகலும். திருமணம் ஆகாதவர்களுக்கு அதற்கான சூழ்நிலை கனிந்து வரும். ஏற்கெனவே திருமணம் ஆனவர்கள் மகப் பேறு அல்லது மக்களால் பாக்கியம் பெறுவார்கள். கலைத்துறை ஊக்கம் அளிக்கும். எழுத்தாளர்களுக் கும், பத்திரிகையாளர்களுக்கும் புகழும் பொருளும் வந்து சேரும். மனதில் மகிழ்ச்சி கூடும். கணவன், மனைவியிடையே கருத்து ஒற்றுமை அதிகரிக்கும். 19 ஆம் தேதி முதல் ராகு அனுகூலமான நிலையில் சஞ்சரிப்பதால் வெளிநாட்டார் தொடர்பு ஆக்கம் தரும். திடீர் அதிர்ஷ்ட வாய்ப்புகள் உண்டாகும். வெளிநாட்டுப் பயணத்திட்டம் ஈடேற வழிபிறக்கும்.

அதே நேரத்தில் 5 ஆமிடத்தில் கேது இடம் மாறுவதால் புத்திர, புத்திரிகளுடைய நலனில் அக்கறை செலுத்தவேண்டிவரும். சிறுசிறு குழப்பங்கள் மனதில் குடிகொள்ளும். விநாயகரை வழிபடுவதன் மூலம் இடையூறுகள் அகலும். பூராட நட்சத்திரக்காரர்கள் சிறுசிறு சங்கடங்களைச் சந்திக்க நேரும். மே 20,22,23,25,27,28,29,31 ஜூன் 3,5,7,8,11 தேதிகள் அனுகூலமானவை. வடகிழக்கு, கிழக்குத் திசைகள் நலம் தரும். கும்ப, மேஷ, துலா ராசிக்காரர்கள் உதவுவார்கள். 1,3,5,8 எண்கள் அதிர்ஷ்டமானவை.

## மகரம் :(உத்திராடம் 2 ஆம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2 ஆம் பாதம் முடிய)

குரு, சனி, செவ்வாய் ஆகியோரது சஞ்சாரம் கோசாரப்படி அனுகூலமான நிலையில் இல்லாததால் சிறுசிறு பிரச்னைகள் சூழும். எக்காரியத்திலும் முழுமையான வெற்றி காண இயலாது. குடும்பத்தாரிடம் பக்குவமாகப் பேசிப் பழகுவது நல்லது. அதன்மூலம் குடும்பத்தில் அமைதி காணமுடியும். உற்றார், உறவினர்கள் நண்பர்களிடம் விசேடமான நன்மைகளை எதிர்பார்க்க இயலாது. நிலபுலங்கள் விஷயத்தில் சாதாரணமான சூழ்நிலையே நிலவிவரும். மாணவர்கள் படிப்பில் முழுமையான அக்கறை செலுத்தினால்தான் முன்னேற்றம் காண முடியும். வீண் சண்டை, சச்சரவுகளில் பிரவேசிக்க வேண்டாம். வழக்கு, வியாஜ்ஜியங்களில் அனுகூலமான போக்கைக் காண்பது அரிது. தொழிலாளர்கள், உத்தியோகஸ்தர்கள், வியாபாரிகள், தொழிலதிபர்கள், விவசாயிகள் ஆகியோர் தங்கள் நிலைமையில் வளர்ச்சி காண அரும்பாடுபட வேண்டிவரும். பணவரவும் செலவும் சமமாக இருந்துவரும்.

2 இல் சனி உலவுவதாலும், குரு பலம் குறைந்திருப்பதாலும் கடுமையாகப் பாடுபட்டே பொருள் திரட்ட வேண்டிவரும். உழைப்பிற்குப் பின்வாங்கலாகாது. ஸ்பெகுலேஷன், கொடுக்கல் - வாங்கல் இனங்களில் ஈடுபடவேண்டாம். மாதர்களது எண்ணம் ஈடேறத் தடையிருந்துவரும். கலைத்துறைகளைச் சேர்ந்தவர்கள் பொறுப்புடன் காரியமாற்றினால் சரிவுக்கு ஆட்படாமல் தப்பலாம். பயணத்தின் போதும், இயந்திரங்களில் பணியாற்றும்போதும் பாதுகாப்பு தேவை. மக்கள் நலனில் அக்கறை செலுத்தவேண்டிவரும். ராகு பலம் கூடியிருப்பதால் நூதன நண்பர்களால் அனுகூலம் உண்டாகும். தோல் பொருள்கள், ஏற்றுமதி, இறக்குமதி இனங்கள், போக்குவரத்துச் சாதனங்கள் ஆகியவற்றால் வருவாய் கூடும். 23 ஆம் தேதி முதல் புதபலம் கூடுவதால் வியாபாரிகள், எழுத்தாளர்கள், பத்திரிகையாளர்கள், விஞ்ஞானிகள் ஆகியோர் வளர்ச்சி காணச் சந்தர்ப்பம் கூடிவரும். திருவோண நட்சத்திரக்காரர்களுக்குச் சோதனையான நேரமிது. தெய்வ வழிபாட்டிலும், கிரக வழிபாட்டிலும் ஈடுபாடு உள்ளவர்களுக்கு மனத் தெளிவு உண்டாகும். மே 15,16,17,22,23,25,27,28,29 31 ஜூன் 3,5,7,8,11,12,13 தேதிகள் சிறப்பானவை. தென்மேற்குத் திசை ராசியானது. துலா, விருச்சிக ராசிக்காரர்கள் உதவுவார்கள். 4,5 எண்கள் அதிர்ஷ்டமானவை.

## கும்பம் :(அவிட்டம் 3 ஆம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3 ஆம் பாதம் முடிய)

குரு, செவ்வாய் ஆகியோர் அனுகூலமான நிலையில் சஞ்சரிப்பதால் உங்கள் மனதில் துணிவும், தன்னம்பிக்கையும் அதிகரிக்கும். புத்திசாலித்தனம் காரணமாக வாழ்வில் வெற்றிநடை போடுவீர்கள். எடுத்த காரியங்கள் இனிது நிறைவேறும். அந்தஸ்தும், மதிப்பும் உயரும். உடல் ஆரோக்கியம் சீராக இருந்துவரும். மற்றையோரால் பாராட்டப்படுவீர்கள். பெரியவர்கள், தனவந்தர்கள் ஆகியோர் உங்கள் முன்னேற்றத்திற்கு உற்ற துணையாக விளங்குவார்கள். மக்களால் பெற்றோருக்கும், பெற்றோரால் மக்களுக்கும் அனுகூலங்கள் உண்டாகும். தொலைதூரப் பயணம் ஆக்கம் தரும். தெய்வப் பிரார்த்தனைகள் ஈடேறும். தரும காரியங்களில் பங்கேற்க முடியும். சாதுக்கள், மகான்கள் ஆகியோரது நல்லாசிகளைப் பெறுவீர்கள். பொறியியல்துறை ஏற்றம் தரும். சட்டம், காவல், இராணுவம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் வெற்றிநடை போடுவார்கள்.

எதிர்ப்புகள் என்பவை அகலும். போட்டிப் பந்தயங்களிலும், வழக்கு, வியாஜ்ஜியங்களிலும் வெற்றியின் சாயல் தெரியவரும். வியாபாரிகள், உத்தியோகஸ்தர்கள், மருத்துவர்கள், ஆன்மிகவாதிகள், ஆசிரியர்கள், இரசாயனத்துறைகளைச் சேர்ந்தவர்கள், விஞ்ஞானிகள் ஆகியோருக்கெல்லாம் பொன்னான நேரமிது. எழுத்தாளர்களுக்கும், பத்திரிகையாளர்களுக்கும் வரவேற்பு கூடும். கலைத்துறைகளைச் சேர்ந்தவர்கள் தங்கள் திறமையைப் பயன்படுத்தி முன்னணிக்கு உயருவார்கள். மனதில் தெளிவும் நம்பிக்கையும் கூடும். புதிய பொருள்களின் சேர்க்கை நிகழும். மாதர்களது குறிக்கோள் நிறைவேறும். சமுதாயநலப் பணியாளர்கள் பாராட்டுகளுக்கு உரியவர்களாவார்கள். 19 ஆம் தேதி முதல் கேது பலம் கூடுவதால் மனோபலம் கூடும். 9 இல் ராகு அமர்ந்தாலும் உடனடியாகச் சங்கடங்களை உண்டுபண்ணிவிட மாட்டார்கள். சதய நட்சத்திரக்காரர்களுக்கு ஓரிரு சோதனைகள் ஏற்படும். இறைவழிபாட்டால் அவற்றைக் கடக்க முடியும். மே 15,16,17,23,25,27,28,29,31 ஜூன் 3,5,7,8,11,12,13 தேதிகள் சிறப்பானவை. தெற்கு, தென்கிழக்கு, வடகிழக்குத்திசைகள் அனுகூலமானவை. மேஷ, மிதுன, துலா ராசிக்காரர்கள் உதவுவார்கள். 3,4,5,6,7,9 எண்கள் அதிர்ஷ்டமானவை.

## மீனம் :(பூரட்டாதி 4 ஆம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)

குரு, சனி, செவ்வாய் ஆகிய கிரகங்கள் கோசாரப்படி அனுகூலமான நிலையில் சஞ்சரிக்காததால்

உங்கள் அந்தஸ்தும், மதிப்பும், வாழ்க்கை வசதிகளும் சாதாரணமாகவே காணப்படும். பொருள் வரவைவிட செலவுகள் சிறிது கூடும். மனதில் அமைதி குறையும். உடல் ஆரோக்கியம் சீராக இராது. எண்ணங்கள் நிறைவேறத் தடையிருந்து வரும். எதிர்ப்பாளரின் கரம் வலுவடையும். அவர்களால் ஓரிரு சோதனைகளுக்கு ஆட்படவும் நேரும். பயணத்தின் போதும், இயந்திரங்களில் பணிபுரியும் போதும் பாதுகாப்பு தேவை. பிறர் மனம் புண்படும்படியான வார்த்தைகளை உதிர்க்கலாகாது. வீண் சண்டை, சச்சரவுகளில் ஈடுபட வேண்டாம். ஆசிரியர்கள், பேராசிரியர்கள், ஆன்மிகவாதிகள், இரசாயனத் துறைகளைச் சேர்ந்தவர்கள், உத்தியோகஸ்தர்கள், தொழிலாளர்கள், தொழில் அதிபர்கள் ஆகியோருக்கெல்லாம் சிறுசிறு பிரச்னைகள் ஏற்படும். பக்குவத்துடன் சமாளிப்பது நல்லது.

குடும்பத்தில் சலசலப்புகள் உண்டாகும். வேளாவேளைக்கு உணவு உண்ண முடியாமல் போகும். அலைச்சலும், உழைப்பும் அதிகரிக்கும். கைப்பொருள் காணாமல் போகக்கூடுமாதலால் பாதுகாத்துக் கொள்வது நல்லது. புதிய தொழில் துறைகளில் ஈடுபடவேண்டாம். வழக்கமான பணிகளில்கூட அதிகம் அக்கறை தேவைப்படும். 3இல் உள்ள சூரியன் சங்கடங்களைச் சமாளிக்கும் சக்தியை வழங்குவார். அரசாங்கத்தாரால் எதிர்பார்த்த ஓரிரு காரியங்கள் நிறைவேறும். சுக்கிர பலம் கூடியிருப்பதால் கலைத்துறையினருக்கு வெற்றி வாய்ப்புகள் கூடும். புதிய ஆடை, அணிமணிகளின் சேர்க்கை நிகழும். ரியல் எஸ்டேட் இனங்கள் அளவோடு லாபம் தரும். 23 ஆம் தேதி முதல் புதன் 4 ஆமிடம் மாறுவதால் உற்றார், உறவினர்கள், நண்பர்கள் ஆகியோரால் நலம் பெறுவீர்கள். மாணவர்களது நிலை உயரும். கணவன், மனைவி உறவுநிலை சீராக இருந்துவரும். கணிதம், விஞ்ஞானம், வியாபாரம், எழுத்து போன்ற இனங்கள் ஆக்கம் தரும். ரேவதி நட்சத்திரக்காரர்களுக்குக் கெடு பலன்கள் கூடுதலாக ஏற்படும் என்பதால் அவர்கள் தெய்வ வழிபாட்டிலும், கிரக வழிபாட்டிலும் முழுமையாக ஈடுபடுவது நல்லது. மே 15,16,17,20,25,27,28,29,31 ஜூன் 3,5,7,8,11,12,13 தேதிகள் சுமாரானவை. கிழக்கு, தென்கிழக்கு திசைகள் அனுகூலமானவை. ரிஷப, மிதுன ராசிக்காரர்கள் உதவுவார்கள். 1,6 எண்கள் அதிர்ஷ்டமானவை.

## மணமகன் தேவை

## மணமகள் தேவை



• தென் கலை ஐயங்கார், விசுவாமித்திரா, அனுஷம், 30/153/5500. தனியார் கல்லூரியில் விரிவுரையாளராகப் பணியாற்றும் பெண்ணிற்கு மணமகன் தேவை. ஐயங்கார் இனத்தைச் சேர்ந்தவர்கள் (தென் கலை/வடகலை) மட்டும் விண்ணப்பிக்கவும். **விளம்பர எண் 2005.**

• வடகலை ஐயங்கார், விடமர்ஷ்ண கோத்ரம், அனுஷம் நட்சத்திரம், ஐ.சி.எஃப்பில் 3000 ரூபாய் சம்பளத்தில் நிரந்தர வேலையில் உள்ள 29 வயது பட்டதாரிப் பையனுக்கு 25 வயதுக்குள் உள்ள வேலை பார்க்கும் பெண் தேவை. ஜாதகம் இல்லை. **விளம்பர எண் 2006.**

• வடகலை ஐயங்கார் நைத்ரவ காஸ்யப உத்திரம் நான்கு. நல்ல நிறம், தோற்றம். வயது 31. உயரம் 5 அடி 81/2 அங்குலம். பிளஸ் 2. வேலை தனியார் நிறுவனம். மாதம் ரூ. 2500 போனஸ் வரனுக்கு மணமகள் தேவை. **விளம்பர எண் 2007.**

• வடமாள், நைதருப காச்யப கோத்ரம் அவிட்டம் பி.காம்., 178 செ.மீ., வயது 29. பிஸினஸ். மாத வருமானம் 10,000. பையனுக்கு நல்ல அழகான குடும்பப்பாங்கான பட்டதாரிப் பெண் தேவை. பார்மசூடிகல் டிஸ்ட்ரிபியூட்டர். **விளம்பர எண் 2008.**

• பிரபல ராயல் பேமிலி. ஐயர், 32/5'5"/2500/10 லட்சம். அன்பு, அழகு, ஒழுக்கம், படிப்பு உள்ள மணமகனுக்கு ஏற்ற மணமகள் தேவை. சாதி தடை இல்லை. தகுதிகள் மிக்க விதவை, விவாகரத்தானவர், தமிழ் பேசும் மலையாளிகள் பரிசீலிக்கப் படுவர். **விளம்பர எண் 2009.**

• Iyer Bharadwaja Moolam B.Sc., B.Tech., Age 27. Ht 170 cms., working in reputed concern. seeks graduated girl aged below 23 years. **Advt No. 2010.**

• Alliance for Keralite Iyer 27/157/B.A., unemployed Vadamal Vadhoolam Poosam star, Fair attractive smart homely girl from well employed boys. Subsect acceptable. Reply with horoscope. **Advt. No. 2011.**

## மணமகன் / மகள் தேவை

தொடர்பு கொள்ள விரும்புவோர் விளம்பர எண்ணைக் குறிப்பிட்டு கீழ்க்காணும் முகவரியுடன் தொடர்பு கொள்ளவும்.

**அமுதசுரபி**
**தபால் பெட்டி எண். 5043,**
**145, லிங்க செட்டி தெரு,**
**சென்னை - 600 001**

# தினோஸார் உலவிய காலங்கள்



புஷ்பா தங்கதுரை

*1. தினோஸார் எப்போது தோன்றியது?*

23 கோடி ஆண்டுகளுக்கு முன்னால் தோன்றிய ராட்சத மிருகங்கள். ஆதியில் நீர்-வாழ் பிராணிகள், அடுத்து நீர்-நிலவாழ் பிராணிகள். இவற்றிடமிருந்து தோன்றியது தினோஸார் குடும்பம்.

*2. இதற்கு யார் இந்தப் பெயர் கொடுத்தார்கள்?*

ஸர் ரிச்சர்ட் ஒவன். அவர் வரலாற்று விஞ்ஞானி! தினோஸார் என்றால் "பயங்கரப் பல்லி" என்று பொருள். ஆனால் பல்லியைவிட முதலை இனத்திற்குத் தான் இதன் சாயல் அதிகம் என்று விஞ்ஞானிகள் கூறுகிறார்கள்.

*3. இந்தப் பிராணிகள் இப்போது இருக்கின்றனவா?*

இல்லை. ஆறு கோடி ஆண்டுகளுக்கு முன்னே மறைந்துவிட்டன.

*4. ஏன் மறைந்தன?*

இவை குளுமை ரத்தப் பிராணிகள்! பூமி வெதுமையாக இருந்தபோது வாழ்ந்தன. பூமி பின்னர் குளிர்ச்சி அடையத் தொடங்கிற்று. அந்தத் தட்ப-வெப்ப வித்தியாசத்தையும் அதனால் பூமியில் ஏற்பட்ட மாறுதலையும் தினோஸாரால் ஏற்றுக் கொள்ள முடியவில்லை. அதன் 5000 குடும்ப வர்க்கங்களோடு இறந்துவிட்டது.

*5. ஐயாயிரம் வர்க்கமா?*

ஆமாம்! நிலவாழ் பிராணிகள் எல்லாவற்றுக்கும் முன்பாகத் தோன்றிய மூத்த பிதாமகர் இவர். ஆச்சரியமாக இவற்றிடையே 'பரிணாமம்' மிக வேகமாக நடந்தது. தினோஸாரில் இரண்டு பிரதானக் கிளைகள் தோன்றின. இவற்றில் சைவ வாசிகளும் உண்டு. அசைவ வாசிகளும் உண்டு.

*6. இவற்றை எப்படிக் கண்டுபிடித்தார்கள்?*

ஃபாஸில்களிலிருந்து (Fossile) கண்டு பிடித்தார்கள்.

*7. ஃபாஸில் என்றால் என்ன?*

பூர்வ பழங்கால மிருகங்கள் அல்லது மரம் செடிகளின் மிச்சங்கள் இவை. கோடி கோடி ஆண்டுகள் முன்னால் ஒரு பிராணி இறந்து, உடனே மண்ணில் அது புதைபடுமானால் காலம் காலமாக அந்த மண் உருமாறி, செட்டியாகி, பாறையாகிவிடும். இந்தப் பாறைகள் நமக்குக் கிடைத்தால் இதனுள்ளே இறந்த அந்தப் பழங்காலப் பிராணிகளின் உடல் ஒரு வரைபடம் போலப் படிந்திருப்பதைப் பார்க்கலாம்! இந்த ஃபாஸிலில் முழு எலும்பும் இருக்கலாம். இவற்றிலிருந்துதான் இந்தப் பிராணிகள் வாழ்ந்தன என்று கண்டுபிடித்தார்கள்.

*9. கண்டு பிடித்தவர் யார்?*

1822இல் கிடியன் மாண்டெல் என்ற டாக்டருக்கு புவியியல் ஒரு பொழுது போக்கு. அவர் மனைவி ரஸ்தா ஓரம் பரப்பிய சரளைக் கற்களில் பெரிய பற்கள் இருப்பதைக் கண்டு பிடித்தாள்! அந்தச் சரளை எங்கிருந்து வந்தது என்பதைக் கண்டுபிடிக்க கணவனும் மனைவியும் போனார்கள். அங்கே மேலும் பல எலும்புகள் கிடைத்தன.

அது ஒரு ராட்சசப் பல்லியின் பல் என்று அவர்கள் நினைத்தார்கள்.

1824இல் வில்லியம் பக்லண்ட் என்ற விஞ்ஞானி பல ஃபாஸில் துண்டுகளைப் பார்க்க நேர்ந்தது. பற்கள் பல அடங்கிய தாடையின் ஃபாசில் அது.

பழங்காலப் பாம்பு, பல்லி, முதலை இனத்தைச் சேர்ந்த ஒரு ராட்சச வர்க்கத்தின் தாடை அது, அது ஒரு மாமிச பட்சிணி என்று அவர் தீர்மானித்தார்.

1841இல் அந்த ராட்சச வர்க்கத்திற்கு தினோஸார் என்று பெயர் கொடுக்கப்பட்டது.

1858இல் அமெரிக்காவில் தினோஸாரில் முழு ஃபாஸில் கண்டுபிடிக்கப்பட்டது.

அதற்கு முன்பு 1802இல் பூமியில் பதிந்த காலடிகளின் தோற்றம் ஃபாஸில் வடிவமாக மாறி இருந்தன. இவை ஒரு ராட்சதப் பறவையின் காலடிகள் என்று நினைத்தார்கள். ஆனால் அவை தினோஸாரின் காலடிகள் என்று பிற்பாடு தெரிய வந்தது.

பிறகு தினோஸார் எலும்புகள் உலகெங்கும் கண்டு பிடிக்கப் பட்டன.

இவற்றை ஓர் எலும்புக் கூடாக நிறுத்திப் பார்த்தார்கள்.

அடேயப்பா! அந்தக் கூட்டின் உருவமே பிரம்மாண்டமாக இருந்தது. இந்தக் கூட்டை உடையதான உண்மைப் பிராணி பயங்கர ராட்சச மிருகமாக இருக்கும் என்று நினைத்தார்கள்.



இந்தப் பிராணியின் உருவங்கள் கற்பனையாக வரையப்பட்டன.

விஞ்ஞான அடிப்படையில் வரையப்பட்டவைதான்.

ஆனால் தினோஸாரை யாரும் பார்த்திருக்க முடியாது.

*10. தினோஸார் இரண்டு வகை என்றீர்களே?*

ஆமாம். பல்லி போல இடுப்பைக் கொண்டது ஒன்று. பறவை போல இடுப்பைக் கொண்டது ஒன்று. இரண்டும் சைவ உணவுக்காரர்கள்.

*11. சைவம் என்று எப்படி கண்டுபிடித்தார்கள்?*

அவற்றின் உடல் அமைப்புகளை ஆராய்ந்ததில்தான் கண்டுபிடித்தார்கள். பின்னால் இவற்றில் மாமிச பட்சிணிகளும் தோன்றின! உதாரணம் : டிரன்னோஸாரஸ்.

*12. தினோஸாரின் உயரம் என்ன?*

சுமார் 30 அடி உயரம். கழுத்து 30 அடி நீளம். கனம் 50 டன்.

*13. ஜுராஸிக் காலம் என்றால் என்ன?*

பூமி தோன்றியதிலிருந்து அதில் தோன்றிய உயிரினம் குறித்து 'காலம்' பிரித்திருக்கிறார்கள். பெர்மியன் என்ற காலம், 28 கோடியிலிருந்து 22 கோடி ஆண்டுவரை! ட்ரையாஸிக் என்ற காலம், 22 கோடியிலிருந்து 19 கோடி வரை! ஜுராஸிக் என்பது, 19 கோடியிலிருந்து 13 கோடி வரை! க்ரடிஸியஸ் என்பது 13 கோடியிலிருந்து 6 கோடி வரை! ஜுரா என்பது ஐரோப்பியாவில் உள்ள மலைத்தொடர்! இதன் பெயர்தான் ஜுராஸிக் காலத்திற்குச் சூட்டப்பட்டது. இந்தக் காலத்தில்தான் நீர்-நில வாழ் பிராணிகள் தோன்றி அவற்றிலிருந்து ராட்சத தினோஸார்கள் உற்பத்தி ஆயின.

*14. டிரன்னோஸார் பற்றி...*

இது மாமிசம் உண்ணும் வகை. இதன் நீளம் சுமார் முப்பத்தாறு அடி. இருபதடி வரை உயரம். (எடை : ஏழு டன்)

*15. பிராக்கியாஸார் பற்றி :*

தினோஸார் குடும்பத்தில் இது தான் பெரிய ராட்சதன். உயரம் 40 அடி வரை. எடை 75 டன். இவை நான்கு கால்களில் நடக்கும். இவை சைவ இனத்தவை.

*16. தினோஸார்களை பூமியில் திரும்பக் கொண்டு வரமுடியுமா?*

சாத்தியமில்லை. இருந்தாலும் விஞ்ஞானக் கதைகள் எழுதுபவர்கள் தினோஸாரின் டி.என்.ஏ. நிறைந்த ரத்தம் ஒரு கொசுவின் வயிற்றில் இருந்தது என்றும் அந்தக் கொசு ஒரு ஃபாஸில் ஆகி உறைந்து கிடந்தது என்றும், இந்த ரத்தத்தை எடுத்து அந்த டி.என்.ஏ.யைப் பிரித்தெடுத்து அந்த தினோஸாரை உண்டாக்கினார்கள் என்றும் கற்பனையாக எழுதி இருக்கிறார்கள். இப்படிப்பட்ட நாவல் ஒன்று தான் தற்போதைய ஜுராஸிக் பார்க் திரைப்படமாக உருவாகி உள்ளது.

தனியாருக்குச் சொந்தமான தீவில் ரகசியமாக ஒருவர் இந்த தினோஸார் வர்க்கங்களை இனவிருத்தி செய்கிறார்.

ஒரு வில்லன் தோன்றி இந்த ராட்சதப் பிராணியின் கருவை உலகுக்குக் கொண்டு வந்து விற்க முயல்கிறான்.

தீவில் அந்த மிருகங்களைக் கட்டுப்படுத்தி வைத்திருக்கும் வேலி உடைக்கப்பட்டு விட, விடுதலை அடைந்த தினோஸார்கள் அட்டகாசம் செய்கின்றன.

இவற்றிலிருந்து தப்பித்து தீவின் சொந்தக்காரரும், மற்றவர்களும் தீவை விட்டு வெளியேறுகிறார்கள். இதுதான் கதை!

# நாணயம்



நேர்மை, நாணயம், உழைப்பு செழிக்கவும் உங்கள் பொருளாதாரம் கொழிக்கவும் வழிகாட்டும் பகுதி.

## உயில் ஏன் எழுத வேண்டும்?

**எஸ். இராஜரத்தினம்**

"வாழ்வு நிரந்தரமல்ல. வாழ்க்கை அநித்தியம். இன்றிருப்பார் நாளை இருப்பதில்லை" என்று வேதாந்தம் பேசாதவர் எவருமில்லை. இருக்கும்போது தமது சொத்துகளைப் பற்றி எவ்வளவு கவனத்துடன் அவர் இருக்கிறாரோ அந்த அளவிற்கு, தாம் இறந்தபின் தனது வாரிசுகள் தமக்குள் எந்தவிதமான சச்சரவுமின்றி அனுபவிக்க வேண்டும் என்பதைப் பற்றியும் திட்டவட்டமான கருத்துகள் எவருக்கும் உண்டு. ஆயினும் அதைச் செயல்படுத்துவதில் தாமதப்படுத்துவதால் அநேகர் தங்கள் சொத்துகள் யாருக்குச் சேரவேண்டும் என்று நினைத்தார்களோ அவர்களுக்குச் செல்வதில்லை.

"எனக்கு இப்போது உயில் எழுதுவதற்கு என்ன வயதாயிற்று? என் ஜாதகத்தின்படி எனக்கு 85 வயது வரை ஆயுள் இருப்பதால் நான் பின்னர் எழுதிக் கொள்ளலாம். எனக்கு உயில் எழுத வேண்டிய அளவு எங்கே சொத்து இருக்கிறது? எனது பையன்களை நான் வளர்த்த விதத்தினால் என் குடும்பத்தில் நான் உயில் எழுதினாலும் எழுதாவிட்டாலும் எந்த விதமான சச்சரவுக்கும் இடமில்லை. அப்படி இருக்கும்போது நான் ஏன் உயில் எழுத வேண்டும்" என்று பலவித காரணங்களினால் பலர் உயில் எழுதுவதில்லை; அல்லது தடைபடுகிறது. உயில் எழுத வேண்டும், நாளையே எழுத வேண்டும் என்று நினைத்துக் கொண்டேயிருந்து எழுதுவதற்கு முன் மாண்டவர்கள் மிகப்பலர். அவர்கள் குடும்பத்தினர் உயில் எழுதாததனால் அல்லல் படுவதுண்டு. ஒரு நண்பர் சேர்த்து வைத்த சொத்து ஆயுட் காப்பீட்டுக் கழகத்திடம் இருந்து, பெற வேண்டிய பணம் மட்டுமே. நான்கு மக்களைப் பெற்ற அவர் அந்தக் காப்பீட்டுப் பத்திரத்தில் தன் மூத்த மகன் பெயரைப் பொறுப்பாளராக (Nominee ஆக) நியமித்திருந்தார். நல்ல உத்தியோகத்தின் மூலம் வசதியில் இருந்த மூத்த மகன் அந்தக் காப்பீட்டுத் தொகை தனக்கு மட்டுமே தனது தந்தை அளித்திருப்பதாக நினைத்தார். பின்னர் சட்டத்தின்படி அவரது கடமைகளை அவருக்கு வலியுறுத்திய பின்னரும் மணமாகாத் தங்கைக்கும், கல்விக்குக் காத்திருக்கும் தம்பிகளுக்கும் சமமாக சட்ட உரிமைப்படி மட்டுமே விட்டுக் கொடுக்க முன் வந்தார். ஆயினும் அவர் தாம் ஏமாற்றப்பட்டதாக நினைத்ததால் அதன்பின் பேச்சுவார்த்தை இல்லை. உயில் எழுதப்பட்டிருந்தால் இந்தப் பிணக்கும் அதன்பின் விளைவுகளும் ஏற்பட்டிரா.

ஓர் இந்து கூட்டு (அவிபக்த)க் குடும்பத்தில் உள்ள பங்கைக்கூட கூட்டுக் குடும்பத்தில் பாகப் பிரிவினை செய்யப்படாமல் இருந்தாலும் ஒரு நபர் ஓர் உயிலினால் தம் பங்கை உயில் மூலம் தனக்குப் பின்னர் யாருக்கு அவர் அளிக்க வேண்டுமென்று நினைக்கிறாரோ அவருக்கே கொடுக்கலாம்.

உயில் எழுதுவது எப்படி? ஓர் இந்து வாரிசுரிமைச் சட்டத்தின்படி (இஸ்லாமியர்கள் தவிர) ஏனையோருக்கும் இந்துக்களுக்கும் உயில் சம்பந்தமான விதிகளில் வேறுபாடில்லை.

வயது வராதவர், சித்த சுவாதீனம் அற்றவர் தவிர சுயநினைவுடன் யாருடைய அச்சுறுத்தலினாலோ அல்லது வேறு எந்த விதமான கட்டுப்பாட்டிற்கோ உடன்படாமல் சுயசிந்தனையோடு தனது விருப்பப்படி யாருக்கு வேண்டுமானாலும் ஓர் இந்து தனது சுயசம்பாத்தியச் சொத்துகளை எழுதி வைக்கலாம். அந்த உயில், எழுதியவர் இறந்தவுடன் உயிர் பெறும். குறைந்த பட்சம் இரண்டு சாட்சிகளின் சாட்சிக் கையெழுத்துடன் அவர் கையெழுத்திடவேண்டும் என்பதுதான் ஓர் உயிலுக்கு வேண்டிய தேவை. கல்வியறிவு அற்றவரோ அல்லது உடல் நிலை காரணமாகக் கையெழுத்திட முடியாதவரோ தமது பெருவிரல் குறியைப் பதிப்பித்தாலே போதும்.

உயிலில் எதுவும் விடுபட்டிருந்தால் அதற்குரிய இணைப்பைத் (Codicil) தனியாக உயில் போலவே எழுதலாம்.

உயில் ஒரு சட்ட ஆவணம் போல் இப்படித்தான் எழுத வேண்டுமென்பதில்லை. நடைமுறையில் தன்னுடைய சொந்த விருப்பங்களைத் தெளிவான முறையில் இன்னாருக்கு இன்னின்ன சொத்துகள் என்றும் எஞ்சியவை யாருக்குச் சேர வேண்டும் என்பதையும் தங்களுடைய சொந்த நடையிலேயே எழுதலாம். சிறிய எழுத்துப் பிழைகள் பெரிதுபடுத்தப்பட மாட்டா. பொருளுக்கு மட்டுமே முக்கியத்துவம் உண்டு. முரண்பாடுகள் இருப்பினும்கூட கூடிய வரையில் இறந்தவரின் நோக்கம் எதுவென்று அறிந்து அதன்படி உயில் பொருள் கொள்ளப்படும்.

உயில் எழுதியவர் அதை இன்னோர் உயில் மூலம் மாற்றலாம். இறந்தவர் பல உயில்கள் எழுதியிருந்தால் கடைசியாக எழுதப்பட்ட உயில் மட்டுமே செல்லுபடியாகும். இணைப்பு இணைப்பாக இருந்தால் அதற்கு மட்டும் விதிவிலக்கு.

உயில் பதிவு செய்யப்பட வேண்டும் என்ற கட்டாயமில்லை.

ஆயினும் நெருங்கிய உறவினர் இருந்தும் அறக்கட்டளைக்கு எழுதி வைக்க வேண்டுமானால் அந்த உயில், இறந்தவர் அவர் இறப்ப தற்கு ஒரு வருடத்திற்கு முன் எழுதப்பட்டு ஆறுமாதங்களுக்கு முன்னர் பதிவு செய்யப்பட் டிருக்க வேண்டும்.

ஓர் உயிலை நடைமுறையில் அமல் படுத்துபவர் (Executor) யார் என்பதை உயிலில் கூறுவது நலம். அவர் உயில் எழுதியவருக்கு முன் மரிக்க நேர்ந்தாலோ அன்றி அவர் அந்தப் பொறுப்பை ஏற்றுக் கொள்ள விருப்பமின்றி இருந் தாலோ மாற்றாக வேறொரு வரைக்கூட உயிலில் நியமிப்பது நலம். ஏனெனில் அப்படி ஒரு வரும் நியமிக்கப்படாவிட்டால் அதை அமல் படுத்துவதில் வாரிசு களிடையே மன வேற்றுமை இருப் பின் நீதி மன்றத்தின் மூலம்தான் அமல் படுத்துவர் யார் என நிய மிக்கப்பட வேண்டும்.

உயில் எழுதுவது அநேகமாக எந்த வயதினராக இருந்தாலும் ஒரு தேவையே. அது எழுதுவது மிகவும் எளிதும்கூட. ⁂

---

# சென்னைத் துறைமுகத்தின் புதிய தலைவர்

தற்போது சென்னைத் துறை முகத் தலைவராக இருக்கும் திரு. மு. கலைவாணன், ஐ.ஏ.எஸ். அவர்கள், இதற்கு முன்பு கோவை மாவட்ட ஆட்சித் தலைவ ராகவும், தமிழக அரசு வருவாய் நிர்வாகத் துறை இணை ஆணை யாளராகவும் பணியாற்றியவர்.



சென்னைத் துறை முகம் இதுவரை கண்டிராத சாதனையாக, கடந்த நிதி ஆண் டில் (1993-94) இத்துறைமுகத் தில் 26.54 மில்லியன் டன் சரக்குகள் கையாளப்பட்டுள்ளன. இதற்கு முந்தைய ஆண்டில் இத்துறைமுகம் 25.33 மில்லியன் டன் சரக்குகளையே கையாண் டிருந்தது. அதேபோல் கடந்த நிதி ஆண்டில் கன்டெயினர் எனப் படும் கொள்கலப் பெட்டிகள் 1,63,087 என்ற அளவில் கையாளப் பட்டு, முந்தைய ஆண்டின் 1,32,482 பெட்டிகள் என்ற எண்ணிக்கையை முறியடித்துள்ளது. இது தவிர தொழிலாளர் நல்வாழ்வுக்கான பல்வேறு புதிய நல்வாழ்வுத் திட்டங்களையும் இவர் அறிமுகப் படுத்தி இருக்கிறார். ⁂






☆ எஸ். பார்த்தசாரதி, இயக்குநர் - சன்மார்

# ஸ்ரீ சக்தி

இந்தியாவில் இயங்குகிற நிதி நிறுவனங்களில் ஓவர்சீஸ் சன்மார் நிதி நிறுவனம், 93-94 ஆண்டில் ஆயிரம் கோடி ரூபாயை வர்த்தக மாக்கியுள்ளது.

30 கம்பெனிகள் கொண்ட ஓவர்சீஸ் சன்மார் நிதி நிறுவனத் தில் 9,000 பங்குதாரர்களும், சன்மார் குரூப்பில் 50,000 டெபாசிட்டர்களும் உள்ளனர்.

மாருதி கார்களுக்கு நிதி உதவி அளிப்பதில் முன்னணி யில் இருக்கும் 'சன்மார்', பல வெளிநாட்டுக் கம்பெனிகளுடன் நேரடியாகத் தொடர்பு கொண்டு தன் வர்த்தகத்தைப் பெருக்கிக் கொண்டே வளர்கிறது.

கணவனுடன் மனைவியும் வேலைக்குச் சென்று பணம் சம்பாதிக்கும் இன்றைய யுகத்தில் பெண்களின் மேம்பாட்டிற்கு 'ஸ்ரீ சக்தி' என்னும் திட்டத்தை அறி முகப்படுத்தி வெற்றியையும் ஈட்டியுள்ளது, சன்மார்.

பெண்கள் வேலைக்குச் சென்று தங்கள் எதிர்காலத்தைத் தாங் களே அமைத்துக் கொள்ள 'ஸ்ரீசக்தி' திட்டம் ஓர் அருமையான திட்டம்.

குறைந்த முதலீட்டில் குறிப் பிட்ட கொஞ்ச நாள்களிலேயே அதிகப்படியான வருவாயைப் பெற 'ஸ்ரீசக்தி' திட்டம் உதவு கிறது. உதாரணமாய் ரூபாய் 998 ஐ செலுத்தி 60 மாதங்களில் ரூபாய் 2,000 பெறலாம்.

இந்தியன் ஓவர்சீஸ் வங்கியின் பங்கு 22 சதவிகிதம் சன்மாருடன் இணைந்திருப்பது நம்பிக்கைக்கு மிகப் பெரிய ஆதாரம்.

சமீபத்தில் சன்மார் நடத்திய கார்ட்டூன் - வாசகப் போட்டியில் வெற்றி பெற்றவர்களுக்கான பரிசளிப்பு விழாவில் திரு கே.எஸ். நாராயணன் பரிசுகளை வழங்கிச் சிறப்புரை ஆற்றினார். ஓவர்சீஸ் சன்மார் நிதி நிறுவன இயக்குநர் எஸ். பார்த்தசாரதி வரவேற்புரை நிகழ்த்த, டி.டி.வாசு மற்றும் போட்டியின் நடுவர்களாகப் பணி யாற்றிய மதன், எழுத்தாளர் சுஜாதா ஆகியோர் பாராட்டிப் பேசினர்.

பெண்களின் எதிர்காலப் புன்ன கைக்கு சன்மார் அளித்திருக்கும் 'ஸ்ரீசக்தி' திட்டம் சிறப்பான ஒன்று.

— நாகு

# "இடும்பை இயல்பென்பான்"

**5.4.94** அன்று தில்லியில் பன்னாட்டுப் பெருளாதார மாநாட்டைத் (UN-ESCAPE) தொடங்கி வைத்த நம் அருமை பாரதப் பிரதமர் மாண்புமிகு திரு. பி.வி. நரசிம்மராவ் அவர்கள் ஒரு முக்கிய கருத்தினைக் கூறினார்கள். "மேலை நாடுகள் வளர்ந்து கொண்டே போகலாம். ஆனால் அவை வளரும் நாடுகளின் பாதையில் முட்டுக்கட்டைகளைப் போடக் கூடாது" என்றார். மேலும் அவர் கூறிய ஒரு முக்கிய கருத்து நம் நினைவில் என்றுமே நிற்கக் கூடியது. அறிவு ஜீவியாகிய நம் பிரதமர் மேலும் "வளரும் நாடுகள் கஷ்டங்களைக் கண்டு துவண்டு விடவே கூடாது. "துன்பம் இயல்பு", என்ற மனப் பான்மை கொண்டு துன்பத்தை முறியடித்து கீழுள்ள மக்களை மேலே ஏற்ற ஆவன செய்ய வேண்டும்'" என முழங்கினார்.

"அப்பத்தில் நெய் மிதக்கும்", பொருளாதார வளர்ச்சியைக் கண்ட மேலைநாடுகளுக்கு நம் பாரதப் பிரதமரின் சவால் இது. இதை, தில்லியில் கூடியிருந்த அத்தனை நாடுகளும் வரவேற்றன; பாராட்டின. பாரதம் வளரும் நாடுகட்கு ஒரு புதிய பலத்தை அளித்ததாக அங்கு கூடியிருந்த பன்னாட்டுப் பொருளாதார விற்பன்னர்கள் மகிழ்ச்சியுற்றனர்.

இதையே நிர்வாக இயல் மேதை பர்ன்ஹாம் (Burnham) வேறு மாதிரியாகக் கூறுவார். ஒரு காரில் நாம் புறப்படும்போது மாற்றுச் சக்கரம் சரியாக இருக்கிறதா என்று பார்ப்பவனே அறிவாளி. அதேபோல் விமானத்தில் பறக்கும்போது வான்குடைகள் (Parachute) (வான்குடை எனது சொந்தத் தமிழாக்கம்) சரியாக உள்ளனவா என்று பார்ப்பவனே நல்ல விமான ஓட்டி. நமக்கு என்றும் எதுவுமே வராது, எனத் தேவைக்கதிகமான நம்பிக்கையை (Over Confidence) வைத்திருப்பவன், நல்ல காரோட்டியாகவோ, விமானியாகவோ வளர முடியாது – அதேபோல்தான் நிர்வாகியும்.

நான் இங்கிலாந்தில் பல ஆண்டுகட்கு முன்பு படித்தேன். எனது பேராசிரியர் லாரிஸ் (Lawreys) புகழ்மிகு கல்வியாளர். அவர் வேடிக்கையாகச் சொல்லுவார். "கப்பலில் செல்பவர்கள் கடவுள் நம்பிக்கையற்றவர்களாக இருக்கவே முடியாது. ஏனெனில் கப்பல் மூழ்கும் அபாயம் என்றும் உண்டு" என்பார். ("There cannot be any atheist among sea men.")

மேலே கூறியவற்றின் உட்கருத்து என்ன? துன்பம் என்றும் வரலாம். நாம் செல்லும் கார் எந்த இடத்திலும் காற்று இறங்கி நிற்கலாம். லாரி திடீரென நம்மைத் தாக்கலாம்.

பறக்கும் விமானம் திடீரென்று இயந்திரக் கோளாறு காரணமாகத் தரையிறங்கலாம். அல்லது மோதலாம். சைக்கிளில், ஏன் – நடந்து போனால்கூட, நமக்கு "ஆபத்தே கிடையாது" என்று சொல்பவன் ஆபத்தை விருந்துக்கு அழைக்கிறான்.

ஆனால் "துன்பம் வருவது இயற்கை. என்றும் துன்பம் வரும் – வரட்டுமே," என்று இயல்பாகத் துன்பத்தை எதிர்நோக்கும் மனிதன் மாமனிதனாகிறான். கஷ்டத்தையும், நஷ்டத்தையும் என்றுமே எதிர்பார்க்கும் புத்திசாலியான நிர்வாகி அவற்றை எளிதில் கடந்துவிட முடியும்.

'துன்பம் இயல்பு' என்னும் அவனது நிர்வாகம் சீரிய நிர்வாகம். சிறந்த நிர்வாகி அவன்.

இக்கருத்தை 2000 ஆண்டுகட்கு முன்னரே நம் பொய்யாமொழியார் தமக்கே உரித்தான பாணியில் கூறுவதைக் கேளுங்கள்.

*"இன்பம் விழையான், இடும்பை இயல்பென்பான்*
*துன்பம் உறுதல் இலன் (63-628)*

"இன்பத்தை விரும்பாதவனாய் துன்பம் இயற்கையானது என்று தெளிந்திருப்பவன் துன்பம் வந்த போதும் துன்புறுவது இல்லை" என்று விளக்குவார் மேதை டாக்டர் மு.வ அவர்கள்.

இதுதான் இன்றைய நிர்வாக இயலின் அச்சாணி. என்றும் நமது நிர்வாகம் தப்பிக்கலாம். துன்பங்கள் அடுக்கி வரலாம்.

ஆனால், நிர்வாகி "இடும்பை இயல்பென்பானாக" இருந்து விட்டால் கவலையே இல்லை.

துன்பம் துடைக்க வள்ளுவனின் மாமருந்து இது. எக்காலத்துக்கும் பொருந்தும் அருமருந்து இது. ००

**திருக்குறளில் நிர்வாகம்**

டாக்டர்
**கி. வேங்கடசுப்பிரமணியம்**



## சர்க்கரை வியாதியா? மூட்டு வலியா? அடேயங்கப்பா! இதுதான் காரணமா?



### நாம் ஏன் அதிகமாக உணவை உட்கொள்கிறோம்?

அறுசுவை உணவில் கசப்புக்குரிய காய்கறி, கீரை வகைகளை போதுமான அளவு உட்கொள்ளாததால் நமது வயிற்றிலும் உடலிலும் தேவையற்ற புழுக்களும், கிருமிகளும் தோன்றி விடுகின்றன. மேலும் தேய்மானங்கள் முறையாக புதுப்பிக்கப்படாமல் இருந்து விடுவதால் தேவைக்கு அதிகமான உணவை உட்கொள்ளும் நிலைமைக்கு ஆளாகி விடுகின்றோம்.

உதாரணம் : நல்ல நிலையில் உள்ள மோட்டார் கார் ஒரு லிட்டர் பெட்ரோலுக்கு பதினைந்து கிலோ மீட்டர் தூரம் செல்கிறது. தேய்மானம் அடைந்த கார் அதே தூரம் செல்ல ஒன்றரை லிட்டர் பெட்ரோலை கிரகிப்பது அனைவரும் அறிந்ததே!

உதாரணம் : இதேபோல் நாம் எட்டு இட்லி உண்ணும்பொழுது நமது உடலின் தேவைக்காக நான்கும், புழு, கிருமிகளுக்காக மீதமுள்ள நான்கு இட்லியும் பயன்படுகிறது. ஆகவே நம் உடலிலும், வயிற்றிலும் உள்ள கிருமிகளையும், புழுக்களையும் வெளியேற்ற தக்க மூலிகைகளை உட்கொள்ள வேண்டும். இதனால் உடலைப் பாதுகாப்பதுடன் உணவையும் மீதியாக்க முடியும் என்பதில் சந்தேகமே இல்லை.

பரிபூரண உடல் நலம் பெறவும் சர்க்கரை வியாதி, (எ) நீரிழிவு நோய்களிலிருந்தும் வியக்கத்தக்க வகையில் விடுபட தெய்வீக மூலிகைகளான வில்வம், வேப்பிலை, அத்தி, அருகு, வெற்றிலை ஆகியவற்றுடன் அற்புத மருத்துவ குணம் கொண்ட கீழா நெல்லி, தும்பை, ஆடாதொடை, குப்பைமேனி போன்றவற்றைப் பொடி செய்து தக்க அளவில் கலந்து உட்கொள்ள வேண்டும். இது பற்றிய விரிவான ஆலோசனையை கீழ்க்காணும் முகவரியில் வைத்தியரிடம் நேரிலும் கடித மூலமும் பெறலாம்.

சென்னை முகவரி : ஞானோதய வைத்தியர்

Dr. C.K. மாணிக்கவாசகம், & Dr. C.K.M. சபாபதி,

89/14, வெள்ளாளத் தெரு, புரசைவாக்கம், சென்னை – 600 084. போன் : 6427638, 8280466, வீடு – 6424285.

வீட்டு முகவரி : P.B. No. 30, (காலேஜ் எதிரில்), திருப்பத்தூர் (N.A.A.) 635602, போன் – 04179, 20469

குறிப்பு : இடுப்பு வலி, ஆஸ்துமா, ஈஸ்னோபீலியா, காமாலை, வெள்ளைபடுதல், வாயுத் தொல்லை, ஆண்மைக் குறைவு, தூக்கமின்மை, உடற்பருமன், புற்றுநோய், மலச்சிக்கல், பசியின்மை, சிறுநீரகக் கோளாறு போன்றவற்றுக்கு ஆலோசனையும், உணவில் ஒரு வகையேயான தெய்வீக மூலிகை கலவைப் பொடிகள் கிடைக்கும்.

வைத்தியரிடம் ஆலோசனை பெற, நேரில் சந்திக்க : 1994 ஆம் வருட புதிய முகாம் விவரம், ஒவ்வொரு மாதமும் (பொங்கல் போன்ற பண்டிகை தினங்களிலும்கூட முகாம் உண்டு).

2 ஆம் தேதி – வேலூர் (N.A.) பிற்பகல் 1.00 மணி முதல் 2.00 மணி வரை, ஹோட்டல் கண்ணா, 16, ஆபீஸர்ஸ் லைன், போன் – 23060.

3,6,7,19,20,21 ஆகிய தேதிகளில் – சென்னை : காலை 10 மணி முதல் 1.00 மணி வரை, முகவரி 89/14, வெள்ளாளத் தெரு, புரசைவாக்கம், சென்னை – 84. போன் – 6427638.

4 ஆம் தேதி – கடலூர் (S.A.Dt.) காலை 9 மணி முதல் 11 மணி வரை ஆற்காடு உட்லண்ட்ஸ் ஹோட்டல், போன் – 20707.

4 ஆம் தேதி – விழுப்புரம், பிற்பகல் 2 மணி முதல் 3 மணி வரை, ஹோட்டல் ஆனந்தா, பஸ் நிலையம் எதிரில், போன் – 2962.

4 ஆம் தேதி – திருவண்ணாமலை, மாலை 5 மணி முதல் 6 மணி வரை, பிரகாசம் லாட்ஜ், 10, சின்னக்கடைத் தெரு, போன் – 22050.

9 ஆம் தேதி – பெங்களூர், காலை 11.30 மணி முல் 12.30 மணி வரை, ஹோட்டல் பிராட்வே. (கல்பனா தியேட்டர் அருகில்). கெம்பே கவுடா ரோட், போன் – 2872321.

9ஆம் தேதி – ஒசூர், மாலை 3 மணி முதல் 4 மணி வரை, சீனிவாசா லாட்ஜ், பாகலூர் ரோட், போன் – 22899.

9 ஆம் தேதி – கிருஷ்ணகிரி, மாலை 5 மணி முதல் 6 மணி வரை, அமராவதி லாட்ஜ், போன் 2120.

12 ஆம் தேதி – சேலம், காலை 11.30 மணி முதல் 12.30 மணி வரை, ஹோட்டல் செல்வம், புதிய பஸ் நிலையம் எதிரில். போன் 449333.

12 ஆம் தேதி – ஈரோடு, மாலை 4 மணி முதல் 5 மணி வரை, ஹோட்டல் ஆக்ஸ்போர்டு, பஸ் நிலையம் எதிரில், போன் – 61761.

13 ஆம் தேதி – கோயம்புத்தூர், காலை 9.30 மணி முதல் 12.30 மணி வரை, சேரன் பேலஸ் லாட்ஜ், (சாந்தி தியேட்டர் பின்புறம்). போன் – 210265, 216691.

14 ஆம் தேதி – மதுரை, காலை 9.30 மணி முதல் 11.00 மணி வரை, ஹோட்டல் கிரான்ட்ஸ் சென்ட்ரல், மேலப்பெருமாள் மேஸ்திரி தெரு, (தங்கம் தியேட்டர் அருகில்). போன் – 36311.

14 ஆம் தேதி – தஞ்சாவூர் – மாலை 5 மணி முதல் 6 மணி வரை, அசோகா லாட்ஜ், போன் – 20021.

15 ஆம் தேதி – திருச்சி, காலை 9.30 மணி முதல் 11 மணி வரை, ஹோட்டல் ஆனந்தா, (சென்ட்ரல் பஸ் நிலையம் அருகில்), போன் – 40545.

15 ஆம் தேதி – நாமக்கல், பிற்பகல் 2.30 மணி முதல் 3.30 மணி வரை, ஹோட்டல் தேவி அன்னபூர்ணா, போன் – 21336.

18 ஆம் தேதி – ஆம்பூர், காலை 10 மணி முதல் 11 மணி வரை, சம்பங்கி லாட்ஜ், போன் – 43311.

18 ஆம் தேதி – காஞ்சிபுரம் மாலை 4 மணி முதல் 5 மணி வரை, ராஜம் லாட்ஜ், (பஸ் நிலையம் அருகில்) 9, காமராஜர் தெரு.

25 ஆம் தேதி முதல் 30 ஆம் தேதி வரை, திருப்பத்தூர் வீட்டு முகவரியில் முன்னதாக போன் (போன் – 20469) செய்து உறுதிப்படுத்திக் கொண்டு வரவும்.

# நீரிழிவு நோய்க்கு மூலிகை மருந்து!

சர்க்கரை வியாதி எனப்படும் நீரிழிவு நோயைக் குணப்படுத்த முடியாது என்று பலர் கூறும் போது, அதைக் குணப்படுத்த இயலும் என்று டாக்டர் C.K. மாணிக்கவாசகம் கூறுகிறார். இது பற்றி மேலும் விவரங்களை அறிய டாக்டர் மாணிக்கவாசகம் மற்றும் டாக்டர் C.K.M. சபாபதி ஆகியோரை, புரசைவாக்கம் 89/14, வெள்ளாளத் தெருவில் இருக்கும் மூலிகை சிகிச்சை இலவச வைத்திய ஆலோசனை நிலையத்தில் சந்தித்துக் கேட்டோம்.

**நீரிழிவு நோய் எப்படி உண்டாகிறது? இந்நோயாளிகள் எந்தெந்த உணவுகளைத் தவிர்க்க வேண்டும்?**

நீரிழிவு என்பது கணையத்தில் இருந்து இன்சுலின் சுரக்காததினால் உண்டாவதாகும். இன்சுலின் சுரப்பது குறைவதற்கான காரணம் என்னவென்றால் நாம் உண்ணும் உணவிலிருந்து இரத்தத்தின் மூலமாக கணையத்திற்குக் கொண்டு செல்லப்பட்ட சக்திகளே இன்சுலினாக மாற்றப்பட்டு வெளியாகின்றது. இரத்தமானது சக்தியைக் கணையத்திற்குக் கொண்டு செல்லவும், உற்பத்தியான இன்சுலின் வெளியேறவும் இரத்தக் குழாய்களில் எந்தவித அடைப்பும் இருக்கக் கூடாது. இந்தக் குழாய்களில் அடைப்பு ஏற்படுவதற்குக் காரணம் நாம் உண்ணும் உணவுகளில் கொழுப்புப் பொருள்கள், தேவைக்கு அதிகமாக இருப்பதே ஆகும். எனவே இதைத் தடுக்க கொழுப்புச்சத்து நிறைந்த ஆகாரங்களை - குறிப்பாக இறைச்சி - உண்ணுவதைத் தவிர்க்கவேண்டும்.

**மூலிகை மருந்துகளினால் சர்க்கரை நோயை எவ்வாறு குணப்படுத்த முடியும்?**

இரத்த ஓட்டத்தில் தடை ஏற்படுவதே சர்க்கரை வியாதிக்கு மூலகாரணம். உறுப்புகளுக்கு சீரான, தடையற்ற இரத்த ஓட்டம் கிடைக்கவில்லை எனில் உடலின் உறுப்புகளில் கோளாறுகள் ஏற்பட வாய்ப்பு உண்டாகும். மூலிகை மருந்துகளில் இருக்கும் கசப்புச் சுவையினால் உடலில் ஏற்படும் உஷ்ண நிலையினால் கொழுப்புப் பொருள்கள் கரைவதுடன், இரத்த நாளங்கள் விரிவடைவதால் இரத்த ஓட்டம் உடலில் முறையாக அமைய வழி உண்டாகி மீண்டும் இன்சுலின் உற்பத்தி தானாக நடைபெறும்.

**நீரிழிவு நோயாளிகளுக்கு, கணையத்தில் உள்ள செல்கள் இறந்து விட்டதாகக் கூறப்படுவது பற்றி உங்கள் கருத்து என்ன?**

உடலில் உள்ள எந்த ஒரு செல்லும் இறந்து விடுமானால் அது உடனடியாக உடலை விட்டு வெளியேற்றப்பட்டு விடும். இது உலகில் வாழும் எல்லா உயிரினங்களுக்கும் உண்டான பொது விதி. இரத்த ஓட்டத்தில் ஏற்பட்டுள்ள குறைபாட்டினால் முறையான சக்திகளைப் பெறாத கணையத்தின் செல்கள் வலுவிழந்த நிலையில் இருக்க முடியுமே தவிர இறப்பதற்குக் காரணம் இல்லை.

**உடற்பயிற்சிகள் மூலம் கணையத்தினை இயக்க முடியும் என்பது எந்த அளவுக்கு உண்மை?**

நின்ற நிலையில் ஒரு நீரிழிவு நோயாளி கால்களை மடக்காமல் குனிந்து தன் கை விரல்களால் கால்விரல்களைத் தொட்டு நிமிரலாம். இது போல காலை உணவுக்கு முன்பு சுமார் 30 முறையும், இரவு உணவுக்கு முன்பு சுமார் 30 முறையும் செய்து வந்தால் அவரவர்களுடைய பாதிப்புக்குத் தகுந்தாற் போல் 4 முதல் 6 மாதங்களில் நோயின் தன்மை படிப்படியாகக் குறையும்.

**நீரிழிவு நோயாளிகள் பழ உணவு சாப்பிடுவது பற்றிக் கொஞ்சம் தெளிவாகக் கூறுங்கள்.**

பழ உணவுகள் சாப்பிடுவதால் ஏற்கெனவே இரத்தக் குழாய்களில் படிந்துள்ள கொழுப்புப் பொருள்கள் படிப்படியாகக் குறைந்து வரும். இதில் முக்கியமாகக் கவனிக்க வேண்டியது பழ உணவு சாப்பிடும் வேளையில் வேகவைத்த உணவுகளைச் சேர்த்து உண்ணக் கூடாது. சமைத்த உணவு உண்ணும் வேளையில் பச்சைக் காய்கறி, பழ உணவுகளைச் சேர்த்துண்ணக் கூடாது. சமைத்த உணவையும், சமைக்காத இயற்கை உணவையும் கலந்து உட்கொண்டால், இக்கலவை உணவு முறையற்ற, துரித ஜீரணமடைந்து முழுமையான சக்தி உடலுக்குக் கிடைப்பதில்லை. மேலும் பின் விளைவு, பக்க விளைவு ஏற்பட வாய்ப்புள்ளது. ●●

## பித்த வெடிப்பு

பித்த வெடிப்புள்ள இடத்தில் மஞ்சள் தூளுடன் தேங்காய் எண்ணெய் கலந்து பூசி வந்தால் குணமாகும்.

குப்பைமேனி இலையுடன் சிறிது மஞ்சளையும் அரைத்து, காலில் தினமும் பூசி வந்தால் பித்த வெடிப்பு குணமாகும்.

5 நாள்கள் விடாமல் வேப்ப எண்ணெய் தடவினால் பித்த வெடிப்பு மறைந்து விடும்.

## உடல் சூடு தணிய

இரவு படுக்கும் முன் ஒரு கைப்பிடி அளவு வெந்தயத்தை அரை டம்ளர் நீரில் ஊற வைக்கவும். அதிகாலையில் வெறும் வயிற்றில் இந்த நீரைப் பருக வேண்டும்.

## வயிற்றுப் போக்கு – வாந்தி

ஒரு டம்ளர் பாலில் ஓர் எலுமிச்சம் பழத்தைப் பிழிந்து வடிகட்டிச் சாப்பிட்டால் வயிற்றுப் போக்கு நின்றுவிடும்.

## உஷ்ண வயிற்றுப்போக்கு

ஓர் எலுமிச்சம் பழத்தில் பாதிப் பழத்தை ஒரு டம்ளரில் பிழிந்து ஒரு டம்ளர் தண்ணீர் விட்டு சிறிதளவு ஆப்ப சோடாவைக் கலக்கினால் பொங்கிவரும். அதைக் குடிக்க வேண்டும். மூன்று வேளை சாப்பிடவேண்டும்.

## பேதி

பச்சைத் தண்ணீரில் எலுமிச்சம் பழத்தைப் பிழிந்து அடிக்கடி சாப்பிட்டால் பேதி நின்றுவிடும். — ஜி.எஸ்.



டாக்டர் எஸ். ராமமூர்த்தி

# மலர் மருத்துவமனை

சென்னை லயோலா கல்லூரி யில் படிக்கும் ரகுராம்தாஸ் விளையாட்டுத் துறையில் ஆர்வம் மிக்கவர். கிரிக்கெட் வீரர். மார்ச் 27 ஆம் தேதி சந்தோஷமாகக் காரோட்டிக் கொண்டு வந்தவரின் எதிரே மின்னல் வேகத்தில் வந்த வேன் வலப்புறமாக மோதி, உரசி, விலகி, விரைந்து மறைந்தது.

வலப்புறக் கையைக் கதவிற்கு மேல் வெளியே வைத்திருந்ததால் புஜத்தில் இருந்து முழுக் கையும் நசுங்கித் தொங்க – மயக்க மாகிறார் ரகுராம்தாஸ்.

உடனடியாக மருத்துவமனை யில் அனுமதிக்கப்படுகிறார். மூன்று மருத்துவர்களின் தீவிர அவசர சிகிச்சை தொடங்குகிறது.

தொங்கிய சதையுடன் தொடை யில் இருந்து சில சதைப் பகுதியை எடுத்து இணைக்கிறார்கள். இரத்த ஓட்டம் கைக்குச் சீராகக் கிடைக்க, தொடையில் இருக்கும் இரத்த நாளத்தைக் கையில் இணைக்கி றார்கள். முறிந்த எலும்புகளை ஒன்று சேர்க்கிறார்கள். தற்போது கை சீராக இயங்க இரும்புச் சட்டங்களை அமைத்து ஏறக் குறைய குணமாக்கியும் விட்டவர்கள் 'மலர் மருத்துவமனை' மருத்து வர்கள்.

603 ஆம் எண் அறையில் இளை ஞர் ரகுராம்தாஸைச் சந்தித்தோம். "மலர் மருத்துவமனையின் மேல் எனக்கிருந்த நம்பிக்கை வீண் போகவில்லை. கையே போய் விட்ட நிலையில் வந்த எனக்கு மறு கையைக் கொடுத்து குணமாக்கும் மலர் மருத்துவமனைக் குழுவை என் வாழ்வில் மறக்க முடியாது. பணியாளர்களின் அன்பான உப சரிப்பு என்னை நெகிழ வைக் கிறது" என்றார்.

"இந்த சிகிச்சைக்கு மைக்ரோ சர்ஜரி மிகவும் பயன்பட்டிருக் கிறது" என்கிறார் மலர் மருத்துவ மனையின் தலைவரும், நிர்வாக இயக்குநருமான டாக்டர் எஸ். ராமமூர்த்தி.

மைக்ரோ சர்ஜரி சிகிச்சையில் இன்று முன்னணியில் நிற்கிறது மலர் மருத்துவமனை. கண், மூளை சம்பந்தான நோய்களைத் துல்லியமாகக் குணமாக்கும் மைக்ரோ சர்ஜரி, பிளாஸ்டிக் சர்ஜ ரிக்கும் உபயோகமாக உள்ளது.

மைக்ரோ சர்ஜரியுடன் இருதய அறுவை சிகிச்சை, மாற்று சிறுநீரக சிகிச்சை, தலைக்குள் நடக்கும் அறுவை சிகிச்சைகளுக்கும் மலர் மருத்துவமனையின் பணி சிறந்து விளங்குகிறது. எல்லாவிதமான வியாதிகளும் விரைவில் குண மாக்கப்பட்டு பூரண திருப்தியுடன் திரும்புகிறார்கள் நோயாளிகள்.

28 கோடி ரூபாய் மூலதனத் தில், வெளிநாட்டில் கிடைக்கிற மருத்துவ வசதிகள் கொண்டதாக, 250 படுக்கை வசதிகளுடன் விளங் கும் மலர் மருத்துவமனையில் ஸ்பெஷலிஸ்ட் டாக்டர்களுடன் சேர்த்து 400 ஊழியர்கள் பணி யாற்றுகிறார்கள்.

சென்னை அபிராமபுரத்தில் சிறியதொரு பாலி கிளினிக்காக ஆரம்பிக்கப்பட்டு, மக்கள் டாக்டர் எஸ். ராமமூர்த்தி மேல் கொண்ட அன்பான நம்பிக்கையால் வளர்ந்து, இன்று அடையாறு திரு.வி.க. பாலத்தின் தெற்கு முனையில் கம்பீரமாய் எல்லாவித நோய்களையும் பரிபூரணமாகக் குணமாக்கும் மருத்துவமனையாகத் திகழ்கிறது.

"வசதி படைத்த மக்கள் வெளிநாட்டுக்குப் போய் மருத்துவ சிகிச்சை செய்து கொண்ட காலம் போய் இன்று இந்தியாவிலேயே சிகிச்சை செய்து கொள்ளத் தொடங்கியதற்குக் காரணம், இந்திய மருத்துவர்கள் மேல் கொண்ட நம்பிக்கையும் தரமும் தான். இந்தத் தரத்தை நோயாளிகளுக்கு முழுமையாகத் தந்து நோயை விரைவில் குணமாக்குகிறோம்" என்ற டாக்டர் எஸ். ராமமூர்த்திக்கு மூன்று மகள்கள். ரதி மலர், மதி மலர், திவ்ய மலர். இவர்களின் பெயர்களுக்குப் பின்னால் இருக்கும் மலரையே தன் மருத்துவமனைக்குப் பெயராகச் சூட்டியுள்ள டாக்டர் எஸ். ராமமூர்த்தி, காரைக்குடிக்குப் பக்கத்திலுள்ள பதரக்குடி கிராமத்தைச் சேர்ந்தவர்.

துணைவியார் திருமதி நித்யா ராமமூர்த்தியும் மகப்பேறு மருத்துவ நிபுணராக மலர் மருத்துவமனையிலேயே பணியாற்றுகிறார்.

சென்னை - செங்கல்பட்டு நெடுஞ்சாலையில் நந்திவரத்தில் 'ரவுண்டு டேபிள் 42' உடன் சேர்ந்து நடத்தும் மருத்துவ மையத்தில் இதுவரை விபத்துகளில் பாதிக்கப்பட்ட 1000 பேருக்கு மேற்பட்டவர்கள் இலவசமாக மருத்து உதவி பெற்றுப் பயன் அடைந்திருக்கிறார்கள். மேலும் தமிழ்நாட்டின் முக்கிய நகரங்களில் இதுபோன்று மருத்துவ மையங்கள் அமைத்து மக்களுக்குச் சேவை செய்ய வேண்டும் என்பது டாக்டர் எஸ். ராமமூர்த்தியின் அடுத்த திட்டம்.

தொடங்கப்பட்ட இரண்டு வருடங்களிலேயே மக்களின் அன்பான ஆதரவால் தன் சேவையை வளர்த்துக் கொண்டே இருக்கும் மலர் மருத்துவமனை எதிர்காலத்தில் இந்தியாவின் மிகச் சிறந்த மருத்துவமனையாகத் திகழும் என்பது திண்ணம். ○○

# காந்த சிகிச்சை




## காந்த சிகிச்சை

இன்று பரவலாகப் பேசப்பட்டு வரும் 'காந்த சிகிச்சை முறை' பற்றி அத்துறையில் முன்னணி டாக்டராகத் திகழும் திரு M.G. அண்ணாதுரை அவர்களைச் சந்தித்தோம். அவர் இது பற்றி விளக்கினார்:

சிகிச்சை முறை பல இருப்பினும் அவற்றுள் காந்த சிகிச்சை முறையானது எளியோர் யாவரும் பயன்பெறும் அளவு சிறப்பான ஒன்றாகும். ஒருமுறை வாங்கப்படும் சிகிச்சைக் கருவியானது பல ஆண்டுகளுக்கு குடும்பத்தில் உள்ள அனைவருக்கும் பயன்படுவதால் சாதாரணமாக மருந்துகளுக்காக ஏற்படும் செலவினங்கள் குறைக்கப்படுவதோடு, பல பின் விளைவான நோய்களில் இருந்தும் காப்பாற்றப்படுகின்றனர். இச்சிறப்பான சிகிச்சை முறையை உலகின் முன்னணி நாடுகளான ரஷ்யா, அமெரிக்கா, ஜெர்மனி, சைனா, பிரான்ஸ், ஜப்பான் நாடுகள் மிகவும் சிறப்பான எளிய முறை என அங்கீகரித்துள்ளன. மற்ற முறைகளான ஹோமியோபதி, சித்த ஆயுர்வேத மருத்துவ முறைகளுடன் இச்சிகிச்சை முறையை இணைத்தோ தனியாகவோ செய்து கொள்ளலாம். இருபது ஆண்டுகளாக மாற்றுமுறை மருத்துவத்தில் நல்ல தேர்ச்சியுடன் சிகிச்சை அளித்துவந்த எனக்கு காந்த சிகிச்சைமுறை மிக எளிதாகவும் நிரந்தரமாகவும் பயன்படுவது கண்டு வியப்புற்றேன்.

இச்சிகிச்சை முறையில் சிறப்பான தேர்ச்சி பெற்ற எனது நண்பர் Dr. N.S. சீனுவாசன் அவர்கள் எனக்கு இச்சிகிச்சை முறை பற்றி முதலில் தெரிவித்தார்கள். இந்த எளிய காந்த சிகிச்சை முறையை நோயாளிகள் பலருக்குப் பயன்படுத்தியதில் சுமார் எண்பது சதவிகித நோய்களைக் குணப்படுத்தலாம் என அனுபவங்கள் எனக்கு நம்பிக்கை ஊட்டின. திடீரென்று ஏற்படும் நோய்களிலும், அடிபட்ட வலிகள், தீக்காயங்கள் முதலியவற்றிலும் சில நிமிடங்களில் பயன் அளிப்பது விந்தைக்குரிய விஷயமாகும். தமிழகத்தில் இச்சிகிச்சை அளிக்கும் டாக்டர்கள் ஆயிரக்கணக்கில் இருப்பினும், இக்கருவிகளை அண்டை மாநிலங்களில் இருந்து வாங்க மாதக் கணக்கில் காத்திருக்க வேண்டியதும், அதிகப்படியான தபால் செலவும், தவறாக மாற்றி அனுப்பப்படும் கருவிகளுக்காக பலமுறை கடிதம் எழுதினாலும், சரியான பதில் கிடைக்காமையும், ஏன் பல விஷயங்களில் முன்னணியில் இருக்கும் தமிழ்நாட்டவர்க்கு இக் கருவியைச் செய்து அளிக்கமுடியாதா என என்னுள் எழுந்த கேள்விதான் பல கடின முயற்சியுடன் இக்கருவிகளை உருவாக்கித் தர முடிந்தது" என்று மகிழ்ச்சியுடன் தெரிவித்தார்.

— C. சுரேஷ்குமார்

# பி.ஆர். மருத்துவமனை ஆராய்ச்சி மையம்



அறுவை சிகிச்சை மருத்துவ முறையில் தற்போது கடைப் பிடிக்கத் தொடங்கியுள்ள நவீன அறுவை சிகிச்சை முறை, 'லேப்ராஸ்கோப்பிக் சர்ஜரி!'

சமீப காலம் வரை வயிற்றில் அறுவை சிகிச்சை செய்ய வேண்டு மென்றால் ஆறு முதல் பன்னி ரண்டு அங்குலம் வரை வயிற்றைக் கிழித்து அறுவை சிகிச்சை செய்து அதற்கு 12 முதல் 25 தையல்கள் வரை போட்டுத் தைத்து வந்த வர்கள், வயிற்றில் சிறு துவாரத் தின் மூலம் லேப்ராஸ்கோப்பிக் உபகரணங்களைச் செலுத்தி கேமிரா மூலமாக டெலிவிஷனில் உடலின் உள் பாகங்களைப் பார்த்துக் கொண்டே அறுவை சிகிச்சை செய்கிறார்கள்.

"சென்னையில் நான்கைந்து மருத்துவமனைகளில் மட்டுமே இந்த லேப்ராஸ்கோப்பிக் சர்ஜரி செய்யப்படுகிறது. அவற்றில் மிகக் குறைந்த செலவில் செய்வது நாங்கள்தான்" என்கிறார் பி.ஆர். மருத்துவமனையின் நிர்வாக இயக்குநர் டாக்டர் சி. நடேசன்.

"லேப்ராஸ்கோப்பிக் சர்ஜரி செய்ய நிறையச் செலவாகிறது என்கிற கருத்து பொதுமக்களிடம் பரவலாக உள்ளதே?"

"பித்தப்பையில் ஓர் அறுவை சிகிச்சை செய்ய வேண்டும் என்றால் மார்பிலிருந்து வயிறு வரை சுமார் 8 அங்குல நீளத்திற்கு அறுத்து, லீவருக்கு அடியில் இருக்கும் பித்தப்பையைக் கண்டு பிடித்து அறுவை சிகிச்சை செய்யப் பல மணி நேரங்கள் பிடிக்கும்.

லேப்ராஸ்கோப்பிக் சர்ஜரிக்கு 2 மணி நேரம் போதுமானது. மேலும் சாதாரண அறுவை சிகிச்சை செய்து கொண்ட நோயாளி குறைந்தது பதினைந்து நாள்களுக்குப் படுக்கையில் இருக்க வேண்டியது அவசிய மாகிறது. லேப்ராஸ்கோப்பிக் சர்ஜரி செய்து கொண்டவர் மூன்று நாள்களில் வீட்டிற்குப் போய்விட லாம். இப்படிப் பார்க்கிறபோது பதினைந்து நாள்களுக்கான மருத் துவச் செலவு, படுக்கைக்கான செலவு, பிற செலவுகளுடன் நேர மும் பெரிதும் வீணாகிறது.

லேப்ராஸ்கோப்பிக் சர்ஜரியில் இதெல்லாம் தேவையில்லாமல் போவதால், மற்ற செலவுகளோடு ஒப்பிட்டுப் பார்க்கும்போது லேப்ராஸ்கோப்பிக் சர்ஜரிக்கு ஆகும் செலவு மிகக் குறைவே".

"இதற்கு மக்களிடம் வரவேற்பு எப்படி?"

"முக்கியமாக பெண்களிடம் அதிக வரவேற்புள்ளது. காரணம், இந்த சர்ஜரியில் தழும்பே இருக்காது. குணமாகி வீட் டிற்குச் சென்ற பின்பும் மாடி ஏறாமல், பளு தூக்காமல் சில மாதங்களுக்கு அல்லாட வேண் டியதில்லை. பித்தப்பைக் கோளாறுகள், குடல்வால் நோய் (அப்பெண்டிசிடிஸ்), குடல் இறக்கம் (ஹிரண்யா), அல்சர், குடல் புற்று நோய், கர்ப்பப்பைக் கோளாறுகள் போன்ற எந்த நோயாக இருந்தாலும் இம்முறை யில் எளிதில் குணப்படுத்தலாம்" என்ற டாக்டர் சி. நடேசனின் துணைவியார் திருமதி வசந்தி நடேசன் மகப்பேறு மருத்துவத் தில் வல்லுநர்.

கர்ப்பப்பைக் கோளாறுகள், குழந்தைப் பேறு, பிரசவம் சம் பந்தப்பட்ட எல்லா விதமான நோய்களையும் பி.ஆர். மருத்துவ மனையில் குணமாக்குகிறார் டாக்டர் வசந்தி நடேசன்.

27.4.90 அன்று தொடங்கப் பட்ட பி.ஆர். மருத்துவமனை சென்னை, தி.நகர் பேருந்து




பி.ஆர். மருத்துவமனை

நிலையத்திலிருந்து போகும் மேட்லி சாலையில் புதிதாகக் கட்டப்பட்டுக் கொண்டிருக்கும் சுரங்கப் பாதைக்கு இடப்புறமாக மிக ஆரோக்கியமாகச் செயல்பட்டுக் கொண்டிருக்கிறது.

81 படுக்கைகள், 79 பணியாளர்கள், 24 மணி நேரமும் இயங்கும் மெடிக்கல் ஷாப், லேப், ஆம்புலன்ஸ், நடமாடும் எக்ஸ்-ரே வசதி கொண்ட வேன், உடற்பயிற்சிக் கூடம், யோகா மையம் போன்ற சகல வசதிகளுடன் உள்ள பி.ஆர். மருத்துவமனையில் மனித நேயமிக்கவராக நோயாளிகளுடன் பழகுகிறார் டாக்டர் சி. நடேசன்.

நோயாளிகளின் குடும்பத்தில் ஒருவராகி அவர்களுக்கு சிகிச்சையளித்து குறுகிய காலத்தில் நோயைப் பூரண குணமாக்கிவிடும் வல்லமை கொண்ட டாக்டர் சி. நடேசன் மருத்துவமனையை ஒரு கோயிலாகவே போற்றுகிறார்.

எல்லா விதமான நோயையும் குணமாக்கும் சிறந்த சிகிச்சையும், சிகிச்சை முறைகளுக்கான உபகரணங்களும் பி.ஆர். மருத்துவமனையில் இருக்கின்றன. நோய் தொடர்பான எல்லா ஸ்பெஷலிஸ்ட் மருத்துவர்களும் தினமும் விஜயம் செய்கிறார்கள்.

'வேதனைக்கு ஓர் அரவணைப்பு' என்கிற தாரக மந்திரத்தைத் தன்னுள் வைத்துக் கொண்டிருக்கும் பி.ஆர். மருத்துவமனையில் ஏழை மக்கள் பலர் இலவச வைத்தியம் பெற்று பி.ஆர். மருத்துவமனையை மனதார வாழ்த்த - குறைந்த செலவில் நோயைப் பூரண குணமாக்கும் பணியைச் சந்தடியில்லாமல் செய்து கொண்டிருக்கின்றனர் டாக்டர் சி. நடேசனும், திருமதி வசந்தி நடேசனும். ஃ

## உயரமாக வளர ஓர் எளிய வழி

குள்ளமாக இருக்கிறவர்கள் உயரமாக வளரவே முடியாதா?

முடியும். எப்படி?

'பகவதி' என்ற அந்த இளம் பெண்ணிற்கு இருபது வயதிருக்கும். ஆனால் மூன்றடிக்கு மேல் வளரவே இல்லை. அவர்கள் வீட்டில் பகவதியைத் தவிர மற்ற எல்லாரும் சாதாரண உயரத்தோடு நன்றாகவே வளர்ந்து காணப்பட்டார்கள். இது பகவதிக்கு வெறுப்பையும் வேதனையையும் தந்தது.

இனியும் உயிர் வாழ்வதில் பயனில்லை என்று நினைத்து, பப்பாளிப் பழத்தோடு இன்னும் என்ன என்ன விஷச் செடிகள் உண்டோ அவை எல்லாவற்றையும் கலந்து சாப்பிட்டாள்.

என்ன ஆச்சரியம்! பகவதி மரணமடையவில்லை. ஆனால் அவள் உடலில் புகுந்த பப்பாளிப் பழமும் மற்ற செடிகளும் என்னவோ ஒரு ரசாயனக் கலவையை உண்டாக்கியிருக்க வேண்டும். தனக்குத்தானே ஆச்சரியமும் வெறுப்பும் அடைந்த பகவதி - மறுபடியும் அதே மாதிரி சாப்பிட்டாள். இந்தத் தடவையாவது உயிர்போகட்டும் என்றெண்ணி. ஆனால், செமி மயக்கம் அடைந்தாள். உடனே அவள் ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டாள். வீட்டிற்கு வந்தாள். பத்து நாள் ஆயிற்று. பகவதி இப்பொழுது வளர்ந்து வருவது தெரிந்தது! அவளுக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை. இம்முறை வெறும் பப்பாளிப்பழத்தை மாத்திரம் சாப்பிட்டுப் பார்ப்போமே என்ற அசட்டுத் தைரியத்தில் தினமும் ஒரு பப்பாளிப்பழத்தை மாத்திரம் சாப்பிட்டு வந்தாள். ஐந்தாண்டில் பகவதி மற்ற சகோதர - சகோதரன் போல வளர்ந்து விட்டாள். விளையாட்டிற்காகச் செய்தது விளையாயிற்று என்பார்கள். பகவதி விஷயத்தில் வினையாகச் செய்ய நினைத்தது வாழ்க்கையை மலர வைத்தது.

பகவதியின் இந்த அற்புத சம்பவம் கேரளப் பத்திரிகைகளில் வந்தவுடன் எல்லா டாக்டர்களும் பப்பாளிப்பழத்தை ஆராய்ந்து பார்த்தபொழுது - பப்பாளிப் பழத்தை தினமும் இரண்டு துண்டுகள் சாப்பிட்டு வந்தாலே போதும். உடலில் எலும்பும், தசை



யும், நரம்பும் வளர்ச்சி அடைவதோடு, இரத்தத்தையும் சுத்தப்படுத்தும் என்பது கண்டுபிடிக்கப்பட்டது.

## பூண்டின் மகிமை

தினசரி வாழ்க்கையில் பூண்டிற்கென்று ஒரு சிறப்பிடம் உண்டு.

பூண்டைப் பாலில் வேக வைத்து, பின்னர் அதில் தேனைக் கலந்து தினசரி சாப்பிட்டு வந்தால் அவர்களுக்கு மூச்சு சம்பந்தமான எந்த நோயும் ஏற்படாது.

கர்ப்பிணிகளுக்கு பிரசவ காலத்தில் பூண்டு மிகவும் அவசியம். தாய்ப்பால் சுரக்கவும், உடல் ஆரோக்கியத்தைச் சீர்படுத்தவும் தினசரி பசும்பாலில் கொஞ்சம் பூண்டையும் சேர்த்துக் காய்ச்சி மூன்று வேளையும் குடித்து வந்தால் சுகப்பிரசவம் ஆகும். பிறக்கின்ற குழந்தையும் நல்ல ஆரோக்கியத்துடனும் எந்த வித இதயநோய் இல்லாமலும் குறிப்பாக, நீர் சம்பந்தமாக எந்த நோய் வராமலும் இருக்கும்.

புதுமணத் தம்பதிகளுக்குப் பூண்டு மிக நல்லது. தினமும் பூண்டைச் சமையலில் சேர்ப்பது நல்லது. தாம்பத்திய வாழ்க்கையில் சோர்வு இல்லாமல் இருக்கவும், வீரியம் குறையாமல் காக்கவும் உதவும்.

பொதுவாக பூண்டு சம்பந்தமான எந்த உணவைச் சாப்பிட்டாலும், அவர்களுக்கு ரத்த சம்பந்தமான எந்த நோய்களும் மூச்சுத் திணறலும் நெருங்காது.

—த.கி.இராமசாமி



டாக்டர் சூர்யகலா ஸ்ரீகுமார்

# வலி இல்லாத பிரசவம் – சூர்யா மருத்துவமனையில்

'பிரசவ வலியைவிட வேதனை யான வலி உலகில் வேறு இல்லை' என்ற வாசகம் சென்னை, சாலி கிராமம், அருணாசலம் சாலை யின் தொடக்கத்திலுள்ள 'சூர்யா மருத்துவமனை'யில் பொய்யாக்கப் பட்டுக் கொண்டிருக்கிறது.

சூர்யா மருத்துவமனையின் மருத்துவ நிர்வாகி டாக்டர் சூர்ய கலா ஸ்ரீகுமார் அவர்களால் 'வலியில்லாத குழந்தைப் பேறு' நாள் தவறாது நடக்கும் நிகழ்ச்சி யாகிவிட்டது.

எப்படி?

டாக்டர் சூர்யகலா ஸ்ரீகுமாரைச் சந்தித்துக் கேட்டோம்.

"மேலை நாடுகளில் இது சர்வ சாதாரண நிகழ்ச்சியே. இந்தியா வில் சென்னையில் எங்கள் மருத்துவமனையில்தான் முதல் முதலாக 'வலியில்லாத குழந் தைப் பேறு' முறையை கடைப் பிடிக்கத் தொடங்கினோம். இதற்கு ஏகப்பட்ட வரவேற்பு. பெண்ணுக்குப் பிரசவ காலம் தொடங்கியதும் உணவு முறைக் கட்டுப்பாடு, நடத்தல், சிறு சிறு உடற்பயிற்சி முறைகளைச் சொல்லித் தருகிறோம். பயிற்சி முறைகளை அவர்கள் கடைப் பிடிக்காவிட்டாலும் பரவாயில்லை. பிரசவத்தின்போது வலியில்லாத குழந்தைப் பேறுக்கு வழி வகுக் கிறோம்".

"இதனால் பின் விளைவு எதுவும் ஏற்படுமா?

"ஏற்படாது. நோயாளி சந் தோஷமாக இருப்பதுடன் குழந்தை யும் நல்ல திடகாத்திரமாக, புத்தி சாலித்தனமாக இருக்கும்" என்ற டாக்டர் சூர்யகலா, பெண்கள் சம்பந்தப்பட்ட எல்லா நோய்களை யும் குணமாக்குவதில் நிபுணர்.

பிறந்த கிராமத்தில் படிக்கிற போது பெண்கள் படும் தொல்லை களைப் பார்த்து வேதனையடைந் தவர், மருத்துவராகி, பெண் களுக்கு வரும் சகல நோய்களை யும் பூரணமாக குணமாக்க வேண்டும் என்ற வெறியோடு படித்து முடித்து நினைத்ததைச் செயல்படுத்திக் கொண்டிருக்கி றார்.

மனசாட்சியோடு பணியாற்றுவ தாகச் சொல்லும் டாக்டர் சூர்ய கலா பணத்தைப் பெரிதாக நினைப்பதில்லை. மலட்டுத் தன் மையை நீக்கி பிள்ளைப் பேற்றை உருவாக்குவதில் வெற்றி கண் டிருப்பவர், விரைவில் டெஸ்ட் ட்யூப் பேபி முறையை, குறைந்த செலவில் சூர்யா மருத்துவமனை யில் அரங்கேற்றப் போகிறாராம்.

"இந்தியப் பெண்கள் தங்கள் உடல்நலம் பற்றிக் கொஞ்சமும் கவலைப்படுவதில்லை. நோய்

முற்றிக் கீழே விழுந்த பிறகுதான் மருத்துவமனைக்கு வருகிறார்கள்.

வெள்ளைபடுதல், உடலுறவின் போது இரத்தம் கசிதல், மாதவிலக்கு காலங்களில் இரத்தப் போக்கு அதிகமாக இருத்தல் ஆகியன எல்லாம் பல வியாதிகளின் தொடக்கநிலை அறிகுறிகள்.

கல்யாணம் முடிந்த பிறகு ஒருமுறை பெண்கள் தங்களைச் செக்கப் செய்து கொள்வது அவசியம். இதற்கு நூறு ரூபாய் மட்டுமே செலவாகும். இதனால் பலவித நோய்களை முன்கூட்டியே தவிர்க்க முடியும்.

கர்ப்பப்பைக்குள் இரண்டு பிரிவுகள். பாடி ஆஃப் யூட்ரஸ், மவுத் ஆஃப் யூட்ரஸ். மவுத் ஆஃப் யூட்ரஸ் எனும் கர்ப்பப்பை வாசல் பகுதியில் நோய் தாக்கும் அபாயங்கள் அதிகம். அந்தப் பகுதியில் உள்ள நீரை எடுத்து, பரிசோதித்து என்ன நோய் இருக்கிறது என்பதைக் கண்டுபிடிக்கலாம்.

இதனால் நோயே இல்லாமல் இருக்கிறோம் என்ற மகிழ்ச்சி கிடைப்பதுடன், தொடக்க நிலையிலிருக்கும் நோயையும் விரைவில் குணப்படுத்தி விடலாம்.

இந்தியப் பெண்களில், குறிப்பாக தமிழ்நாட்டு பெண்களுக்குக் கர்ப்பப்பைப் புற்று நோய் அதிகமாக வருகிறது. ஆரம்ப நிலையில் இதைக் கண்டுபிடித்து சிகிச்சை அளித்தால் எந்த பாதிப்பும் ஏற்படாது.

பரிசோதனையில் கர்ப்பப் பையில் புற்றுநோய் வருமா, வராதா? என்று கண்டுபிடித்துவிட முடியும்.

மேலை நாடுகளில் வருடத்திற்கு ஒருமுறை பெண்கள் தங்களைப் பரிசோதித்துக் கொள்கிறார்கள். நம்நாட்டுப் பெண்கள் வருடத்திற்கு ஒருமுறை வேண்டாம்; வாழ்நாளில் ஒருமுறைகூட செய்து கொள்ளத் தயங்குகிறார்கள்".

நவீன லேப்ராஸ்கோப்பிக் சர்ஜரி பயிற்சிக்காகவும் கலியுகத்தில் புரியாத நிலையில் வரும் புதுப்புது கர்ப்பப்பை நோய்களைக் குணமாக்கும் பயிற்சிக்காகவும் ஜூன் மாதம் மேற்கு ஜெர்மனிக்குப் பயணமாகிறார் டாக்டர் சூர்யகலா ஸ்ரீகுமார். ஹைடல்பர்க் பல்கலைக் கழகம் இவரை அழைத்திருக்கிறது.

இவரது கணவர் ஸ்ரீகுமார், எலும்பு அறுவை சிகிச்சை நிபுணராகவும் சூர்யா மருத்துவமனையின் தலைவராகவும் செயல்படுகிறார். 60 படுக்கை வசதிகள் கொண்ட 'சூர்யா'வில் 135 பணியாளர்கள் பணிபுரிகிறார்கள். பார்வையாளர்கள் நேரத்தையும் கடந்து மருத்துவமனை முழுக்க ஜனத்திரள். டாக்டர்களின் நடமாட்டம்.

"இந்த இடம் போதவில்லை. பக்கத்தில் இடம் கேட்டு இருக்கிறோம். விரைவில் மருத்துவமனையை விரிவுபடுத்திவிடத் திட்டம்" என்ற டாக்டர் சூர்யகலா, "ஒரு குழந்தையே போதும் என்று குடும்பக் கட்டுப்பாடு செய்து கொள்ள விரும்பும் தாயுடன் நான் ஒத்துப் போக மாட்டேன். சுற்றுப்புறச் சூழல் கெட்டு வரும் இன்றையச் சூழ்நிலையில் ஒரு குழந்தை, இரண்டு - மூன்று வருடங்களைத் தாக்குப்பிடிக்கவே சிரமமாக உள்ளது. ஆகவே ஐந்து வருடங்களுக்குப் பிறகு குழந்தை நன்கு வளர்ந்த பிறகு அக்குழந்தையின் தாய்க்குக் குடும்பக் கட்டுப்பாடு அறுவை சிகிச்சை செய்கிறோம்" என்றார்.

சுற்று வட்டாரங்களில் தீக்குளித்து, தூக்குப் போட்டு, விஷம் அருந்தி தற்கொலை செய்து கொள்ள நினைப்பவர்களை, சாலை விபத்துகளில் பாதிக்கப்பட்டவர்களைக் காப்பாற்றி வருகிற சூர்யா மருத்துவமனை, அனைத்து வசதிகளையும் பலதரப்பட்ட மருத்துவர்களையும் கொண்டு 24 மணி நேரமும் செயல்படுகிறது.

சூர்யா மருத்துவமனை சிறந்து விளங்க டாக்டர் ஸ்ரீகுமாரின் நிர்வாகத் திறமையும் ஒரு காரணம். ○○

## மஞ்சள் காமாலையா?

### மஞ்சள் காமாலை நோயாளிகள் என்ன சாப்பிடலாம்?

எளிதாக ஜீரணமாகிற உணவு, பானங்களை அவர்கள் சாப்பிடலாம். பழரசங்களில் சர்க்கரைக்கு பதிலாக தேனைக் கலந்து குடிக்கலாம். கீரைவகைகளை நன்றாக மசித்து, தேவையான அளவு உப்பிட்டுச் சாப்பிடலாம்.

இளநீர், வெண்ணெய் எடுத்துக் கடைந்த மோர் இவற்றை அடிக்கடி குடிப்பது நல்லது.

எண்ணெய் கலக்காத, கொழுப்புச் சத்து சிறிதும் இராத இட்லி, இடியாப்பம் போன்ற உணவு வகைகளைச் சாப்பிடலாம்.

பயத்தம் பருப்புக் கஞ்சி, காய்கறிகளில் செய்த சூப் ஆகியவையும் நல்லது. எதைச் சாப்பிட்டாலும் வயிறு நிறைய உண்பது கூடாது. இவை அனைத்திற்கும் மேலாக, மஞ்சள் காமாலை (ஜாண்டிஸ்)க்கு சிறந்த மருந்து நல்ல ஓய்வுதான்!

### என்னென்ன விஷயங்களில் கவனமாக இருக்க வேண்டும்?

1. பெண்களானால் மாதவிலக்குக் காலங்களில் மிகவும் சுத்தமாக இருக்க வேண்டும்.

2. நன்றாகக் காய்ச்சி ஆறிய நீரை வடிகட்டிப் பருக வேண்டும்.

3. காமாலை நோய் உள்ளவர்கள் பயன்படுத்தும் பொருள்களைப் பிறர் பயன்படுத்தக் கூடாது.

4. யாருக்கும் இரத்த தானம் செய்யக்கூடாது.

5. உடம்பில் ஏதாவது சிறு வெட்டுக்காயங்கள் இருந்தால்கூட உடனடியாகக் கவனிக்க வேண்டும்.

6. கழிப்பறைக்குச் சென்று வந்தவுடன் கைகளையும் கால்களையும் சோப்புப் போட்டுத் தேய்த்துக் கழுவிக் கொள்ள வேண்டும்.

—'ஜீயார்'

# இந்தியாவின் பெருமை 'இம்ப்காப்ஸ்' நிறுவனம்

இந்திய மருத்துவமுறை என்றாலே நினைவில் வருவது 'இம்ப்காப்ஸ்'. 1944இல் இந்திய மருத்துவ முறையின் முன்னோடியான காப்டன் ஸ்ரீனிவாசமூர்த்தி அவர்களால் சில மருத்துவ நண்பர்களின் ஒத்துழைப்புடன் தொடங்கப்பட்டது இந்நிறுவனம். சித்தா, ஆயுர்வேதம், யூனானி முறைகளைச் சார்ந்த மருத்துவர்களுக்கு, அம் மருந்துகள் கிடைக்கச் செய்யவும், அம்முறைகளில் பொது மக்களின் ஆர்வத்தை வளர்த்திடவும் முனைந்த இந் நிறுவனத்தின் தொடக்க நிலையில் ஐந்தே ரூபாய் கட்டணம் செலுத்திச் சேர்ந்த 250 மருத்துவர்கள் உறுப்பினர்களாக இருந்தனர். இவர்களின் மனஉறுதியும், அரசு வணிகர்கள் - மக்கள் ஆகிய முத்தரப்பினரின் நம்பிக்கையும் இந் நிறுவனத்தின் வளர்ச்சிக்கு உரமாகியது.

இந்தியா முழுவதும் பரவியுள்ள சுமார் 11000 சித்த, ஆயுர்வேத, யூனானி முறைகளைச் சார்ந்த பரம்பரையான மற்றும் பட்டம்பெற்ற மருத்துவர்களை உறுப்பினர்களாகக் கொண்டு (தற்போது கட்டணம் 250 ரூபாய்) இன்று மாபெரும் நிலையை அடைந்துள்ளது. மேற்கூறிய இந்திய முறைகளினாலான மருந்துகளைத் தயாரித்து விற்பனை செய்வதில் கூட்டுறவுத் துறையில் இயங்கும் அரசு சார்ந்த ஒரே நிறுவனம் என்ற தனி முத்திரை கொண்டது 'இம்ப்காப்ஸ்'. அந்த வகையில் சுமார் 700க்கு மேற்பட்ட மருந்துகளை இந் நிறுவனம் தயாரிக்கிறது. இம்முறைகளில் பரம்பரையாக உள்ள மருந்து விதங்களை மட்டுமின்றி, புதிய பலவித மருந்துகளையும் உருவாக்கியுள்ளது இந் நிறுவனம்.



பேராசிரியர் ஜெயப்பிரகாஷ் நாராயணன் எம்.டி., (சித்தா)
'இம்ப்காப்ஸ்' செயலர்

சென்னை நகரில் உள்ள இரு விற்பனை நிலையங்களைத் தவிர, மதுரை, சேலம், கோவை, திருச்சி, தஞ்சை ஆகிய தமிழகத்தின் பிற நகரங்களில் மட்டுமின்றி, அண்டை மாநிலங்களில் உள்ள விஜயவாடா, ஹைதராபாத், விசாகப்பட்டணம், பெங்களூர் போன்ற நகரங்களிலும் இந்நிறுவனத்தின் விற்பனை நிலையங்கள் செயல்பட்டுவருகின்றன. 1993-94 நிதியாண்டில் 4.6 கோடி ரூபாய்க்கான விற்பனை நடைபெற்றுள்ளது. ஆனால் வர்த்தகம் மட்டுமல்ல நோக்கம் என்று தெரிவிப்பதுபோல், எளிய, செலவில் சிறந்த சிகிச்சையை மக்களுக்குத் தரும் வகையில் இந்நிறுவன வளாகத்தில் இயங்கும் புறநோயாளிப் பிரிவில் நாள்தோறும் 50 முதல் 100 நோயாளிகள்வரை பயன்பெற்று வருகிறார்கள். வாதநோய்களைக் குணப்படுத்தவும், தேகப் பொலிவு தரவும் எண்ணெய் தடவி ஒத்தடம் கொடுக்கும் அக சிகிச்சைப் பிரிவும் இங்கு இயங்குகிறது.

1993 ஜூன் மாதத்தில் நாடெங்கிலும் உள்ள மருத்துவ நிபுணர்களைத் திரட்டி 'எய்ட்ஸ் ஒழிப்பில் இந்திய மருத்துவத்தின் பங்கு' பற்றிய மாநாடு ஒன்றினை இந் நிறுவனம் முன் நின்று நடத்தியதைப் பலரும் அறிவர். எய்ட்ஸ் சிகிச்சைக்கென, இந் நிறுவனத்தின் விற்பன்னர்கள் உருவாக்கிய கோட்பாட்டை ஏற்று, அரசு ஒரு குழுவை அமைத்தது. அதன் பரிந்துரைப்படி தயாரிக்கப்பட்ட மருந்துகள் அரசு மருத்துவக் கல்லூரியுடன் இணைந்த பொதுமருத்துவமனையில், ஆய்வு முறையில் பயன்படுத்தப்பட்டு, அந்நோயாளிகளின் நிலையில் முன்னேற்ற அறிகுறிகள் தென்பட்டு வருகின்றன. இது வெற்றி பெறுமாயின், எய்ட்ஸ் சிகிச்சைக்கு இந்திய முறை மருந்தைக் கண்ட தனிச்சிறப்பு இந் நிறுவனத்தைச் சேரும் என்பதில் சந்தேகமில்லை.



டாக்டர் குமாரதாஸ் B.I.I.M.
இம்ப்காப்ஸ் தலைவர்
சட்டமன்ற உறுப்பினர்

இந் நிறுவனத்தின் சீரிய செயல்பாட்டிற்குத் தமிழக சட்டமன்ற உறுப்பினர் டாக்டர் குமாரதாஸ் B.I.I.M. அவர்கள் தலைமையிலான 13 பேர் கொண்ட இயக்குநர் குழுவின் நிர்வாகமும், அவர்களுக்கு உறுதுணையாக அரசின் பிரதிநிதியாக அனுப்பப்பட்டுள்ள பேராசிரியர் டாக்டர் ஜெயப்பிரகாஷ் நாராயணன் எம்.டி. (சித்தா) அவர்களின் பணியும் நல்வழி காட்டுகின்றன.

அண்மையில் இங்கு வருகை தந்த இமாசலப் பிரதேச முதல்வர், இந் நிறுவனத்தின் சேவையால் ஈர்க்கப்பட்டு, இந் நிறுவன வளர்ச்சிக்காக தம் 'முதல்வர் நிதியிலிருந்து' 50,000 ரூபாய் கொடை வழங்கியதுடன், தம் மாநிலத்திலும் இத்தகைய நிறுவனம் ஒன்றினை அமைத்திடும் ஆர்வத்தை வெளியிட்டாராம்.

இந் நிறுவனத்தின் செயல்பாட்டைக் காணவந்த தமிழக அரசின் கூட்டுறவுத் துறை அமைச்சர் திரு. கா.ப. பட்டாபிராமன் அவர்கள், இந் நிறுவனத்தின் தனித்தன்மையை தமிழக முதல்வர் அவர்களின் கவனத்திற்கு எடுத்துச் சென்று ஆவன செய்வதாகக் கூறி உற்சாகப்படுத்தியுள்ளாராம்.

இந்திய முறை மருத்துவத்திற்கென உயரிய பாடத்திட்டத்துடன் ஒரு கல்லூரியைத் தொடங்குவது இம்ப்காப்ஸ் நிறுவனத்தின் எதிர்காலத் திட்டம் என்று தெரிகிறது.

—— கி. அசோகன்

# மௌனமாகப் பணிபுரியும் மவுண்ட் மேட்டூர் மருந்து நிறுவனம்





1940ஆம் ஆண்டு வாக்கில் மவுண்ட் பார்மசி கணேசன் என்ற பிரபல தொழிலதிபரால் ஒரு தனியார் நிறுவனமாகத் தொடங்கப்பட்ட 'மவுண்ட் மேட்டூர் பார்மசூடிகல்ஸ் லிமிடெட்'., 1965ஆம் ஆண்டில் பொது நிறுவனமாக மாறியது. உயிர்காக்கும் 'ட்ரிப்ஸ்' முறையில் செலுத்தத்தக்க மருந்துகளைத் தயாரிக்கத் தொடங்கிய இந்நிறுவனம், காலப்போக்கில் மாத்திரைகள், குமிழ்மருந்துகள் (காப்ஸ்யூல்) உட்கொள்ளக்கூடிய திரவமருந்துகள் (சிரப் போன்றவை), பூசுமருந்துகள் (ஆயின்ட்மென்ட்), ஊசி மருந்துகள், கண் மருந்துகள், தனிப்பட்ட உபயோகத்திற்கான திரவக் கரைசல்கள் ஆகியவற்றையும் தயாரிக்கலாயிற்று. பல முன்னேற்ற நடவடிக்கைகளை அண்மைக் காலத்தில் இந் நிறுவனம் மேற்கொண்டுள்ளது.

'பாலிப்ரொபைலின்' குப்பிகளை, கண்ணாடி பாட்டில்களுக்குப் பதிலாகப் பயன்படுத்துவதன் சிறப்பை உணர்ந்து அதற்கென்றே புதிய தொழிற்சாலை ஒன்றை சென்னை அருகே கும்மிடிபூண்டியில் அமைத்திருக்கிறது. இந் நிறுவனம். சென்னை (திருவான்மியூர்) யிலும், போபாலிலும் ஏற்கெனவே இரு தொழிற்சாலைகள் இயங்கி வருகின்றன. சிப்காட் ஒத்துழைப்புடன் உருவான புதிய தொழிற்சாலையில், ஒரே இயந்திரத்தின் உதவியால் குப்பிகள் வடிவமைக்கப்பட்டு, மருந்து நிரப்பப்பட்டு, அடைக்கப்படுவது (Form Fill Seal) போன்ற தொழில் நுட்ப உத்திகள் சிறப்புறப் பயன்படுத்தப்படுகின்றன.

தரப் பரிசோதனை தங்கள் தனிமுத்திரை என்று கூறும் இந் நிறுவனத்தின் நிர்வாகத்தினர், இதற்கெனவே HPLC போன்ற வெளிநாட்டுக் கருவிகளை இறக்குமதி செய்துள்ளனர். மருந்து உற்பத்திக்கான மூல ரசாயனப் பொருள்களைத் தேர்ந்தெடுப்பதிலிருந்தே, தரப் பரிசோதனை தொடங்க, மருந்து தயாரிக்கப்படும் நிலையிலும், மருந்து தயாரிக்கப்பட்ட பிறகும் அது தொடர்வதுடன் உற்பத்தியான மருந்துகள் தொழிலகத்திலிருந்து அனுப்பப்பட்ட பின்னரும் அவ்வப்போது கிடங்குகளுக்குச் சென்ற 'மாதிரி' எடுத்துவந்து சோதிப்பதுவரை நீடிப்பதே, தங்கள் தரப் பரிசோதனையின் சிறப்பு என்று கூறுகின்றனர், இவர்கள்.

மூல ரசாயனப்பொருள் ஒவ்வொன்றுக்கும் இந்திய, பிரிட்டிஷ் மற்றும் அமெரிக்க பார்மசூட்டிகல் பகுப்பு அகராதி என்ற நூல்களில் விதிக்கப்பட்டுள்ள தர நிர்ணய அளவுகளை அடிப்படையாகக் கொண்டு, மாதிரி எடுத்துப் பரிசோதித்து, தரமான பொருளுடன் ஒப்பிட்டு, முழுக்க முழுக்க அதனுடன் ஒத்துப் போனால் மட்டுமே தேர்ந்தெடுக்கின்றனர். நரம்பு மூலம் செலுத்தப்படும் திரவ மருந்துகள் அடைக்கப்படும் பொருள்களையும், மேற்கூறிய நூல்களில் வரையப்பட்டுள்ள கோட்பாடுகளின்படி தரப் பரிசோதனை செய்த பின்பே பயன்படுத்துகின்றனர். பிற மருந்துகளை அடைக்கப் பயன்படும் பொருள்களையும், உற்பத்தி நிலையில் உள்ள மருந்துகளையும், தயாராகிய மருந்துகளையும், தர நிர்ணயம் செய்வதற்கு, இவர்களே சில நடைமுறைகளை உருவாக்கி கவனமாகப் பின்பற்றுகின்றனர். இதற்கென இவர்கள் கையாளும் கருவிகளின் நீண்ட பட்டியல் நமக்கு வியப்பூட்டுகிறது.

உடலில் நீரின் அளவு குறைவதால் மயக்கமுற்ற நோயாளியை மருத்துவரிடம் அழைத்துச் செல்வதற்குமுன் முதல் உதவியாகத் தரப் பயன்படும் Oralyte Ready; குழந்தைப் பருவத்தில் ஆஸ்துமாவைக் கட்டுப்படுத்தும் Ventil Expectorant, சிறுநீரகக் கோளாறுகளைப் போக்கும் Metalka; தலையில் உள்ள பொடுகை நீக்கும் Seldon; கிருமி நாசினியாகப் பயன்படும் Lennol; மூலிகைகளைக் கொண்டு ஆயுர்வேத முறையில் உருவாக்கப்படும் Eneliv (ஈரல் நோய் சிகிச்சைக்கு) மற்றும் Gylomin (மகளிருக்கு மட்டும்); இவை இவர்களின் குறிப்பிடத்தக்க சில தயாரிப்புகள் ஆகும்.



மனிதர்களுக்கான மருந்துகளுடன் நிறுத்திக் கொள்ளாமல், மிருகங்களின் உடல் நலனுக்கென்றும் பதினாறு வகைத் தயாரிப்புகளைத் தற்போது இந் நிறுவனம் மேற்கொண்டிருக்கிறது என்பதை அறியும் நாம் இவர்களது மனித நேயத்தைப் பாராட்டாமல் இருக்க முடியாது. —கே. ஏ.




டாக்டர் வி. மோகன்

# எம்.வி. டையாபட்டிஸ் ஸ்பெஷாலிட்டிஸ் சென்டர்

HB - AIC இன்றைய மருத்துவ உலகில் சர்க்கரை வியாதிக்காரர்களுக்காகக் கண்டுபிடிக்கப்பட்டுள்ள அதி நவீன சிகிச்சை சாதனம்.

சர்க்கரை வியாதிக்கு ஆட்பட்ட நோயாளி பவ்யமாய் மருத்துவர் சொல்லும் கட்டுப்பாடுகளுக்கெல்லாம் வேகமாய்த் தலையாட்டி விட்டு வருவார். மருத்துவர் தம் உடல் நலத்திற்காகத்தான் கட்டுப்பாடெல்லாம் விதிக்கிறார் என்பதை அவ்வப்போது காற்றில் பறக்க விடுவார். 'நான் என்றைக்காவது ஒருநாள் தான் கட்டுப்பாட்டை மீறுகிறேன்' என்று கூறி இனிப்பை விழுங்குவார். மருத்துவர் சொன்ன குறிப்பிட்ட நாள் சோதனைக்கு முன்னதாக மீண்டும் கட்டுப்பாட்டைத் தொடர்வார். மருத்துவரைச் சந்திப்பார். சிறுநீர், இரத்தப் பரிசோதனையில் சர்க்கரையின் அளவு மிகச் சீராக இருக்கும். 'நான் கட்டுப்பாட்டை மீறவில்லை. வியாதியைக் கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வந்து விட்டேன்' என்று தன் 'பணி'யைத் தொடர்வார்.

இதெல்லாம் சர்க்கரை வியாதியுடன் நோயாளி ஆடும் கண்ணாமூச்சி ஆட்டங்கள். நிரந்தரத் தீர்வு இருக்காது.

இரத்தத்தில் உள்ள சர்க்கரையின் அளவைச் சரியாகத் தீர்மானிக்க மூன்று மாதத்திற்குள் நடக்கும் மிகத் துல்லிய அளவுகள் தேவைப்படுகின்றன.

இந்த மூன்று மாத ஆய்வினைச் செய்ய 15 முறை இரத்தத்தைப் பல்வேறு முறைகளில் சோதனை செய்ய வேண்டும். சோதனைக்கு 8 மணி நேரமாகும். இச் சோதனையின் மூலம் கிடைக்கும் முடிவுகளை வைத்து சர்க்கரை வியாதிக்குச் சரியான தீர்வு காணலாம்.

ஆனால் இந்த 15 முறைச் சோதனையில் தவறு ஏற்பட வாய்ப்பு அதிகம். துல்லியமாகக் கணித்த திருப்தி இருக்காது.

இப்படிப்பட்ட குளறுபடிகளுக்கெல்லாம் சரியான பதிலைச் சொல்ல வந்திருப்பதுதான் HB - AIC மருத்துவ சாதனம்.

இம்மி பிசகாத அளவை - 8 மணி நேர சோதனையை - 3 மாத ஆய்வை - மூன்றே நிமிடங்களில் தருகிறது HB - AIC.

24 லட்சம் ரூபாய் மதிப்புள்ள இந்தச் சாதனம் இந்தியாவில் சென்னை, ராயப்பேட்டை நெடுஞ் சாலையில் உள்ள 'எம்.வி டையாபட்டிஸ் ஸ்பெஷாலிட்டிஸ் சென்டாரில் இருக்கிறது.

சர்க்கரை வியாதிக்குக் காரணமான அதிக நீர் தாகம், அடிக்கடி சிறுநீர் கழிதல், திடீர் மயக்கம், கால்வலி, புண் சீக்கிரத்தில் குணம் ஆகாமை, பசி, உடல் எடை குறைவு, போன்ற அறிகுறிகளையும், சர்க்கரை வியாதிக்கு ஆட்பட்டபின் ஏற்படும் கண் பார்வைக் கோளாறு, சிறுநீரகக் கோளாறு, இருதயக் கோளாறு, கால்களில் இரத்த ஓட்டம் சீராக இல்லாமையையும் கண்டுபிடித்துக் குணமாக்குகிறது எம்.வி. டையாபட்டிஸ் ஸ்பெஷாலிட்டிஸ் சென்டர், டாக்டர் வி. மோகனின் நேரடி மேற்பார்வையில்.

கண் சோதனை, சிறுநீரக சோதனை, இருதய சோதனை, கால்களில் இரத்த ஓட்ட சோதனைகளுக்காக நோயாளிகள் வெவ்வேறு இடங்களுக்குச் செல்ல வேண்டியதில்லை. அத்தனை சோதனைகளையும் மிக விரைவாக ஒரே இடமான எம்.வி. டையாபட்டிஸ் ஸ்பெஷாலிட்டிஸ் சென்டாரில் செய்து கொள்ளும் எல்லா வசதிகளும் ஒருங்கிணைக்கப்பட்டுள்ளது, இங்கே.

தொடங்கப்பட்ட இரண்டே ஆண்டுகளில் இதுவரை 1700 நோயாளிகள் குணமாக்கப்பட்டுள்ளனர். அத்தனை பேரின் ரிக்கார்ட்களும் மிகத் தெளிவாகப் பதிவு செய்யப்பட்டு நோயாளி அடுத்த முறை வருகிறபோது டாக்டர் வி. மோகனின் மேஜையின் மேல் ஆஜராகின்றன.

உலக நாடுகளில் மிகப் பெரியதாக மதிக்கப்படும் 'World Text Book Award' களஞ்சியத்தில் டாக்டர் வி. மோகனின் கட்டுரையும் வெளியாகி இருப்பது நாமெல்லாம் பெருமைப்பட வேண்டிய விஷயம்.

40 வயதானவர் டாக்டர் வி. மோகன். பார்த்தால் இளவயதுத் தோற்றம். இதுவரை பெற்ற விருதுகளின் எண்ணிக்கை 17.

டையாபட்டிஸ் ஆஃப் இந்தியா அசோஸியேஷனில் 3000 மருத்துவ அறிஞர்கள் தாங்கள் கண்டு பிடித்த ஆய்வுக் கட்டுரைகளைச் சமர்ப்பிக்க, டாக்டர் வி. மோகன் சமர்ப்பித்த 'கணையத்தால் வரும் சர்க்கரை வியாதி' சம்பந்தமான கட்டுரைகள் மூன்று முறை முதல் பரிசுகளைப் பெற்று வந்துள்ளன.

"டில்லியில் அதிகாரி ஒருவருக்குச் சர்க்கரை வியாதி. அவர் இந்தியாவிலுள்ள பல்வேறு முக்கிய நகரங்களில் சிகிச்சை பெற்றும் பலன் இல்லாமல் என்னிடம் வந்தார். குணப்படுத்தினேன். போகும்போது அவர் சொன்னார்: 'டில்லியில் அரசியல் வாதிகளின் போக்கும், பம்பாயில் பண ஆதிக்கத்தின் வேகமும், சென்னையில் அறிவு பூர்வமான விஞ்ஞான சிகிச்சை முறையும் வளர்ந்திருக்கின்றன' என்றார். நம் தமிழ் மருத்துவர்களைப் பற்றி அவர் சொன்னது பெருமையாக இருக்கிறது" என்கிறார், உலக மெங்கும் வரும் மருத்துவப் பத்திரிகைகளில் சர்க்கரை வியாதிக்காக பிரத்யேகக் கட்டுரைகள் எழுதி வரும் டாக்டர் வி. மோகன்.

"இந்தியாவில் குறிப்பாகத் தமிழ் நாட்டில், கணையத்தில் இருக்கும் கற்களால் ஏற்படும் சர்க்கரை வியாதியின் எண்ணிக்கை அதிகம். இதற்கான ஆய்வை ஐந்து வருடங்கள் மேற்கொண்டேன். என் துணைவியார் டாக்டர் ரமா மோகன் எனக்குப் பெரிதும் உதவினார். இந்த மருத்துவமனையைத் திறம்பட இயக்க அவரே முழுக் காரணம்" என்றார். "40 வயதிற்கு மேற்பட்டவர்கள் ஒரு முறை சர்க்கரை வியாதி இருக்கிறதா என்று சோதனை செய்து கொள்வது நல்லது. 50 சதவிகிதம் பேருக்கு நோயின் அறிகுறியே தெரியாது. நோய் தீவிரமடையும் முன் குணமாக்குவது எளிது" என்றும் கூறினார்.

நவீன மருத்துவ வசதிகளுடன் நோயை விரைவில் கட்டுப்படுத்த எல்லாச் சிகிச்சை முறைகளையும் கொண்ட ஒரு மையத்தை நிறுவி, குறைந்த செலவில் சேவை செய்ய வேண்டும் என்பது டாக்டர் வி. மோகனின் எதிர்கால இலட்சியமாக இருக்கிறது.

ஒரு நாளைக்கு 100 நோயாளிகளைச் (ஒரு நாளைக்கு இதற்கு மேல் எண்ணிக்கையில் நோயாளிகளை முழுமையாகச் சோதிக்க நேரம் போதாது) சந்தித்து அவர்களின் நோயைக் கட்டுப்படுத்தும் டாக்டர் வி. மோகனின் லட்சியம் நிறைவேறுகிற நாள் வெகு தொலைவில் இல்லை. ⁂

# மெடிக்கிளைம் பாலிசியின் பயன்கள்

இன்சூரன்ஸ் கம்பெனிகள் செய்து வரும் சேவைகளில் குறிப்பிடத்தக்கது மருத்துவச் சேவையும் ஒன்றாகும்.

யுனைடெட் இந்தியா இன்சூரன்ஸ் நிறுவனம் மெடிக் கிளைம் மற்றும் அயல்நாடுகளுக்குச் செல்பவர்களுக்கான மெடிக் கிளைம் பாலிசிகளையும் அறிமுகப் படுத்தியுள்ளது.

மெடிக் கிளைம் பாலிசி எடுத்தவர்கள் ஆஸ்பத்திரியில் சேர்க்கப் பட்டால் (விபத்தினாலோ அல்லது உடல் நலக் குறைவினாலோ) அவர்களின் மருத்துவச் செலவுகளை யுனைடெட் இந்தியா நிறுவனம் ஏற்றுக் கொள்ளும். நாம் பாலிசி எடுத்த காலத்திற்குத்தான் இது பொருந்தும். சில வியாதிகளுக்கு இது பொருந்தாது.

5 வயதிலிருந்து 70 வயதிற்குட்பட்டவர்கள் இந்த மெடிக் கிளைம் பாலிசியை உபயோகப் படுத்திக் கொள்ளலாம். மூன்று மாதக் குழந்தையிலிருந்து 5 வயது வரை உள்ள குழந்தைகளுக்கும் இந்தப் பாலிசி எடுக்கலாம். ஆனால் குழந்தைகளுடன் பெற்றோர் எவரேனும் ஒருவர் பாலிசி எடுத்துக் கொள்ள வேண்டும்.

இந்தப் பாலிசியின் பயன் 70 வயதிலிருந்து 75 வயதுக்குட்பட்டவர்களுக்கு 10% குறைவாகவும் 75 வயதுக்கு மேற்பட்டவர்களுக்கு 20% குறைவாகவும் கிடைக்கும் என்பது குறிப்பிடத்தக்கது.

ஆஸ்பத்திரியிலிருந்து டிஸ்சார்ஜ் ஆன விவரம், டாக்டரின் ஆலோசனை, டாக்டர்கள் கொடுக்கும் மருந்துச் சீட்டு, மருத்துவமனைகளின் ரசீது, பரிசோதனை அறிக்கை ஆகியவற்றைப் பத்திரமாக வைத்திருந்து உரிய காலத்தில் காண்பித்து நாம் மருத்துவச் செலவுகளை இன்சூரன்ஸ் கம்பெனியிடமிருந்து பெற முடியும்.

ஒரு குடும்பத்தில் இருப்பவர்களுக்கு பாலிசி எடுத்தால் பிரீமியத்தில் 10% கழிவு உண்டு. மேலும் வருமான வரிக் கழிவில் (6000 ரூபாய் வரை) இந்தப் பாலிசிக்கான பிரீமியத் தொகையைச் சேர்த்துக் கொள்ளலாம்.

வெளிநாடுகளுக்குச் செல்பவர்களும் மெடிகிளைம் பாலிசி எடுத்துக் கொள்ளலாம். மருத்துவச் சிகிச்சைக்கென்றே செல்பவர்களைத் தவிர மற்றவர்களுக்கு இந்தப் பாலிசியால் பயன் உண்டு.

குறிப்பாக 40 வயதுக்கு மேற்பட்டவர்கள் கனடா, அமெரிக்கா நாடுகளுக்குச் செல்லும் போதும் 60 வயதுக்கு மேற்பட்டவர்கள் எந்த நாட்டுக்குச் சென்றாலும் இந்தப் பாலிசி எடுக்கும் முன் முழுமையான மருத்துவப் பரிசோதனை செய்து கொள்ள வேண்டும்.

பாலிசிக்கான பிரீமியத் தொகை - வயது, அயல் நாட்டில் செலவிடும் நாள்கள், ஆகியவற்றைப் பொருத்து அமையும்.

வெளிநாட்டில் உடல்நலக் குறைவு ஏற்படும்போது இந்தப் பாலிசியை எடுத்தால் நமக்கு ஏற்படும் செலவுகளை யுனைடெட் இந்தியா இன்சூரன்ஸ் கம்பெனியே ஏற்றுக் கொள்ளும். அதிகபட்சமாக 50,000 டாலர்கள் வரை மருத்துவச் செலவுக்காகப் பெறலாம். இது பற்றி முழுமையாக இன்சூரன்ஸ் கம்பெனியின் படிவங்களை வாங்கித் தெரிந்து கொள்ளலாம்.

வெளிநாட்டில் படிக்கப் போகும் மாணவர்களுக்கும் வேலை செய்யப்போகும் நபர்களுக்கும் இத் திட்டத்தால் பயன் உண்டு.

— கீழாம்பூர்

# தமிழ்நாடு ஹாஸ்பிடல்



முன்னணி விளையாட்டு வீரர்கள் பயிற்சியின்போது - ஓடும் போது கால் மடிந்து கொள்வதும், விளையாட்டின்போது கழுத்து, கைகள் பிசகி வலி ஏற்படுவதும் சாதாரணமான விஷயங்களே!

ஆனாலும் இந்த வலி அவர்களை வருத்திக் கொண்டே இருக்கும். வலியைப் போக்க சிகிச்சை மேற்கொள்ள சில நாள்கள் பிடிக்கும். அதற்குள் போட்டி முடிந்து விடும்; அல்லது போட்டி தொடங்கியதும் அவர்களால் விளையாட முடியாமல் போய்விடும்.

எலும்புகளில் வீக்கம், நடக்கும் போது சத்தம், கீழே விழுந்து விடும் நிலை ஏற்படும் இந்த வியாதிக்காகக் கண்டுபிடிக்கப் பட்ட மிக நவீன வைத்திய முறை கடந்த பத்து வருடங்களில் உலக நாடுகளில் சில குறிப்பிட்ட நகர மருத்துவமனைகளில் மட்டுமே பரவியிருந்தது.

இந்த நவீன கருவிகளின் மூலம், நோயாளி அனுமதிக்கப் பட்டவுடன் ஆர்த்ரோ ஸ்கோப் கருவியின் உதவியால் பாதிக்கப் பட்ட இடத்தைக் கண்டுபிடித்து ஒரு சிறு துளை போட்டு லேப்ராஸ் கோப்பிக் சர்ஜரியால் மேற்படி வியாதியைக் குணமாக்கி விடலாம். பாதிக்கப்பட்டவர் காலையில் வந்தால் சிகிச்சை முடிந்து மாலைக்குள் சென்று தன் விளையாட்டைத் தொடங்கி விடலாம்.

இப்படிப்பட்ட அதி நவீன முறை இந்தியாவிலும் இறக்குமதியாகி அதை தமிழ்நாடு ஹாஸ்பிடலில் வெற்றிகரமாக நடத்திக் கொண்டிருப்பவர் தான் டாக்டர் நந்தகுமார் சுந்தரம்.

'தமிழ்நாடு ஹாஸ்பிட'லில் டாக்டர் நந்தகுமாரைச் சந்தித்தோம். எலும்பு சம்பந்தமான நோய்களைப் பட்டியலிட்டார்.

"சாதாரணமாக எலும்புகளுக்கு விபத்து மூலமாகத்தான் நிறைய சேதாரம் ஏற்படுகிறது. கை - கால், முதுகு, இடுப்பெலும்பு முறிந்து போகும்.

அடுத்தது வயதானவர்களுக்கு வரும் எலும்பு சம்பந்தமான நோய்கள். ஒவ்வோர் எலும்புகளின் மேலும் ஜவ்வுப் படலம் இருக்கும். வயதாக ஆக இந்த ஜவ்வுப் படலம் உராய்ந்து உராய்ந்து தேய்ந்து போகும். இப்படி தேய்ந்து போவதால் எலும்புகள் ஒன்றையொன்று நேரடியாகத் தொட்டுக் கொள்கின்றன. இதனால் தாங்க முடியாத வலி தோன்றுகிறது. மூட்டுக்கு மூட்டு வலி உயிரை எடுக்கும்.

இந்த நோய் பெண்களுக்கு அதிகம் வரக் காரணம், மாத விலக்குக் காலம் முடிவுற்ற பிறகு (Menopause) கால்சியம் சத்து குறைகிறது. கால்சியம் சத்தே எலும்புகளின் ஆரோக்கியத்திற்கு மூல காரணம். வயதான பெண்கள் உணவில் கால்சியம் சத்தை நிறையச் சேர்த்துக் கொள்ள வேண்டியது அவசியம்.



டாக்டர் நந்தகுமார்

வைரஸ் கிருமிகளால் எல்லா வயதினருக்கும் எலும்புகளில் நோய் ஏற்படலாம். இரத்த ஓட்டம் எலும்புப் பகுதிகளிலேயே அதிகம் நடைபெறுகிறது.

டி.பி., கேன்சர் நோயால் பாதிக்கப்பட்டவர்களும் எலும்பு சம்பந்தமான நோய்க்கு ஆளாகலாம். வேறு சில காரணங்களாலும் எலும்பு சம்பந்தமான நோய்கள் வருகின்றன" என்று சொல்லும் டாக்டர் நந்தகுமார் தமிழ்நாடு ஹாஸ்பிடலில் எல்லாவிதமான எலும்பு நோய்களையும் குணப்படுத்தி வருகிறவர்.

இங்கிலாந்தில் 12 வருடம் பயிற்சியை முடித்துவிட்டு அமெரிக்காவில் இரண்டு வருடங்கள் வைத்தியம் பார்த்தவர். பயிற்சியின் போது தங்க மெடல் பெற்ற எலும்பு நிபுணர்.

"நாள் தவறாமல் நடக்கும் சாலை விபத்துகளில் 80% பாதிக்கப்படுகிறவர்கள் இரண்டு சக்கர வாகன ஓட்டுநர்கள்தாம் இவர்களுக்கு முதலில் காலில்தான் அடிபடும். எலும்பு முறியும். இதற்கு 'பம்பர் ஃபிராக்சர்' என்று பெயர்.

விபத்தில் பாதிக்கப்பட்டவரைச் சுற்றி ஆட்கள் சூழ்ந்து கொள்ளாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். அவருக்கு நல்ல காற்றோட்டம் தேவைப்படுகிறது.

## அல்சர் குணமாக யோசனைகள்.

- அல்சருக்கு பரம்பரையும் ஒரு காரணமாகும். இதை குணமாக்க-

- சரியான நேரத்தில் சாப்பிட வேண்டும்.

- காலை உணவை சுமார் 7 மணிக்கெல்லாம் சாப்பிடலாம். இரவு உணவை 8 மணிக்குள் முடித்து விட வேண்டும்.

- மென்று நிதானமாக சாப்பிட வேண்டும்.

- சூடான வறுத்த உணவுகளையும் அடிக்கடி டீ - காபி சாப்பிடும் பழக்கத்தையும் கைவிட வேண்டும்.

- மது அருந்துவதும், புகை பிடிப்பதும் கூடாது.

- டாக்டர் அனுமதி இல்லாமல் வலி நிவாரண மாத்திரைகளை தானாக கடைகளில் வாங்கி சாப்பிட வேண்டாம்.

- மிகுந்த கவலை, அதிக கோபம் சட்டென்று உணர்ச்சி வசப்படுதலைத் தவிர்க்கலாம்.

## தைராய்டு சுரப்பி

தைராய்டு சுரப்பி மூன்று வகையான ஹார்மோன்களைச் சுரக்கிறது. அவை 'தைராக்ஸின்', 'ட்ரை அயோடோ தைரோனின்' 'கால்சிடோனின்'. இவை அனைத்தும் உடற்தொழிற்பாட்டை ஒழுங்குபடுத்தும். இவை சாதாரண உடல் வளர்ச்சிக்கும், மூளை அபிவிருத்திக்கும், பாலின அபிவிருத்திக்கும் மிகவும் அத்தியாவசியமானவை.

## 'அந்த' நாள்களில்

பெண்களுக்கு மாத விடாய் காலங்களில் உடலிலிருந்து நிறைய இரும்புச் சத்து வீணாகும். எனவே, இரும்புச் சத்து நிறைந்த பருப்பு, முட்டை, கோதுமை, பீன்ஸ், காய்கறிகளை உணவில் அதிகம் சேர்த்துக் கொள்வது பயனளிக்கும்.

## சொறி, சிரங்கு நீங்க

200 கிராம் எருக்கன் இலையை அரைத்து, ஒரு மண் சட்டியில் 500 கிராம் தேங்காய் எண்ணெயை ஊற்றி, சிறிது சூடேறியதும் எருக்கன் இலை அரைத்ததைப் போட்டு மூடி, சிறு தீயாக எரித்து, நீர் சுண்டியதும் இறக்கி, சொறி சிரங்கின் மேல் தடவினால் விரைவில் குணமாகும்.

## தலைவலி நீங்க

துளசி சாற்றைப் பிழிந்து ஒரு தேக்கரண்டி அளவு எடுத்து அதில் சிறிது கற்பூரம் சேர்த்துக் குழைத்து நெற்றியில் பற்றுப் போட தலைவலி குணமாகும்.

## புண்களுக்கு...

வேப்பிலையையும், மஞ்சளையும் சம அளவாக அரைத்துக் கட்டி வர புண் குணமாகும்.

## அந்நிய நாட்டினரோடு அறுகு.

பழஞ்சீனர்கள் மாதத்திற்கொரு முறை அறுகம்புல்லை அரைத்துத் தலையில் தேய்த்துக் குளித்து வந்தார்கள்.

செவ்விந்தியர்கள் உணவு உண்ட பின் சிறிதளவு அறுகம்புல்லை மென்று தின்பார்களாம்!

தென்னாப்பிரிக்கர்கள் மகப் பேற்றிக்கு அறுகம்புல்லை உண்டு வருவார்களாம்.

மலேசியாவில் பழங்குடியினர் மாமிசக் குழம்பில் இரண்டு அறுகம் புல்லைப் போட்டு இறக்குவார்கள்.

மிருகங்களில் குறிப்பாக, நாய், புலி, சிங்கம், கரடி மற்றும் சில மிருகங்கள் குறிப்பிட்ட நாள்களில் அறுகம்புல்லை மட்டும் உண்டு ஒருநாள் பட்டினி கிடக்கின்றன.

## பேன் - பொடுகு நீங்க!

300 கிராம் அறுகம்புல்லை தண்ணீர் விடாமல் மை போல் அரைத்துக் கொள்ளவும். 600 கிராம் நல்லெண்ணெயை ஒரு மண் பானையில் ஊற்றி சிறிது சூடேறியதும், அறுகம்புல்லைப் போட்டு மூடி சிறு தீயாக எரிக்கவும். தைலப் பதத்தில் இறக்கி எட்டு நாள்களுக்கு ஒருமுறை தலைக்குத் தேய்த்து முழுகலாம். நாளும் தடவி சீவி வரலாம்.

---

அடுத்து இரத்தம் வருவதை நிறுத்த பஞ்சு அல்லது மெல்லிய துணியில் கட்டுப் போட்டு இரத்தம் ஒழுகுவதைக் கட்டுப் படுத்த வேண்டும்.

எலும்பு வெளியே தெரிந்தால் மூங்கில் அல்லது கனமான அட்டைகளை வைத்து அப்படியே கட்ட வேண்டும். எலும்பைச் சுற்றி இரத்த நாளங்கள் அதிகமாக ஓடும். அவை அறுபடாமல் இருக்க இது பெரிதும் உதவும்.

முதுகு, கழுத்து, இடுப்பு எலும்பு முறிந்திருந்தாலும் இதே முறையைப் பயன்படுத்தலாம். பலசாலியாக இருந்தாலும் ஒருவர் மட்டுமே அவரைத் தூக்கி நிறுத்த முயற்சி செய்யக் கூடாது. எங்கு அடிபட்டு இருந்தாலும் தலைப் பகுதியை ஒருவர் பிடித்துக் கொள்வது நல்லது.

விபத்துக்குள்ளான ஒருவரை ஆட்டோ போன்ற குலுங்கி ஓடுகிற வாகனங்களில் அழைத்துச் செல்லவே கூடாது. ஆம்புலன்ஸுக்குப் போன் செய்து அழைத்துச் செல்வதே சிறந்தது. முடிந்த மட்டும் பாதிக்கப்பட்டவரை அலுங்காமல் பார்த்துக் கொள்ள வேண்டும்.

அடிபட்டவருக்கு முதலில் இரத்தம் செலுத்துவோம். அடுத்து மருத்துவக்குழு ஒன்று அவரைப் பரிசோதித்து உயிர் போகாமல் இருக்கத் தேவையான முதலுதவி செய்யும்.

எலும்பு முறிந்த இடத்தைக் கண்டுபிடித்து வைத்தியம் செய்த பிறகு தேவைப்பட்டால் அறுவை சிகிச்சை செய்து குணமாக்குவோம்.

சிகிச்சையின்போது எலும்பு மூட்டுகள் சரிவர இயங்க பயிற்சி முக்கியம்.

முடிந்த மட்டும் உடலில் இருக்கும் எலும்புகளையே குணமாக்க முயலுவோம். முடியாத பட்சத்தில் செயற்கை மூட்டுகளைப் பொருத்த வேண்டியது அவசியமாகிறது. டைட்டானியம், விட்டானியம், துருப்பிடிக்காத ஸ்டெயின்லெஸ் ஸ்டீலும் செயற்கை மூட்டுகளுக்குப் பயன்படுத்தப்படுகின்றன" என்ற டாக்டர் நந்தகுமார், உடலில் உள்ள 206 எலும்புகளுக்கும் சிகிச்சை தருவதில் நிபுணராய் தமிழ்நாடு ஹாஸ்பிடலில் பணியாற்றுகிறார்.

பலவித நோய்களை நவீன முறையில் குணமாக்கும் தமிழ்நாடு ஹாஸ்பிடல், எலும்பு சம்பந்தப்பட்ட எல்லா வியாதிகளையும் குணமாக்கும் மருத்துவமனையாகத் திகழ்வதற்கு டாக்டர் நந்தகுமார் போன்றவர்களும் முக்கிய பங்கு வகிக்கின்றனர்.

# ஹைட்ரசில் நோய்

ஹைட்ரசில் நோயால் ஆண்கள் மட்டுமல்ல, பெண்களும் பாதிக்கப் படுவதுண்டு! அந்நோய் பற்றியும், நோய் நீக்கும் வகை பற்றியும் விளக்கியிருக்கிறார் டாக்டர் தங்க. இராசகோபாலன் எம்.எஸ்.

'ஹைட்ரசில்' நோய் எதனால் வருகிறது?

"இதற்குப் பல காரணங்கள் இருக்கின்றன; ஆனாலும், இந்த நோயானது யானைக்கால் கொசு எனப்படும் ஃபைலேரியல் (Fylarial) என்கிற வகைக் கொசுக்கடி மூலம் தான் பெரும்பாலும் அதிக அளவில் பரவுகிறது. இன்னும் விளக்கமாகச் சொல்வதானால், அந்த வகைக் கொசுக்கடியால் அதிகம் பாதிக்கப்பட்டோருக்கு நிணநீர் ஓட்டத்தில் தடையேற் படும்; இதனால், ஆண்குறியை அடுத்துள்ள பக்கவாட்டுத் தோல் பையில் ஒரு வகையான கெட்ட நீர் அதிகமாகத் தேங்கி விடுவதால், நாளடைவில் அதன் தோல்கள் தடிப்பாகிப் பருத்து இந்த நோய் வரும்.

சிலருக்கு க்ஷயரோகம் காரண மாகவும், விரையில் புற்றுநோய்க் கட்டி வருவதன் காரணமாகவும், பால்வினை நோய்களில் ஒன்றான Syphilis மூலம் பாதிக்கப்பட்டவர் களுக்கும்கூட இப்படிப்பட்ட விரை வாத நோய் வர வாய்ப்புகள் உண்டு. எந்தவிதக் காரணங் களும் இல்லாமலேகூட இந்த நோய் வருவதுண்டு".

இந்த வகையான நோய் பெண் களுக்கு வருமா டாக்டர்?

"பெண் உறுப்பில் இது போல வருவதற்கான வாய்ப்புகள் குறைவு. ஆனால், ஃபைலேரியல் தொடர்பான நோயானது பெண் களுக்கு மார்பகம், பெண் உறுப்பு போன்ற பகுதிகளில் வரக்கூடும்".

ஹைட்ரசில் என்பது பரம்பரை நோயா?

"அப்படியெல்லாம் இல்லை".

இந்த நோய் வருவதற்கான அறிகுறிகள் என்ன?



டாக்டர் தங்க. இராசகோபாலன்

ஃபைலேரியல் ஜுரம் என்கிற குளிர் ஜுரம் அடிக்கடி வரும். அதிகமாக இரவில் மட்டுமே வரும். கொசுவின் வளர்ச்சிப் பருவத்தில் லார்வா என்பதும் ஒன்று. மைக்ரோஸ்கோப் மூலம் பார்த்தால் இது புழுப்போன்று சற்றே நீளமானதாகத் தெரியும் இந்த லார்வாவானது, கொசுக்கடி யால் நமது இரத்தத்தில் உரு வாகிக் கலந்து முழு வளர்ச்சியுற்று, அழிந்து துண்டுதுண்டாகும். அப் போது அதிலிருந்து வெளிப்படும் நச்சுப்பொருள் நம் இரத்தத்தில் சேர்ந்து, நமக்கு ஜுரத்தோடு கூடிய லேசான நடுக்கமும் தோன்றும்.

இதுபோன்ற அறிகுறிகள் தோன்றும்போது, விரல் நுனியி லிருந்து சிறிது இரத்தம் எடுத்துப் பரிசோதித்துப் பார்த்தாலே ஒருவ ருக்கு ஃபைலேரியல் நோய் வந் திருப்பதையோ, வரவிருப் பதையோ கண்டுபிடித்து விட லாம்.

ஆனால், அப்படி அடிக்கடி வரும் ஜுரங்களுக்கு முழுக்க முழுக்க இதுவே காரணம் என்று கூற முடியாது. வேறு ஏதாவது காரணங்களும் இருக்கலாம்".

ஹைட்ரசில் நோய்க்கு ஆளான ஒருவருக்கு எவ்வகைத் துன்பங்கள் ஏற்படும்?

"நீங்கள் நினைப்பதுபோல் பெரிதாக ஒரு துன்பமும் இருக் காது. பேண்ட் போட்டுக் கொள்ள முடியாது. இந்நோய் கண்டவர், சைக்கிளில் போவது போன்ற சந்தர்ப்பங்களில் அங்கே அடி பட்டால், இரத்தக் கசிவு ஏற்படும். அந்த இரத்தமானது உள்ளே தேங்கியுள்ள கெட்ட நீரோடு கலந்து உறைந்து, வலியும் ஜுரமும் அவருக்கு அடிக்கடி ஏற்படும். இதனால் அப்பகுதியில் உள்ள தோல் மேலும் கனத்துப் போய் அந்தப் பக்கம் உள்ள விரையையே நசுக்கிவிடும். இந்த அளவுக்கு ஆகிவிட்டால் அப்படி பாதிக்கப்பட்ட விரையையே நீக்கும்படி ஆகிவிடும்".

அப்படி பாதிக்கப்பட்ட விரையை நீக்குவது ஆபத்தில்லையா டாக்டர்?

"எந்தவித ஆபத்தும் இல்லை; இரண்டையும் நீக்கினால்தான் ஒருவருக்கு ஆண்மைக் குறைவு வரும்; அப்போதுகூட உயிருக்கு ஒன்றும் ஆபத்து கிடையாது".

ஹைட்ரசில் என்பது ஒரு பக்கம் மட்டுமே ஏற்படுமா அல்லது இரண்டு பக்கமும் ஏற்படுமா?

"இரண்டு விதமாகவும் இது வரக்கூடும்; சிலருக்கு ஒரு பக்கம் வரும்; சிலருக்கு ஒரே நேரத்தில் இரண்டு பக்கமும் ஏற்படும். ஆனால், ஒரு பக்கம் வந்தால் இன்னொரு பக்கம் பரவும் என்ப தில்லை. இரண்டு விரைக்கும் இடையே Sabtem என்கிற தோல் சுவர் தடை இருக்கிறது. ஆகவே ஒன்றுக்கொன்று தொடர்பு கிடை யாது".

இவ்விதமான நோய் வராமலே ஒருவரால் முன்கூட்டித் தடுக்க முடியாதா?

"முடியும். ஒருவர் புதிதாகக் குடிவந்த பகுதியில் அதிகமாகக் கொசுக்கடி இருப்பதாக வைத்துக் கொள்ளுங்கள். அவர் நாள் ஒன் றுக்கு மூன்று வேளை வீதம் Hetraman - 300 Mg மருந்தை, மாதத்திற்குப் பத்து நாள்கள் வீதம் ஆண்டிற்கு மூன்று அல்லது ஆறு மாத காலம் தொடர்ந்து உட் கொண்டு வந்தால் ஃபைலேரியல் தொடர்பான எந்த நோயும் வராது.

ஆகவே - கொசுக்கள் உற்பத்தி பெருகாதபடி சுற்றுப்புறத்தை மட்டுமல்ல, நம் வீட்டையும் நாம் சுகாதாரமாக வைத்துக் கொண் டால் நல்லது. கொசு மிகுந்த பகுதியில் இருப்போர், கொசு

வலை உபயோகித்தாலே போதும்!"

இந்நோய் கண்டவர்கள் எப்படிப்பட்ட கட்டுப்பாடுகளை எல்லாம் கடைப்பிடிக்கவேண்டும்?

"முக்கியமாக சைக்கிள் ஓட்டுவது போன்றவற்றைத் தவிர்க்க வேண்டும். ஏனென்றால், அடிபட்டால் ஆபத்து. சைக்கிளின் பின்னால் உட்கார்ந்து செல்லலாம் - அதில் அவ்வளவு ஆபத்தில்லை. உடனடியாகச் சில மருந்து மாத்திரைகளை உட்கொள்ளத் தொடங்கினால், சின்ன அளவிலேயே கட்டுப்படுத்திப் பெரிதாகாமல் தடுத்து விடலாம்.

"அறுவை சிகிச்சை தேவையில்லை. சித்த வைத்தியம் மூலமே குணமாக்கலாம் என்று விளம்பரம் செய்யப்படுகிறதே, இது பற்றி உங்கள் கருத்து?"

"அதைப்பற்றி நான் எதுவும் கூற இயலாது; சித்த வைத்தியம் பற்றி எனக்குத் தெரியாது".

ஹைட்ரசில் வரப்பெற்றவர் எப்படிப்பட்ட உணவுகளை உண்ணக் கூடாது? எது போன்றவற்றை அதிகம் உண்ணலாம்?

"இந்த நோயைப் பொறுத்த மட்டில் அப்படி எந்தவிதமான உணவுக் கட்டுப்பாடும் இல்லை; எல்லாமே வழக்கம்போல் சாப்பிடலாம் - அசைவம் உட்பட!"

இதற்கான அறுவைச் சிகிச்சை மேற்கொள்ளுமுன், ஒரு மருத்துவர் எதையெல்லாம் முன்கூட்டியே கவனிக்க வேண்டியிருக்கும்?

"எல்லா வகையான அறுவைச் சிகிச்சைக்கும் முன்பாக அறுவைச் சிகிச்சை மருத்துவர் ஒருவர் எப்படிப்பட்ட சோதனைகளையெல்லாம் செய்வாரோ - அப்படி இதற்கும் செய்ய வேண்டும். அதன் பிறகுதான் அறுவைச் சிகிச்சை பற்றி முடிவெடுக்க வேண்டும்.

இதற்கான அறுவைச் சிகிச்சைக்குச் சுமார் எவ்வளவு நேரமாகும்?

● தினசரி உணவில் வெங்காயம், வெள்ளைப் பூண்டு சேர்த்துச் சாப்பிட்டு வந்தால் இருதய நோய் வராமல் தடுக்கலாம்.

● டி.பி. நோய் உள்ளவர்கள் தினசரி நெல்லிக்காயை எந்த வடிவிலாவது சாப்பிடுவது நல்லது. பெரிய நெல்லிக்காயை இடித்துச் சாறு எடுத்து அதில் அரை அவுன்ஸும் சமபங்கு தேனும் கலந்து சாப்பிட ஊட்டச்சத்து அதிகமாகும்.

—டி. ஆர். ஜி.

"அது நோயாளியை - அல்லது நோயைப் பொறுத்தது. அரை மணி முதல் ஒரு மணி நேரம் வரை அதற்கு ஆகக்கூடும். ஹைட்ரசில் சிறிய அளவில் இருந்தால் பத்து பதினைந்து நிமிடத்திலும் செய்து விடலாம்".

ஹைட்ரசில் நோய் வருவதற்கு வயது வரம்பு ஏதாவது உண்டா?

"அப்படி எதுவும் இல்லை. எல்லா வயதிலும் இது வரக்கூடும். அவ்வளவு ஏன் - பிறக்கிறபோதே சில குழந்தைகளுக்கு இவ்வாறான நோயும் இருக்கும். அப்படிப்பட்ட குழந்தைகளுக்கு மூன்று வயதான பிறகு - அதாவது வலியைத் தாங்கிக் கொள்ளும் பக்குவம் அல்லது தெம்பு ஏற்பட்ட பிறகு அறுவைச் சிகிச்சை செய்து அதைச் சரிப்படுத்தி விடலாம்".

இந்த அறுவைச் சிகிச்சை செய்து கொண்ட ஒருவர், கடைப்பிடிக்க வேண்டிய முறைகள் என்ன டாக்டர்?

"மூன்று நான்கு மாத காலமாவது சைக்கிள் ஓட்டக்கூடாது. அறுவைச் சிகிச்சை செய்த இடத்தில் அதிர்ச்சி ஏற்படாமல் பார்த்துக் கொள்ள வேண்டும். மூன்று நான்கு மாத காலத்திற்கு உடலுறவு தவிர்க்கப்பட வேண்டும். தொடர்ந்து ஜட்டி போட்டுக் கொள்ள வேண்டும். அவ்வளவு தான்!".

இந்த அறுவைச் சிகிச்சை செய்து கொண்டால், பிறகு முதுகு வலி ஏற்படும் என்கிறார்களே?

"அறுவைச் சிகிச்சையின்போது ஒத்துழைப்புத் தராத சில நோயாளிகளுக்கு அவ்வகையான அவதி ஏற்படுவது உண்டு. மனப்பூர்வமாகச் சிகிச்சை செய்து கொள்ளுகிறவர்களுக்கு எதுவும் வராது".

ஹைட்ரசில் நோய் கண்டவர்களுக்கு நீங்கள் முடிவாகச் சொல்லும் அறிவுரைகள் யாவை?

"வெளிநாடு செல்லும் ஒருவர், இவ்வகை பாதிப்புக்கு ஆளாகியிருந்தால் கட்டாயம் அனுமதிக்கப் படமாட்டார்; அறுவைச் சிகிச்சை செய்து கொண்ட பிறகே பயணம் மேற்கொள்ள அனுமதிப்பார்கள்.

ஹைட்ரசில் அறுவைச் சிகிச்சைக்காக யாரும் அஞ்சத் தேவையில்லை. ஹைட்ரசிலுக்கு மேற்கொள்ளப்படுவது மைனர் ஆபரேஷன்தான். இரண்டே நாளில் நோயாளி எழுந்து நடக்கலாம். ஆறு நாள்களிலேயே தையலைப் பிரித்து விடுவோம். சிறிது காலத்திற்கு எச்சரிக்கையாக இருக்க வேண்டும்.

ஹைட்ரசில் சிறிய அளவில் இருக்கும் போதே அறுவைச் சிகிச்சை செய்து கொண்டால் நல்லது; அதை முற்றிப் பெரிதாகும்படி விட்டுவிட்டால் வயதாகி விடுவதால் பலவிதமான பக்க விளைவுகள் ஏற்படவும் வாய்ப்புண்டு".

ஹைட்ரசிலுக்காக அறுவைச் சிகிச்சை செய்து கொண்டால் ஹிரண்யா வரும் என்று கூறப்படுகிறதே - சரியா டாக்டர்?

"தவறு. அதற்கும் இதற்கும் ஒரு சம்பந்தமும் இல்லை; அது வேறு, இது வேறு. அதே நேரத்தில் - ஹைட்ரசில் வந்தவர்களுக்கு ஹிரண்யாவோ, ஹிரண்யா கண்டவர்களுக்கு ஹைட்ரசிலோ ஏற்படக் கூடாது என்பதும் இல்லை".

ஒருமுறை ஹைட்ரசில் வந்த நபருக்கு மீண்டும் அதுபோல் வர வாய்ப்பு உண்டா?

"இல்லை. அப்படி வரவே வராது".

— ஆர். மகேஷ்

# 'சாக்லேட்' டாக்டர். ஜெ. விஸ்வநாத்

சென்னை நுங்கம்பாக்கம் ஜம்புலிங்கம் தெரு எட்டாம் எண் வீடு. வீட்டின் வராந்தாவிலும் காம்பவுண்ட் சுவரை ஒட்டியும் நிறையப் பெண்மணிகள் தத்தமது இடுப்பு, தோள், கைகளில் குழந்தைகளுடன் கவலை தோய்ந்த முகத்தில் காத்திருக்க -உள் அறையில் இருந்து வருபவர்களின் முகத்தில் மகிழ்ச்சியான திருப்தியும் குழந்தைகளின் கைகளில் சாக்லேட்டும் நிறைந்திருந்தன.

இது தினசரி நடக்கும் காட்சி. காலை 9 மணிக்குத் தொடங்கும் சிகிச்சையை மாலை 4 மணி வரை இடைவிடாமல் செய்து கொண்டிருப்பவர் டாக்டர் ஜெ. விஸ்வநாத்.

சென்னை நகரம் மட்டுமில்லை. வெளியூர்களில் இருந்தும் ஏன் வெளி நாட்டில் இருந்தும் தங்கள் குழந்தைகளை அழைத்து வந்து நோயைப் பூரண குணப்படுத்திக் கொண்டு செல்கின்றனர்.

பிரபல சினிமா நடிகர்களின், தொழில் நுட்பக் கலைஞர்களின், அரசாங்க காவல்துறை அதிகாரிகளின் - தொழிலதிபர்களின் குழந்தைகளுக்கும் வைத்தியம் பார்க்கும் டாக்டர் ஜெ. விஸ்வநாத் ஏழை எளிய மக்களின் குழந்தைகளையும் தன் குழந்தைகளாகவே நினைத்துச் சிகிச்சையளிக்கிறவர்.

காத்திருக்கும் அறை முழுக்க குழந்தைகளை மகிழ்விக்கிற கார்ட்டூன் பொம்மைகள், கேலிச்சித்திரங்கள், குழந்தைகளின் அழகிய படங்கள்.

வரவேற்பறையில் அமர்ந்து - வரும் தாய்மார்களுடன் பேசி வரிசைப்படி அனுப்பி, மருத்துவ முறைகளைக் கடைப்பிடிப்பது பற்றிச் சொல்லிக் கொண்டிருந்தவர் திருமதி. ஜெ. விஸ்வநாத். இவரைப் பார்த்துப் பேசியதுமே பாதி நோய் குணமாகி விட்டதாய் உணர்கிறார்கள் தாய்மார்கள்.

நம்மைப் பார்த்ததும் கை குலுக்கினார். "உட்காருங்கள்" சற்று உரத்த குரல். சிநேக பாவம்.

'கவனக் குறைவுதான் குழந்தைகளுக்கு நோய்கள் வர முக்கிய காரணம். கூட்டுக் குடும்பங்கள் உள்ள வீட்டில் வளரும் குழந்தைகளுக்கு நோய்க் கிருமிகள் சீக்கிரம் தொற்றிக் கொள்கின்றன. குடிநீர் சுத்தமின்மை, பாத்ரும் - கழிப்பிடங்கள் பராமரிப்பு சரியின்மை, அருகில் இருக்கும் சாக்கடைகளில் நீர் தேங்கி கொசு உற்பத்தியாவது, பன்றி - நாய் - பூனைகளாலும் நோய் சீக்கிரம் குழந்தைகளைத் தாக்கும். கொஞ்சம் கவனமாக இருந்தால் குழந்தைகளை நோயே தாக்காது" என்றார்.

*"சில குழந்தைகள் வாய் ஓயாமல் அழுது கொண்டே இருக்கிறார்களே".*

"வயிற்று வலி, காது வலி, பூச்சிக்கடி, தலைவலி, பிடிவாத குணம், சுற்றுப்புறம் பிடிக்காமல் போரடிப்பது, ஈரமாகி விட்ட ஜட்டி, தலையில் பேன் இப்படி எந்தக் காரணத்தினாலும் இருக்கலாம். ஆனால் பலர் "குழந்தைக்கு 'உரம்' விழுந்து விட்டது அதனால்தான் இந்த இடைவிடாத அழுகை" என்பார்கள். இது தேவை இல்லாத பயம். குழந்தையைக் கவனமாகக் கையாள வேண்டுமே என்பதற்காக உருவான கட்டுக்கதைதான் இந்த 'உரம்' விழும் சமாசாரம்.

*"குழந்தைகளுக்கு அடிக்கடி சளி பிடித்துக் கொள்கிறதே?"*

"நோய் எதிர்ப்பு சக்தி குழந்தைகளுக்கு ரொம்பக் குறைவு. முதல் ஆறு, ஏழு மாதங்களில் குழந்தை குப்புறப்படுத்துக் கொள்ள விரும்பும். அந்தச் சமயங்களில் குழந்தை புரையேறாமல் பார்த்துக் கொள்ள வேண்டியது அவசியம். படுத்தபடி தாய்ப்பாலோ, புட்டிப்பாலோ தரக் கூடாது. அலுவலகம் போகும் அவசரத்தில் தலையணை மீது புட்டியை வைத்து விட்டு தங்கள்



பணிகளை கவனிக்கக் கூடாது. புரையேறி விடும். பால்புட்டியை நேராக வைத்துத் தர வேண்டும். புட்டியை வெந்நீரில் நன்கு சுத்தம் செய்ய வேண்டும்.

குளிர் காற்றில் நிறைய நேரம் நிற்பது, அடிக்கடி எண்ணெய் தேய்த்துக் குளிப்பாட்டி விடுவது, அப்போது மூக்கிலும் காதிலும் எண்ணெய் விடுவது, சாம்பிராணிப் புகை இப்படி பல காரணங்களால் மார்ச்சளி உண்டாகலாம்.

சளியை எடுக்கிறேன் என்று பாட்டிமார்கள் வாயில் வைத்து ஊதுவது மிகத் தவறான பழக்கம். குழந்தை சிவப்பாக வேண்டும் என்று மிகச் சூடான வெந்நீரில் குளிப்பாட்டுவதும் தவறு.

அடிக்கடி குழந்தைகளை (முக்கியமாக உதட்டுப் பகுதியில்) முத்தமிடுவது தவறான ஒன்று. முத்தமிடுவதாலும் குழந்தைக்கு மார்ச்சளி உண்டாகலாம்.

குழந்தைக்கு ஆறு மாதத்திலிருந்து இரண்டு வருடங்கள் வரை மார்ச்சளி தோன்றும் வாய்ப்பு அதிகம்.

சில குழந்தைகளுக்கு ஐஸ்கிரீம் சாப்பிட்டால் அலர்ஜி ஏற்படும். உடனே சளி பிடித்துக் கொள்ளும். ஆனால் பெரும்பான்மையான குழந்தைகளுக்கு இப்படி ஏற்படுவதில்லை. ஐஸ்கிரீம் வாங்கிக் கொடுப்பதில் தவறில்லை. ஏற்கெனவே ஜலதோஷம் பிடித்திருந்தால் அப்போது ஐஸ்கிரீம் கொடுப்பதைத் தவிர்ப்பது நல்லது.''

குழந்தை மருத்துவத்தில் 25 வருட அனுபவம் பெற்ற டாக்டர் ஜெ. விஸ்வநாத்தின் ஒரே மகன் டாக்டர் படிப்பை முடித்து பயிற்சி முறை டாக்டராகப் பணியாற்றுகிறார்.

'சாக்லேட் டாக்டர்' என்று அழைக்கப்படும் டாக்டர் ஜெ. விஸ்வநாத் பிரபல மருத்துவமனைகளில் அனுமதிக்கப்பட்டிருக்கும் உள் நோயாளிகளையும் கவனிக்கிறவார். காலை 5.30 மணியிலிருந்து இரவு 10.30 மணி வரை குழந்தை நலத்திற்கு இடைவிடாமல் உழைக்கிறவார்.

குழந்தைகளோடு குழந்தையாய்ப் பழகும் டாக்டர் ஜெ. விஸ்வநாத்தின் பணி மேலும் பரவி - நோயற்ற குழந்தைகளை உலகம் பெற - வாழ்த்தி, இறைவனைப் பிரார்த்தித்து - விடை பெற்றோம்.

## அதிக ஆயுளுக்குப் புலால் உணவு அவசியமில்லை

புலால் உணவு உண்பவர்கள் தாம் அதிக நாள் வாழ முடியும் என மேலை நாட்டவர் பலர் கருதுகிறார்கள். புகழ் பெற்ற எழுத்தாளர் ஜார்ஜ் பெர்னார்ட் ஷா புலால் உணவு உண்ணாதவர் தான்.

"நான் இறந்தால் நான் புலால் உணவுக்கெனக் கொல்ல விரும்பாத ஆடு மாடுகள், கோழிகள், வாத்துகள் ஆகியவையே என் சவ ஊர்வலத்தில் கலந்து கொள்ளட்டும். மாமிச உணவை உண்ணும் மனிதர்கள் யாரும் என் இறுதி ஊர்வலத்தில் கலந்து கொள்ள வேண்டாம்" என்று ஒருமுறை கூறிய பெர்னார்ட் ஷா இறுதி நாள் வரையில் சைவ உணவுக்காரராகவே வாழ்ந்தார். மிகவும் ஆரோக்கியமாக வாழ்ந்த அவர் தமது 93ஆம் வயதில்தான் இறந்தார்.

### ஆஸ்துமா

ஆஸ்துமா நோயாளிக்கு மூச்சு விடும்பொழுது அடிக்கடி இழுப்பு வரும். அந்தச் சமயங்களில் நன்கு பழுத்த வாழைப்பழம் ஒன்றினை நெருப்பு அனலில் வாட்டி, அதை மிளகுத் தூளில் தொட்டுக் கொண்டு சாப்பிடச் செய்தால் ஆஸ்துமா இழுப்பு உடனே நின்று விடும்.



## கஞ்சியும் கண்ணீரும்

இல்லத்தரசிகளே! நீங்கள் சமைக்கும்பொழுது அளவான நீரைக் கொண்டு சமைக்கத் தெரிந்து கொள்ள வேண்டும். நீர் அதிகம் இருந்து கஞ்சியை வடிக்க நேர்ந்தால், உடல் நலத்தை இழந்து விட்டுக் கண்ணீர் வடிக்கவும் நேரும். சமைப்பதற்குப் பயன்படுத்தும் நீரின் அளவு அரிசி வேகவும், சோற்றிலேயே உறிஞ்சப்படவும் போதுமான அளவிலேயே இருக்க வேண்டும். கஞ்சியை வடித்தால் மதிப்புமிக்க வைட்டமின், மற்றும் பல சத்துகளை அதில் இழந்துவிட்டு வெறும் சக்கையைத்தான் உண்ண நேர்கிறது. அதனால் உடலுக்கு என்ன பயன்? சிந்தியுங்கள்.

## வயிற்று வலியா?

வயிறு வலிக்கும் நேரத்தில் ஒரு பிடி வெங்காயத்தை எடுத்து நன்றாக மென்று தின்று விட்டு மோர் குடிக்க வேண்டும். வயிற்று வலி நீங்கி விடும்.

— சங்கரி சண்முகம்

## உடல் பருமன்

உடல் பருமனுக்கு முக்கிய காரணம் உணவே. உணவில் இருக்கும் கொழுப்புச் சத்து உடல் முழுவதும் பரவி ஆண்களுக்கு வயிற்றின் மேற் பகுதியிலும் பெண்களுக்கு வயிற்றின் கீழ்ப் பகுதியிலும் தங்கிவிடும்.

உடல் பருமன் அதிகரிப்பதால் இருதயம், தமனி நோய், அதிக ரத்த அழுத்தம், நீரிழிவு நோய், மூட்டுகளில் வலி, சுவாசம் சம்பந்தப்பட்ட நோய், பித்த நீர்ப்பையில் கோளாறுகள், மனச் சோர்வு, மயக்கம் போன்ற பிரச்னைகள் ஏற்படும்.

உயரத்திற்கு ஏற்பத்தான் உடல் எடையும் இருக்கவேண்டும்.

உடல் பருமனைக் குறைக்க சிறந்த வழி: முறையான உடற்பயிற்சியே!

## மூல நோய்

மூல நோய் தோன்ற முக்கிய காரணம் மலச்சிக்கல்தான். நார்ச் சத்து குறைந்த உணவுகளையும், கார உணவு மாமிச உணவு சாப்பிடுவதும் மலச்சிக்கல் தோன்ற முக்கிய காரணம்.

## கொய்யா

ஜீரண சக்தியினை அதிகரித்து மலச்சிக்கலைத் தீர்த்து, வாய்ப்புண்ணை அகற்றும் சக்தி கொய்யாப் பழத்திற்கு உண்டு.